அனைத்திந்திய நூல்வரிசை

# உயிரற்ற நிலா

உபேந்திர கிஷோர் தாஸ்

தமிழாக்கம் :
திருமதி பானுபந்த்



நேஷனல் புக் டிரஸ்ட், இந்தியா

# முகவுரை

இந்தியாவின் பிற மாநில மொழிகளில் போலவே, ஒரியா மொழியிலும் நாவல் ஒரு புதுவிதப் படைப்பாக கடந்த நூற்றாண்டின் கடைசி 30 வருடங்களில் உருப் பெற்றது. ஆங்கில நாவல்களைத் தழுவியவையாய் இருந்தன, இந்தப் புதிய கற்பனைகள். உமேஷ்சந்திர ஸர்க்காரால் எழுதப்பட்டு 1888ல் பிரசுரமான *பத்மமாலி*, ஒரியா மொழியின் முதல் முழு நாவலாகக் கருதப்படுகிறது. இதற்குப் பத்து வருடங்களுக்கு முன் ராம்சங்கர் ராயால் எழுதப்பட்ட *ஸௌதாமினி* என்ற சரித்திர நவீனம் கொஞ்ச நாள்வரை ஒரு தற்காலிகமான மாதாந்திர சஞ்சிகையில் தொடர் கதையாய் வந்து கொண்டிருந்தது. ஆனால் அது புத்தகமாய் வெளியாகவேயில்லை — ஒருவேளை முற்றுப் பெறாததனால் இருக்கலாம். அதனால், ஒரியா மொழியில் முதல் நாவலாசிரியராகும் பெருமை உமேஷ் சந்திரரையே சாருகிறது.

பத்மமாலி ஒரு சரித்திர நாவல், நீலகிரி என்ற ஒரியா பழங்குடி ஒன்றில் 1835ல் நடந்த ஒரு உண்மையான நிகழ்ச்சியை அடிப்படையாய்க் கொண்டு எழுதப்பட்ட கதை இது. சரித்திரப் பிரசித்தி பெற்ற ஒரு நிகழ்ச்சியையோ, சரித்திரப் புகழ் கொண்ட எந்த தனி நபரைப் பற்றியோ இந்தக் கதை எழுதப் படவில்லை. அடுத்தடுத்த இரு நாடுகளில் கிளம்பிய கலகம், போர், பெண் கடத்தல் முதலிய மயிர்க் கூச்செறிய வைக்கும் நிகழ்ச்சிகளை இந்தக் கதை விவரிக்கிறது. இந்த நூல் அக்காலத்து ஒரியா மக்களின் வாழ்க்கையை உண்மையாய்ச் சித்தரிக்கிறது என்பதில் ஐயமில்லை. ஒரியாவில் ஆங்கில அரசு நிலை பெற்ற 30 வருடங்களுக்குள் அந்நாட்டில் வழங்கிய சமூக வாழ்க்கையை விவரிக்கிறது இந்தக் கதை. அக்காலத்தில்

அந்நாட்டில் நிலவிய அக்கிரமங்களும், திருட்டும், நீதி முறையற்ற சூழ்நிலையும், கலகமும் பூசலும் தெளிவாய் விவரிக்கப்படுகின்றன. ஒரியா நாவல் இலக்கியத்தின் ஆரம்ப காலத்தில் இது எழுதப்பட்டது என்றாலும் இதன் நடை சரளமாகவும், பாராட்டுக்குரியதாகவும் இருக்கிறது. இன்றும் இது விரும்பிப் படிக்கப்படுகிறது.

அடுத்து, ராம்சங்கர் என்பவர் நாவலாசிரியராக விளங்கினார். *விவாசினி* என்ற அவருடைய கதை (1892-93) மராட்டியரால் ஆளப்பட்ட ஒரியாவில் நிகழ்ந்த அநீதி, அக்கிரமங்கள், பஞ்சம் முதலியவைகளை அடிப்படையாகக் கொண்ட ஒரு காதல் கதை. இப்படி சரித்திரத்தையும் கற்பனையையும் இணைத்து எழுதும் பாணி பழக்கத்திலிருக்கும்பொழுது இலக்கிய யுக புருஷர் ஃபகீர் மோஹன் தோன்றினார். அவரால் எழுதப்பட்ட *சமான் ஆட் குண்ட* (முதல் பிரசுரம் 1898), *லச்மா* (1903), *மாமூ* (1913), *பிராயசித்த* (1915) முதலிய ஒவ்வொரு நாவலும் ஒரியா இலக்கியத்தில் குறிப்பிடத்தக்கனவாய்க் கருதப்படுகின்றன. சரித்திர நூலான லச்மாவைத் தவிர்த்து பிற மூன்று நாவல்களிலும் அவர் பேராசை, அகங்காரம் முதலிய மனித குணங்களின் உண்மையான உருவத்தையும், ஆழத்தையும் சித்திரித்துள்ளார் என்பதுடன், சமூகத்திலுள்ள சாதாரண ஆண்-பெண்களின் வாழ்க்கை யதார்த்தங்களையும் தெளிவாய் எடுத்துக் காட்டியுள்ளார். ஃபகீர் மோஹனின் நாவல்களின் மூலம் முதன் முதலாக சமூகத்தின் சாதாரண மனிதனும் அவனுடைய ஆசாபாசங்களும் இலக்கியத்தில் உயரிய இடம் பெற்றன. ஃபகீர் மோஹனின் எழுத்து நடையும், வருணனைகளும் எளிமையாகவும் கவர்ச்சிகரமாயும் இருக்கின்றன. நகைச்சுவையைத் திறமையுடன் கையாண்டு, அதற்கேற்றவாறு பாத்திரங்களை உருவாக்கி நடமாட வைத்து, ஒரியா இலக்கியத்தில் ஒரு புதிய எழுத்துப் பாணியைப் புகுத்தி வளர்த்த நிகரற்ற எழுத்தாளராய் அவர் மதிக்கப்படுகிறார்.

இவருடைய வழியைப் பாராட்டி, பின்பற்றிய சமகால ஆசிரியர்கள் பலர் இருந்தனர். ஆனால், அவருடைய மறைவிற்குப் பிறகு ஒரியா இலக்கியத்தில் ஒரு விதத்

தளர்ச்சி உண்டாகி விட்டது. இந்த தளர்ச்சியை அகற்றி, ஒரியா இலக்கியத்தை மக்களுக்கு உகந்ததாக்கப் பெரிதும் முயன்றார், *முகுர்* பத்திரிகையின் ஆசிரியர் பிரஜசுந்தர் தாஸ் என்பவர். அவர் மூலமாய் *முகுர் உபந்யாஸ் கிரந்தமாலா* வெளிவர ஆரம்பித்தது. *ஸஹகார்* பத்திரிகையின் ஆசிரியருடைய முயற்சியால் *ஆனந்த லஹரி உபந்யாஸ் மாலா* என்ற தொகுப்பும், நாவல்கள் மட்டுமே அடங்கிய *பாரதி* என்ற மாத சஞ்சிகையும் பிரசுரிக்கப்பட்டன. இவ்விரு ஸ்தாபனங்களின் பிரசுர ஏற்பாடுகளால் பல ஒரியா எழுத்தாளர்களின் கதைகள் அச்சாகி, வெளிவருதல் சாத்தியமாயிற்று.

ஃபகீர் மோஹனுக்குப் பிறகு வந்த நாவலாசிரியர்களுள் சிந்தாமணி மஹந்தி, குந்தலா குமாரி ஸாபத் என்ற இருவர் பெருமை பெற்றுள்ளனர். சிந்தாமணி, சமூகக் கதைகளை அடிப்படையாகக் கொண்ட நாவல்கள் எழுதினார். இவைகளில் கதையே முக்கியமாயிருக்கிறது. பாத்திரங்களின் மன இயல்புகளையும் மாறுபாடுகளையும் பற்றிய ஆராய்ச்சி இந்த நாவல்களில் அரிது என்றே சொல்ல வேண்டும். ஐந்து நாவல்களை எழுதியுள்ள குந்தலா குமாரி பெண்களின் இயல்புகளைச் சித்தரிப்பதில் தனித் திறமையுள்ளவராக விளங்குகிறார். தன் பாத்திரங்களை முரண்பாடுள்ளவர்களாகவும், முற்போக்கானவர்களாகவும், கூடவே மரபைப் போற்றுகிறவர்களாகவும் சித்திரித்துள்ளார்.

இச்சமயம் சரித்திர கதைகளை ஆதாரமாகக் கொண்ட பல நாவல்கள் உருவாயின. இப்படிப்பட்ட நூல்களை வெளியிட்டவர்களின் பட்டியலில் சிந்தாமணி ஆசார்ய, தாரிணி சரண் ரத், ராமசந்திர ஆசார்ய, ஸ்ரீதர் மஹாபாத்ர முதலியவர்கள் அடங்குவர். முரண்பாடுகளற்ற, ஜனரஞ்சகமான நாவல்களும் சில வெளிவந்தன. நந்தகிஷோர் பல் எழுதிய *கனகலதாவும்* (1925), வைப்லவசரண்தாஸின் *மோனே மோனே* யும் (1926), உபேந்திர கிஷோரின் *மோலா ஜோன்ஹோ* **(உயிரற்ற நிலா 1928)** வும் பிரசித்தமானவை. ஒரியா இலக்கியத்தில் மனோ தத்துவத்தை ஆராயும் முதல் படைப்பாக *மோனே மோனே*

கருதப்படுகிறது. தொடர்ந்து, இரண்டாம் உலகப்போர் ஆரம்பிக்கும் முன்பிருந்து சுதந்திரப் போருக்கு அப்புறம் வரை உள்ள இடைக்காலத்தில் கானுசரண் மஹந்தி, கோபிநாத் மஹந்தி, காலிந்திசரண் புாணிகிரஹி, கோதாவ ரிஷ் மஹாபாத்ர, ராஜ்கிஷோர் பட்நாயக், நித்யாநந்த மஹாபாத்ர, கமலாகாந்த் தாஸ், சக்ரதர் மஹாபாத்ர முதலிய பல நாவலாசிரியர்கள் தங்கள் எழுத்தால் ஒரியா இலக்கியத் தரத்தை உயர்த்தியதுடன், தங்களுக்கும் புக ழும் பெருமையும் தேடிக் கொண்டனர்.

பிற நாட்டின் நாவல்களை ஆதாரமாகக் கொண்டு அந்தக் கதைகளை உத்கல் சூழ்நிலைக்குத் தகுந்தவாறு மாற்றி அமைப்பதில் கோதாவரிஷ் மிச்ர, கோதாவரீஷ் மஹாபாத்ர என்ற இரு எழுத்தாளர்கள் முன்னோடிகளாய் அமைந்தனர். காலிந்திசரணின் *மாடிரோ மோனிஷோ* (மண் பொம்மைகள்) ஒரியா இலக்கியத்தில் மட்டுமின்றி நம் நாட்டு பிற மொழி இலக்கியங்களிலும் பிரசித்தி பெற்றுள்ளது. யதார்த்தமும், இலட்சியமும் சமமாய் இழைந்திருக்கும் இந்த நாவல் ஒரு உன்னதமான படைப் பாக கருதப்படுகிறது. தியாகம், அடக்கம், பொறுமை, தாராளம், அகிம்சை முதலிய குணங்களின் இருப்பிடமா கச் சித்திரிக்கப்பட்டள்ள விவசாயி பரஜுவின் வாழ்க்கைச் சித்திரம் மிகவும் மேன்மையானது. தீயவருடைய சதியில் அகப்பட்டுக் கொள்ளும் ஒரு ஏழை விவசாயி தனது வாழ்க்கையில் அடிக்கும் புயலை - சங்கடங்களை தன் தியாக மனப்பான்மையால் பொறுத்துச் சமாளித்து முன் னேறுவதை விவரிக்கிறது இந்நாவல்.

ராஜகிஷோர் பட்நாயக்கின் நாவல்களில் மனோதத்துவ ஆராய்ச்சியைவிட, அன்பும், தன் உணர்ச்சிகளிலேயே மூழ்கியிருக்கும் அனுபவமும் அதிகமாய்ப் புலப்படுகின் றன. இதய மர்மங்களின் சோதனை இவருடைய படைப்பு களின் முக்கிய அம்சம். நித்யானந்த மஹாபாத்ரவின் நூல்களிலும் மனோதத்துவ ஆராய்ச்சியும், உணர்ச்சி வேகத்தால் ஏற்படும் பலாபலன்களின் வர்ணனையும், கற்பனையும், ஒன்றாய்ச் சேர்ந்து இழைகின்றன. சமகால அரசியல் உணர்வு, அகிம்சாபூர்வமான இன்ப்பெருமை

அதன் விளைவுகள் - இவற்றைப் பிரதிபலிக்கும் நாவல்களை எழுதியவருள் ஹரேகிருஷ்ண மஹதாபும், ராம் பிரசாத் சிங்கும் முக்கியமானவர்கள்.

தற்கால ஒரியா நாவலாசிரியர்களுள் கானுசரணைவிட அதிக நூல்களை வெளியிட்டவர்களோ, மக்களின் ஆத ரவை அதிகம் பெற்றவர்களோ, வேறு எவரும் இல்லை. கடந்த ஐம்பது வருடங்களில் ஐம்பதிற்கும் மேற்பட்ட நாவல்களைப் பிரசுரித்துள்ளார். அவருடைய *கா* என்னும் நாவலுக்கு சாகித்திய அகாதமியின் பரிசு கிட்டியுள்ளது அவருடைய படைப்புகள் காதல் கதைகள்; வெகு திறமை யுடன் பெண் மனதையும், அதனுள் நடக்கும் போராட்டத் தையும் சித்திரித்துள்ளார். அவருடைய எழுத்து நடை எளிமையும், மென்மையும் உணர்ச்சி உள்ளதாயுமிருக்கி றது. வர்ணனைப் பாணியிலும் பலவித புதுமைகளைப் புகுத்தியுள்ளார்.

இவருடைய தம்பி கோபிநாத், ஒரியா நாவல் இலக்கிய உலகில் விசேஷமாய்க் கருதப்படுகிறார். முக்கியமாய் பழங்குடிகளின் ஜீவனைச் சித்திரிப்பதில் கைதேர்ந்தவர். அவருடைய *அம்ருத் ஸந்தான்* என்ற படைப்பு சாகித்திய அகாதமியின் பரிசு பெற்று அவருக்கும் ஒரியா நாவல் இலக்கியத்திற்கும் பெருமையைத் தேடித் தந்துள்ளது. கதை முக்கியமில்லை அவருடைய நாவல்களில். ஆனால் நுணுக்கமான மனோதத்துவ ஆராய்ச்சியிலும், ஒவ்வொரு சம்பவத்தையும் அலசிப் பார்ப்பதிலும், சூழ்நிலையை உயிர்க்களையுடன் சித்திரிப்பதிலும் அவருடைய நாவல் கள் ஈடிணையற்று விளங்குவன. *பர்ஜா, தாதீபூடா, அம்ருத் ஸந்தான்* முதலிய நாவல்களில் வனங்களின் இயற்கை அழகையும் பழங்குடி மக்களின் எளிமையான, அழகான, சிலிர்ப்பளிக்கும் வாழ்க்கையையும், ஆசிரியர் திறமையுடன் விவரித்திருக்கிறார். அவருடைய எழுத்து நடையும், வர்ணனைகளும் வித்தியாசமாயும், விசேஷமாக வும் இருக்கின்றன. எளிமை, புதுமை, கவிநயம், வேகம் ஆகிய யாவும் மிளிருகிற வசன நடை அவருடையது. அவருடைய *மாடி மடால்* நாவலுக்கு பாரதீய ஞானபீடத் தின் சன்மானமும் கிட்டியுள்ளது.

இரண்டு உலகப் போர்களுக்கு இடைக்காலத்தில் எழுதப்பட்ட நாவல்களில் பெரும்பாலும் சமூகரீதியான மாறுதல்களுக்கு முக்கியத்துவம் அளிக்கப்பட்டது. மிக சமீபத்திய நாவல்களில் இலட்சிய நோக்கைவிட யதார்த்த நோக்கு அதிக இடம் பெறுகிறது. ஃபகீர் மோஹனின் காலத்தில் பழமையான நாகரீகத்தையும், பண்பையும் எதிர்க்கும் குரல் எழும்பியது என்றாலும், அது ஜாதி, பரம்பரை பேதங்களை ஒழிக்க எந்தவிதத் தெளிவான வழியையும் காட்டவில்லை. ஆனால் சமகால நாவல்களில் எல்லாப் பாத்திரங்களும், நிலைபெற்றுள்ள சமூக அமைப்பின் எதிரிகளாக இருக்கிறார்கள். நிறைவேறாத காதலின் கொடிய விளைவுகளையும், தவறிழைக்கும் குற்றவாளியையும் அனுதாபத்துடனும், தர்க்க ரீதியாகவும் அறிமுகப்படுத்துவதில் ஆவலுடையவர்களாயிருக்கின்றனர் த்ற்கால நாவலாசிரியர்கள். மேலும், ஜாதி, சமூக நியமங்கள் மற்றும் பொருளாதார ரீதியான சீர்குலைவுகளின் சித்திரத்தையும், அமைப்புகளுக்கெதிரான விமரிசனத்தையும் இந்நாவல்களில் காணலாம். அறிவொற்றலும், பரந்த நோக்கும் கொண்ட, வாழ்க்கையின் உயர்வை வற்புறுத்தும் நாவல்களையும், வெளியிட்டனர் பல எழுத்தாளர்கள்.

தற்கால நாவலாசிரியருள் ஞானேந்திர வர்மா, சுரேந்திர மஹந்தி, வஸந்த குமாரி பட்நாயக், விபூதி பட்நாயக், சாந்தனுகுமார் ஆசார்ய முதலியவர்கள் பாராட்டுக்குரியவர்கள்.

உபேந்திர கிஷோர் தாஸ் 1901இல் பண்புள்ள ஜமீன்தார் குடும்பத்தில் பிறந்தார். அவரடைய இளமைப் பருவம் சீரும் சிறப்புமாகக் கழிந்தது. பி.ஏ. வகுப்பிலிருக்கும் பொழுது இவர் சுதந்திரப் போராட்டத்திற்குத் தன் ஆதரவை வெளியிட்டார். 1921லிருந்து 1931 வரை அவர் கிராம முன்னேற்றப் பணிகளுக்குத் தன்னை அர்ப்பணித்துக் கொண்டார். பிறகு மெள்ள மெள்ள இதில் உற்சாகம் குறையவே அவர் கிராமத்தை விட்டுவிட்டு பட்டணத்தில் வாழ ஆரம்பித்தார். வாழ்நாளெல்லாம் தம் கனவுகளை நினைவாக்கிக் கொள்ள கவிதை மூலமும் பிற கலைகள்

மூலமாகவும் உழன்றார். வர்ணங்களும் தூரிகையும், எழுத்தும், மலரும், பட்சிகளும், சிற்பக் கலையும் அவருக்குத் துணையாயிருந்தன. அவருடைய இயற்கையான கலாமோகத்தின் காரணமாகத்தான் மக்களுக்குத் தொண்டு செய்யும் உயர் பாதையிலிருந்து விலகிவிட்டார் போலும். மலர்களும் பறவை பராமரிப்பும், சித்திர - சிற்பப் படைப்பும், கதை, கவிதை, இசை, இலக்கிய ரசனையும் அவருடைய கலை ஆர்வத்திற்கு உரமிட்டன. இதற்காகத் தன் செல்வத்தை ஒருவிதத் தயக்கமுமின்றி செலவிட்டார். 1972ல் இவர் மரணமடைந்தார்.

சித்திரம் தீட்டுவதிலும், கவிதை புனைவதிலும் இவருக்கு இளம் வயதிலிருந்தே ஈடுபாடு இருந்தது. அவருடைய தாயாரால் வெளியிடப்பட்ட *பரிசாரிகா* என்ற பத்திரிகையில் இவருடைய முதல் கவிதை பிரசுரமாயிற்று. பிறகு வாலிபப் பருவத்தில் கதை எழுதுவதில் இன்பங் கண்டார். அவருடைய குடும்பத்தாரால் பிரசுரிக்கப்பட்ட *வாருணி* என்ற பத்திரிகையில் அவருடைய நாவல் *உயிரற்ற நிலா* தொடர் கதையாய் பிரசுரமாயிற்று. இந்தக் கதைகளின் வாயிலாகத் திடீரென்று அவர் வாசகர்களிடையில் அறிமுகமானார். பிறகு பல கதைகளை எழுதினார் — கூடவே குழந்தை இலக்கியத்திலும் தன் மனதைச் செலுத்தினார். *அலிபாபா* (1932), அலிஸ் இன் வண்டர் லாண்டைத் தழுவிய *காஉரி தேஷேதாரே தெளரி*, இவை இரண்டும் பாராட்டுக்குரியவை.

முதுமையிலும் இவர் பெருமை அளிக்கும் இலக்கியத் தொண்டில் ஈடுபட்டிருந்தார். மேகதூதம் கீத கோவிந்தம், ஸ்ரீமத் பகவத் கீதை ஆகிய நூல்களின் மொழிபெயர்ப்பை ஏற்று முடித்தார். *பிராச்ய வித்யா சமிதி* என்ற ஒரு பாராட்டுக்குரிய காரியத்தை நிறுவுவதில் இவர் பலருடைய ஒத்துழைப்புடன் ஈடுபட்டார். விஷ்ணு புராணத்தையும், பாகவதத்தையும் வசன நடைப்படுத்தும் பெருந்தொண்டைச்செய்து முடித்தார். அவருடைய மறைவிற்குப் பிறகு இன்று வரை இவ்விரண்டு இலக்கியங்களும் பிரசுரமாகாமலே இருக்கின்றன.

ஓவியனாகவும் திகழ்ந்த அவருடைய சித்திரங்களை

விமரிசகர்களும், கலைப்பிரியர்களும் ஒரு முகமாய் போற்றியுள்ளனர். அவையுள் லக்ஷ்மி, பள்ளிவது முதலியவை பாராட்டிற்குரியவை. ஓவியக் கலை மூலமாகவும், எழுத்து மூலமாகவும் அழகை சிருஷ்டிப்பதே இந்தக் கலைஞரின் உள்ளார்ந்த ஆர்வம் என்று சொல்லத் தேவையில்லை.

முதுமையில் அவர் இதை எவ்வித ஒளிவு மறைவுமின்றி, அங்கீகரித்துள்ளார். ''இன்று என் மூப்பு காலத்தில் நான் குருடனாகிக் கொண்டு வருகிறேன். இனிமேல் நான் ஒருபொழுதும் வெளி உலகின் அழகை, வசீகரத்தைக் காணமுடியாதவனாகி விடலாம். ஆனால் என்னுள் அந்த சௌந்தரிய லட்சுமியின் குரல் இன்றும் கேட்டுக் கொண்டிருக்கிறது. இரவின் நட்சத்திரம் பதித்த ஆகாயம் அவளுடைய உடை; அடர்ந்த வனங்கள் அவளுடைய கலைந்த கூந்தல்; சாயங்கால வேளையின் வசீகரமான நிறம் அவளுடைய காலை அலங்கரிக்கும் செம்பஞ்சுக் குழம்பு. உலகத்தின் அழகெல்லாம் ஒன்று சேர்ந்து தினமும் அவளுடைய காலடியில் ஒழுகுகிறது. இன்று வரையிலும் கூட என்னால் அந்த அழகை முழுதும் கண்டு அனுபவிக்க முடியவில்லை. இந்தத் தவம் ஒரு நாளில் முடியக் கூடியதல்ல என்று எனக்குப் புரிகிறது. இது அனேக ஜன்மங்கள் எடுத்து முடிக்க வேண்டிய தவம். இந்த அபூர்வமான தெய்வீகமான கலையைப் பற்றி என்னால் இன்று வரையிலும் ஒன்றுமே அறிய முடியவில்லை என்று என் மனம் அறிவுறுத்துகிறது.''

''உயிரற்ற நிலா'' என்ற ஒரு சிறு நாவலை எழுதி இலக்கிய உலகில் அமரராகிவிட்டார் இந்த எழுத்தாளர். இதன் கதைச் சுருக்கமானது.

ஒரு சிறிய கிராமத்தில் வசித்த நடுத்தர பிராமண குடும்பத்தின் பெண்ணான சதீ அல்லது சத்யபாமாவை, நரஹரி என்ற ஒரு வசீகரமற்ற, வயதான ஜமீன்தாருக்கு இரண்டாம் தாரமாய்க் கல்யாணம் செய்து வைக்கிறார்கள். சிறு வயதிலிருந்து அவளுடன் ஓடி ஆடி வளர்ந்த நாத் என்ற பண்பும் படிப்பும் உள்ள வாலிபன் இந்தக் கல்யாணத்தை எதிர்த்தான். ஆனாலும் கல்யாணம் நடந்தே

றியது. நரஹறரியின் வைப்பாட்டி ஸௌரபியின் காரணமாய் சதியின் தாம்பத்திய வாழ்க்கை நரகமாகிறது. கடைசியில் கிராமத்திலிருந்து வெகு தூரத்திலிருந்த தவளேசுவர் என்ற நதியின் கரையில், சதியை, அவளுடைய கணவனும் ஸௌரபியுமாய் சூழ்ச்சி செய்து, மழைக்கும் புயலுக்கும் நடுவில் தவிக்கவிட்டுத் தங்கள் கிராமத்திற்கு திரும்பிவிடுகின்றனர். அப்படி அவள் தனியாய் கூட்டத்தில் இடிபட்டு நின்றபொழுது அங்கு தன் பிரியநாத் அண்ணனைக் காண்கிறாள். அவளை அவன் அந்த ஜன சமுத்திரத்தினின்றும் மீட்டு அடுத்த நாள் காலை அவளுடைய கணவனிடம் கொண்டு போய்ச் சேர்க்கிறான். ஆனால் இரவை அவள் பாபுருஷனுடன் கழித்தாள் என்ற அபவாதத்தைச் சுமத்தி நரஹரி அவளை ஏற்றுக் கொள்ள மறுத்து விடுகிறான்.

கிராமத்தில் பரவி வந்த காலராவில் சதியின் பெற்றோர் இறந்து விட்ட சோக சமாசாரத்தை சதிக்குச் சொல்லாமலேயே நாத் அவளைக் கட்டக் நகரத்திற்கு அழைத்துப் போக வேண்டிவருகிறது. ஆனால் பட்டணத்தில் வேலை ஏதும் கிடைக்காமல் கஷ்டப்பட வேண்டிவருகிறது. கடைசியில் சதியின் விருப்பப்படி இருவரும் தங்கள் கிராமத்திற்குத் திரும்பி வருகின்றனர். ஆனால் அங்கும் நிம்மதியில்லை. பள்ளிக்கூட வாத்தியார் அகூதியின் கபடமும், கிராமத்தாரின் குறுகிய மனப்பான்மையும், சமூக திரஸ்காரமும் அவர்களை வாழவிடவில்லை. இதை எல்லாம் புரிந்துகொண்டு, தன்னால் மேலும் குற்றமற்ற நாத் அண்ணனுக்கு தலைக் குனிவு ஏற்படலாகாது என்று நிச்சயக்கிறாள் சதீ. கடைசியில் ஒரு நாள், இரவின் இருளில் நாத் அண்ணனுக்குத் தன் கடைசியும் முதலுமான கடிதத்தை எழுதி வைத்து விட்டு வெளியேறி விடுகிறாள்- வாழ்க்கையின் மறு கரையை நோக்கி.

சதியின் சுயசரித்திரம் நாவலின் மூல விஷயமாயிருப்பதால் பிற பாத்திரங்களைப் பற்றி விஸ்தாரமான விவரிப்பை எதிர்பார்க்க முடியாது. ஆனாலும் எழுத்தாளர் சதியின் வாக்கு மூலம் பிற பாத்திரங்களையும் நம் முன் தெளிவாய் வரைந்து காண்பித்துள்ளார். சதியின் பெற்

றோர், அவளுடைய பிரிய நாத் அண்ணா, வயது முதிர்ந்த கணவன் நரஹரி, அவனுடைய வைப்பாட்டி ஸௌரபி, குழந்தை நடோ, பூஜையில் மூழ்கியிருக்கும் மாமியார், விசுவாசமுள்ள பணியாள் சயிதா, துஷ்டனான வாத்தியார் அரூதி முதலிய பாத்திரங்களை உயிரோவியங்களாய் நடமாட விட்டிருக்கிறார்.

கதையின் யதார்த்தமும், பாத்திரங்களின் இயற்கையான வர்ணனையும், நுட்பமான மனோ ஆராய்ச்சியும் எல்லாம் ஒன்று கூடி இந்த நாவலுக்கு ஒரு விசேஷமான அமைப்பை அளித்திருக்கின்றன. கிராமத்து இளம் பெண்ணின் மனதில் கலியாண விஷயமாய் எழும் உணர்ச்சிகளும், தோழிகளின் கேலியும், விளையாட்டுப் பேச்சும், கிராமிய வாழ்க்கையின் இனிமையான அனுபவங்களும், பெற்றோர்களின் அன்பும், மணப்பெண்ணின் மனதில் குழந்தைபால் சுரக்கும் தாயன்பும், அவளுக்கு ஏற்படும் முதல் இரவு அனுபவமும், வசீகரமற்ற, குரூப, குரூர கணவனிடம் அவளுக்கு ஏற்படும் வெறுப்பும், வைராக்கியமும், சமூக எல்லைக்குள் அடங்கிய சூழ்நிலையில் ஒரு யுவதியின் அடக்கமான காதலும், தைரியமும், மனோ பாவமும், ஜமீன்தாரின் அகம்பாவமும், சமூகத் தலைவர்களின் இரக்கமற்ற தீர்ப்பும் கபடமும், இந்தச் சிறிய நாவலுள் எழுத்தாளரின் திறனால் அடங்கியிருக்கின்றன.

எளிய, நடைமுறையில் வழங்கும் கிராமிய பாஷையில் எழுதப்பட்டிருப்பதால் இந்த நாவலில் ஒரு எளிமையும் சுவையும் இருக்கிறது. நடு நடுவில் இதில் வர்ணனைகள் காவிய பாணியிலிருக்கின்றன. நாவலின் தலைப்பும் பொருத்தமாயிருக்கிறது. ''உயிரற்ற நிலா'' பகலில் தோன்றும் ஒளியற்ற, கண்ணுக்குப் புலப்படாத நிலா. முரட்டு யதார்த்தத்தின் தாக்குதலால் வாடி வதங்கிப் போகிற ஒரு வாழ்க்கையை இந்த நாவல் விவரிக்கிறது.

மக்களின் விருப்பத்தை ஒட்டி இந்த நாவல் நாடகமாக நடிக்கப்பட்டது. அதைத் தழுவி ஒரியாவில் திரைப்படமும் உருவாயிருக்கிறது. ஆங்கிலத்திலும், நம் நாட்டின் பிற மொழிகளிலும், இந்த நாவல் வெளிவந்து பரவினால்

இதன் உயர்வு இன்னமும் தெளிவாய்த் தெரியவரும் என்பதில் சந்தேகமில்லை.

ஜானகி வல்லப் மஹந்தி

# உயிரற்ற நிலா

பொறுக்க முடியாத சித்திரை மாத வெப்பத்தை மென்மையாய்த் தடவிச் செல்லும் மழைச் சாரலின் குளுமையைப் போல் நம்முடைய வாழ்க்கையிலும் சில சமயம் சில இனிமையான கணங்கள் தோன்றி அதன் போக்கை அறவே மாற்றி, எங்கேயோ புலனற்ற, அறிவுக்கெட்டாத பாதையில் தள்ளி விடுகின்றன. இவைகளை இனிமையான கணங்கள் என்று ஏன் கூற வேண்டும்? ஒரே ஒரு முறை மனம் திறந்து இனிமையின் ருசியை வாரிக் கொட்டி விட்டு பிறகு வாழ்க்கை முழுவதும் ஏங்க வைக்கும் இக் கணங்களை இனிமையானவை என்று நான் ஒப்புக் கொள்ள முடியாது. அந்தோ! என் பாழடைந்த வாழ்க்கையில் தோன்றிய இந்த அற்ப நேர மகிழ்ச்சியை நான் சரியாய்க் கணித்துப் பார்த்திருந்தால் இன்று இப்படி ஆற்றில் விழுந்து மடிய வேண்டியிருந்திருக்காது.

கண நேர அகம்பாவத்தின் காரணமாக எவ்வளவு பெரிய தவறு நடக்கக்கூடும் என்பதற்கு என் வாழ்வின் ஒவ்வொரு கணமும் சான்று. அதனால் எல்லோர் முன்னிலையிலும் என் வீணான வாழ்க்கையின் உண்மையான கதைகளைப் பேசுவதில் எனக்கு பயம் தோன்றவில்லை. இப்பொழுது இனிமேல் யாரிடம் பயப்பட வேண்டும் நான்? பயப்பட வேண்டிய வேளையில் எனக்கு யாரும் ஆதரவு அளிக்கவில்லை. இப்பொழுது தான் எல்லாம் முடிந்து போய்விட்டதே. இனிமேல் பயந்து என்ன பிரயோசனம்?

எனக்கு என் தந்தை வெகு அருமையாய் சத்யபாமா என்று பெயர் வைத்தார். பொருத்தமற்ற பெயர் என்று தான் சொல்ல வேண்டும். ஏனென்றால் அழகிலோ, குணத்திலோ எனக்கும் அந்தப் பெயருக்கும் எவ்வித சம்பந்தமும் இருப்பதாய்த் தெரியவில்லை. என் பிடிவாதம் தான் என்னை அழித்தது. ஒரே பெண் என்று என் தந்தை என்மேல் பொழிந்த அன்பும், கொடுத்த செல்ல

மும் என் அகங்காரத்தை வளரவிட்டன. பிறர் அதைப் பற்ற பேசி ஏசும் அளவுக்கு என் பிடிவாதமும் கர்வமும் வளர்ந்து வந்ததை என் பெற்றோரும், ஒரே பெண் என்ற குருட்டு அன்பில், கவனித்துத் தடுக்காமல் இருந்து விட்டனர். என் அழிவும் அப்பொழுது ஆரம்பித்து விட்டது. எப்படி என்று சொல்லுகிறேன் கேளுங்கள்.

மத்தியான வெயிலின் வெப்பத்தைத் தணித்தபடி கருமையான மேகக் கூட்டம் மழையின் குளுமையை அறிவிக்கிறது. கிராமப்புறமாய் இருந்த எங்களுடைய மாஞ் சோலையில் காற்று பலமாய் வீசிக் கொண்டிருந்தது. பகல் உணவுக்கப்புறம் என் தாய் கண் அயர்ந்தாள். அந்தக் குளிர்ந்த காற்றில் கொஞ்சம் வெளியே சுற்றி வரலாம் போலிருந்தது எனக்கு. அம்மாவுக்குத் தெரியாமல் அவளுடைய வெற்றிலைச் செல்லத்திலிருந்து இரண்டு சுருள் எடுத்துக் கொண்டு நான் மெல்ல நழுவப் பார்த்தேன். ஆனால் நான் படி இறங்கும் பொழுதே பின்னாலிருந்து 'சதி' என்று ஒரு குரல் அழைத்தது. திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தேன். வெளிப்புறமாயிருந்த அறையில் உட்கார்ந்து கணக்கு எழுதிக் கொண்டிருந்தார் என் தந்தை. நான் மரமாய் உறைந்து போனேன். பயத்தினால் நெஞ்சம் வேகமாய் அடித்துக் கொண்டது. ''இந்த வேளையில் எங்கே புறப்பட்டாய்? கிராமவலம் செய்யவா?'' என்று அசையாமல் நின்ற என்னைப் பார்த்து அவர் கேட்டார். நான் பதில் பேசாமல் நிற்கவே ''உன் அம்மாவைக் கூப்பிடு'' என்று ஆணையிட்டார்.

உள்ளே போய் அம்மாவை எழுப்பி விட்டேன். கண்ணைக் கசக்கியபடி வெளியே வந்தாள். நான் ஜன்னலோரமாய் நின்று அவர்கள் பேசுவதை உற்றுக் கேட்கலானேன். ''சதியை வெளியே போய் வர நீ சொன்னாயா என்ன?'' என்று அப்பா அம்மாவைக் கேட்டார். அம்மா வியப்புடன் ''இல்லையே'' என்றாள். தந்தை தொடர்ந்தார், ''அவள் எப்பவும் வெளியில் சுற்றி வருவது உன் கண்களில் படாவிட்டாலும் கிராமத்தாருக்கு இது தெரிந்த விஷயம் தான். அவளுக்குப் பதினொரு வயதாயிற்றா? நாளைக்கோ நாளன்றைக்கோ கலியாணம் ஆகப்போகிறது. இச்சமயம் அவளை நீ ஏன் இப்படி ஊர் சுற்ற விடுகிறாய், உம்?''.

என்றார்.

யாரையோ தேடுவதுபோல் என் தாயின் கண்கள் நாலு புறமும் துழாவின. நான் அவள் கண்ணில் பட்டிருந்தால், என்னையே குற்றவாளி ஆக்கியிருப்பாள். ஆனால் யாரும் தென்படவில்லையாதலால் அப்பாவையே தாக்கினாள். ''எல்லாம் என் குற்றம் என்று தானே பழி போடுகிறீர்கள்? உங்களுக்குத் தெரிந்தது அவ்வளவுதான். அந்தக் குட்டியையே கூப்பிட்டுக் கேளுங்கள், அவளை நான் எவ்வளவு முறை ஊர் சுற்றக் கூடாதென்று மிரட்டி இருக்கிறேன் என்று. என் வார்த்தையைக் கேட்டால் தானே அவள்?'' என்று பொழிந்தாள்.

''நம் வீட்டுப் பெண்ணை நாம்தான் பார்த்துக் கொள்ள வேண்டும். வெளிமனிதர்களுக்கு என்ன அக்கறை? ஆனால் நீ கேட்டால்தானே. ஒரு புறம் நான் அவளுக்கு வரன் பார்க்க அலைகிறேன். மறுபுறம் அவள் குதிரையைப் போல் ஒருவிதத் தடுப்பும் இல்லாமல் வளைய வருகிறாள் - நன்றாயிருக்கிறது!'' என்றார் என் தந்தை.

மேலும் கேட்கத் தோன்றவில்லை எனக்கு. ஓசை செய்யாமல் ஜன்னலைவிட்டு ஒதுங்கிக் கீழ் அறைக்கு வந்துவிட்டேன். ''ஒருபுறம் நான் அவளுக்கு வரன் பார்த்து அலைகிறேன்'' என்ற என் தந்தையின் வார்த்தைகள் என்னுள் ரீங்காரம் செய்தன. இந்தப் பேச்சு எதற்காக என்று எனக்குத் தெரியும். அதனால் தான் நான் வெளியே போவது என் தாய்க்குப் பிடிக்கவில்லை. ஏன் என்று கேட்கிறேன் நான். எவ்வளவோ பேருக்குக் கலியாணம் நடப்பதைப் பார்த்திருக்கிறேன். அயலில் கொஞ்ச நாள் முன்புதான் கமலிக்குக் கலியாணமாயிற்று. கோவர்தன் கான்கோயின் பெண் ஹீராவிற்கும் கலியாணமாயிற்று. இன்றுவரை அவள் பிறந்தகத்திற்கு ஒருமுறை கூட வரவில்லை: என் கலியாணமும் இப்படித்தானே நடக்கும். வேறு எப்படி இருக்க முடியும்? கல்யாணம் பற்றிய பேச்சே எனக்கு ஏனோ விசித்திரமானதாகத் தோன்றுகிறது. எல்லாப் பெண்களுக்குமே இப்படித் தோன்றுமாயிருக்கலாம். யாருக்கும் தெரியாமல் ஏதோ அபூர்வமான பொருளைத் திரட்டி திறந்து கிடக்கும் கோயிலுள் வைத்தி

ருப்பது போல் ஒரு உணர்ச்சி ஒரு மர்மம்.

அன்று நாளெல்லாம் கலியாணத்தைப் பற்றியே நினைத்துக் கொண்டிருந்தேன். நன்றாய் இழுத்துப் போர்த்திக் கொண்டு மணப்பெண்ணாய்த் தோன்றுவது, எல்லோர் முன்னிலும் தலைகுனிந்து நடப்பது எல்லாமே விந்தை தான். கலியாணம் என்பது ஒரு பெண்ணின் வாழ்க்கையை எவ்வளவு தூரம் பாதிக்கும் என்று எனக்கு அப்பொழுது தெரியாது. அது உருவாக்குகிற அதிர்ச்சிகளையும் மாறுபாடுகளையும் புதுமைகளையும் நான் அறிந்திருக்கவில்லை. தெரிந்திருந்தால் என் வாழ்க்கையின் பாதை வேறுவிதமாயிருந்திருக்கும். என் அர்த்தமற்ற வாழ்வின் வெட்கமற்ற கதைகளை உங்கள் முன் இப்படிக் கொட்ட வேண்டியிருந்திருக்காது.

நம் ஹிந்துக் குடும்பங்களில், அதுவும் பிராமண வீடுகளில், கலியாணத்திற்கு முன் இம்மாதிரி எல்லாம் யாருக்கும் தோன்றவே தோன்றாது. அப்படித் தோன்றினாலும் என்ன பிரயோசனம்? கணவன் என்றால் யார், என்ன என்று புரிந்து கொள்ளும் வயசு வரும் முன்பே எங்கள் குடும்பத்தில், ஐந்தாவது வயதிலேயே, கலியாணம் ஆய்விடும். பிறகு எல்லோருமே வளர்ந்து பெரியவர்களாகி, பரிசயமில்லாத ஒரு மனிதனுடன் குடும்பம் நடத்தப் போகின்றனர். இதனால் யாருக்கும் மனக் குழப்பம் உண்டாவதில்லையோ? அதன் காரணமாய், அந்த அதிர்ச்சி தாளாமல், விஷம் உண்ண அவசியப் படுவதில்லையோ? ஆனால் என் விஷயம் வேறு - வித்தியாசமானது. அப்படி இல்லை என்றால் நான் இப்படித் தவிப்பானேன்.

அன்று எனக்கு நன்றாய் புரிந்துவிட்டது, எனக்கு வெகு சீக்கிரம் கலியாணம் ஆகிவிடும் என்று. அதனால் தான் அப்பாவிற்கு என்னைப் பார்க்க வேடிக்கையாய் இருந்தது போலும். இது கூடப் புரியாத மக்கு நான்.

ஆற்றோரம் வெண்மையைப் பரப்பி மலர்ந்திருந்த 'தண்டி பூவின் காலமும் முடிந்தது. வயல் வெளிகளில் களைப்பின்றி தோகை விரித்து ஆடிக்கொண்டிருந்த மயில்களும் ஓய்ந்தன. பம்பளிமாஸ் பூக்களைச் சுற்றி வட்டமிட்

டுக் கொண்டிருந்த வண்டுகளின் ரீங்காரம் எங்கோ தூரத்தில் ஒலிக்கும் சிலம்பொலியைப் போல் ஒலித்தது. இலைகள் பழுக்க ஆரம்பித்திருந்தன. ஆனால் வயலிலும் மைதானத்திலும் பசுமை அதிகமாய்த் தெரிந்தது-மர இலைகளின் பசுமையையும் பிழிந்து அவைகளின்மேல் ஊற்றிவிட்டாற்போல். நவராத்திரியில் பத்துவித தான்யங்கள் பத்தாயிரம் பாத்திகளில் முளைவிட்டிருந்தன. கிளிப் பச்சை நிறத்தில் வேயப்பட்ட ரத்ன கம்பளமோ என்று ஐயுறச் செய்தது வயல்களின் பசுமை. கிராமத்தின் வடக்கு முனையிலிருந்து எங்கள் தோட்டத்தின் வரம்பு வரை பரவிவந்து குளத்தின் ஓரமாய் ஒருநாள் மத்தியான வேளையில் நான் யாருக்கும் தெரியாமல் வந்து நின்றேன். அன்று ஏதோ பூஜை - அதனால்தான் அப்பாவும் வீட்டிலில்லை. நான் இந்த வாய்ப்பை எனக்கு சாதகமாக்கிக் கொண்டு வெளியே புறப்பட்டு விட்டேன். நல்ல வெயில் வீசிக் கொண்டிருந்தது. குளத்தில் மலர்ந்திருந்த குமுதங்களைப் பறிக்க நான் நீரில் இறங்கினேன். பூப்பறித்து முடிவதற்குள் கழுத்து வரை நனைந்து போயிற்று. சுற்றுப்புறத்தைப் பற்றி நான் கவனமில்லாமலே இருந்து விட்டேன். திடீரென்று அக்கரையிலிருந்து ஒரு குரல் எழுந்தது - திடுக்கிட்டு நிமிர்ந்து பார்த்தால் அங்கு நாத் அண்ணன் நின்று கொண்டிருந்தார். என்னைப் பார்த்து ''பார் இந்தப் போக்கிரிப் பெண்ணை! நடுப்பகலில் இப்படி முங்கிக் குளிக்கிறாளே!'' என்றார்.

எனக்குக் கோபம் மூண்டது. இத்தனை நாட்களாய் எங்கிருந்தாரோ எங்களைப் பார்க்கக் கூட வரவில்லை. திடீரென்று இன்று என்னவோ மிரட்டுகிறாரே. இவருடைய வார்த்தைக்கு மதிப்புக் கொடுப்பானேன் நான்?

''சொல்லியிருந்தால் பூப்பறித்துக் கொடுக்க ஆளா இல்லை? நீ தண்ணீரில் ஏன் இறங்க வேண்டும்?'' என்றார்.

நான் பூக்களைப் பிடித்துக்கொண்டு அவர் முன்னால் பேச முடியாமல் அப்படியே நீரில் நின்று கொண்டிருந்தேன்.

அவர் சிரித்துக் கொண்டே ''என் மேல் கோபம் உனக்கு

இல்லையா? ஏன் உனக்கு இவ்வளவு கோபம் என்று எனக்குத் தெரியும். சதீ, சமத்தோ இல்லையோ வெளியில் வா, ஒரு முக்கிய சமாசாரம்'' என்றார்.

நான் பதில் சொல்லவில்லை. அவர் என் பக்கமாய் இறங்கிக் கொண்டே ''நீ வெளியே வருகிறாயா, இல்லை நான் உன்னண்டை வரவா?'' என்றார்.

என்னவோ எனக்கு அவருடைய இந்தப் பேச்சு வித்தியாசமாய்த் தோன்றியது, ஏதோ வெட்கப்பட வேண்டிய விஷயம் போல். அவசரமாய் வெளியில் வந்து கரை ஏறும் பொழுது என் ஈரப் புடவை உடலோடு ஒட்டிக் கொண்டு விட்டதைக் கவனித்தேன்; நாத் அண்ணன் என்னையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தார். வெட்கத்தால் நின்ற இடத்திலேயே நிலைத்து விட்டேன். அங்கேயே செத்துப் போகக் கூடாதா நான் என்று உள்ளே குமுறினேன். அன்று உண்மையாகவே நான் செத்துப் போயிருந்தால் என் கதையும் முடிந்து போயிருக்குமே என்று இப்பொழுது தோன்றுகிறது. மாறாத துயரமும் வேதனையும் நிறைந்த இந்த வாழ்வு யாருக்கு வேண்டியிருக்கிறது!

புடவையை எப்படியோ சரிசெய்து கொண்டு, குனிந்த தலை நிமிராமல் கரை ஏறி மேலே வந்துவிட்டேன். ஆனால் அவரை ஏறிட்டுப் பார்க்க முடியவில்லை என்னால் - கசாப்புக் கடைக்கு ஓட்டப்படும் ஆட்டைப் போல். மேடேறியதும் ஒரு நிமிடம் கூடத் தயங்காமல் நேரே வீட்டை நோக்கி நடந்தேன். அவரும் என்னுடன் கூடவே வந்தார்.

ஆறு மாசமாய் அவர் ஊரில் இல்லையாம். மேல்படிப்பிற்காக கட்டக் போயிருந்தார் போலும். தசரா விடுமுறையில் வீட்டிற்கு வந்திருக்கிறாராம் கொஞ்ச நாள் இருப்பாராம். எங்கள் வீட்டிற்கும் தினமும் வருவார் என்றெல்லாம் என்னுடன் பேசிக் கொண்டே வழிநடந்தார். என் கோபம் கரைந்து விட்டது. ஆனாலும் நான் வாய் திறக்கவில்லை. தலையைத் தூக்கி அவரைப் பார்க்கவே எனக்கு வெட்கமாயிருந்தது.

அவருடைய வீடு வந்ததும் அவர் நின்று கொண்டார். அவருடைய பேச்சின் தலைகால் எனக்குப் புரியவில்லை.

அவர் ரொம்பப் பொல்லாதவர் என்று மட்டும் தோன்றிற்று.

வீட்டில் வராந்தாவில் புடவையைப் பிழிந்து உலர்த்திக் கொண்டிருந்தேன். அம்மா அங்கு எப்பொழுது வந்து நின்றாள் என்று கூட எனக்குத் தெரியவில்லை. கோபமாய் ''சதீ'' என்று ஒரு அதட்டல் போட்டாள். அவளுடைய முகம் ஜிவ்வென்று சிவந்து போயிருந்தது. கண்களை உருட்டியபடி என்னைப் பார்த்து 'ஏனடி, எங்கே போயிருந்தாய்?'' என்று கேட்டாள்.

பயத்தினால் என் குரலே எழும்பவில்லை. ''பூ பறிப்பதற்கு'' என்று மட்டுமே சொல்ல முடிந்தது. ஓங்கிய குரலில், ''பூ பறிக்கப் போனவள் அங்கேயே மூழ்கி செத்திருக்கக் கூடாதா, அலெட்சணமே. வெளியே காலை வைக்காதே என்று எத்தனை முறை நான் உனக்குச் சொல்லியிருக்கிறேன்'' என்று கத்தினாள். பெண்களின் கண்களில் கூட இவ்வளவு சூட்சும சக்தியா? நான் அழுவதைக் கண்டு கொண்டாள். ஒரே நொடியில் அவளுடைய கோபம் தணிந்து விட்டது. என்னை அணுகி, தலையை வருடியபடி எனக்கு புத்திமதிகள் சொன்னாள். எனக்கு பனிரெண்டு வயதாகி விட்டது - கலியாணம் நெருங்கிவிட்டது. இப்படி நான் ஊர் சுற்றினால் ஊரார் ஏசமாட்டார்களா? என்றெல்லாம் புரிய வைத்தாள். எனக்கு அவள் சொன்னது முழுதும் புரியவில்லை. ஆனால், இதனால்தான் நாத் அண்ணின் கண்கள் என்னை ஊடுருவிய பொழுது எனக்கு வெட்கம் வந்து மூடிக் கொண்டது போலும், என்று மனதில் உறுத்தியது.

இப்பொழுதெல்லாம் தினமும் நாத் அண்ணன் எங்கள் வீட்டிற்கு வருகிறார். என்னைப் பார்க்காமல் ஒரு நொடி கூட அவரால் இருக்க முடியாதது போல், உடனே என்னைத் தேட ஆரம்பிக்கிறார். ஆனால் நான் அவருடைய வருகையை ஊகித்துக் கொண்டு எங்கேயாவது ஒளிந்து விடுகிறேன். அன்று குளக்கரைச் சந்திப்பிற்குப் பிறகு எனக்கு அவரைப் பார்க்கவே வெட்கமாயிருந்தது. பகலில் எப்பொழுதாவது அம்மாவிடம் அமர்ந்து நான் ராமாயணம் படிப்பதுண்டு. அப்பொழுது ஒவ்வொரு

சமயம் அவர் வந்து விடுவார். என்னால் எங்கும் ஓட முடிவதில்லை அம்மா இருப்பதால். ஆனால் என் உடல் வியர்வையில் தொப்பமாய் நனைந்து விடும்.

ஒரு நாள் நல்ல மழை. எங்கள் வாசலில் முழங்கால் மட்டும் தண்ணீர் தேங்கி விட்டது. நானும் என் ''பவுலும்'' (தோழி) காகிதப் படகு செய்வதில் முனைந்திருந்தோம். அப்பொழுது நாத் அண்ணன் என் பின்னால் வந்து நிற்பதைக் கூட நான் அறியவில்லை. நான் செய்த படகொன்றைப் பார்த்துக் கொண்டிருந்த பொழுது அவர் ''இப்படியா படகு செய்வார்கள்!'' என்றார். குரலைக் கேட்டுத் திடுக்கிட்டேன். கையிலிருந்ததை எல்லாம் கீழே போட்டுவிட்டு எழுந்து ஓடத் தயாரானேன். ஆனால், பவுல் என்னைப் போகவிடவில்லை. என் புடவைத் தலைப்பைப் பிடித்திழுத்து என்னை நிறுத்தி, தன் படகை நீரில் மிதக்க வைக்கச் சொன்னாள். எனக்கு வெட்கமாயிருந்தது; ஆனாலும் திண்ணையிலிருந்தபடி படகைத் தள்ளி விடக் குனிந்தேன். நாத் அண்ணன், ''இவளால் மிதக்க விடமுடியுமா என்ன?'' என்று சொல்லிக் கொண்டே என் முதுகில் சாய்ந்தவாறு நீரிலிருந்த படகைக் கையில் எடுத்துக் கொண்டார்.

அவருடைய நடத்தையால் என் உடலில் நெருப்புப் பற்றியது போலிருந்தது. அவர் இவ்வளவு அந்நியோன்னியமாய்என்னிடம் பழகுவது கொஞ்சமும் நியாயமல்ல என்று தோன்றியது. அவருடைய கையை என் முதுகிலிருந்து தள்ளிவிட்டு ஒரு பக்கமாய்ப் போய் நின்றேன். தன்னைச் சமாளித்துக் கொண்டு அவர், ''ஏன் இப்படி நடந்து கொள்ளுகிறாய், சதீ? உனக்கு என்ன ஆயிற்று?'' என்றார்.

கோபத்தில் என் முகம் சிவப்பேறிக் கொதித்தது. என்னால் அடக்க முடியவில்லை. ''எனக்கு ஆயிற்றா இல்லை உங்களுக்கா? எப்பவும் என்னுடன் நீங்கள் ஏன் இப்படி நடந்து கொள்ளுகிறீர்கள்? எனக்கு...''

''என்ன உனக்கு'' என்று கேட்டார்.

''எனக்கு இதெல்லாம் கொஞ்சமும் பிடிக்கவில்லை''

அவருடைய முகம் உடனே வெளிறிப் போயிற்று.

மேலே ஒன்றும் பேசாமல் முகத்தைத் தொங்க விட்டபடி அங்கிருந்து மெல்ல அகன்றார். எனக்கு என்னவோ பாவமாயிருந்தது அவருடைய தொய்வு. ஆனால் இன்று நான் செய்ததும் சொன்னதும் உசிதம் என்று என்னையே சமாதானப் படுத்திக் கொண்டேன்.

அன்றைக்குப் பிறகு நாத் அண்ணன் எங்கள் வீட்டிற்கு வருவதை நிறுத்திக் கொண்டார். அப்படி வந்தாலும் அப்பாவுடன் பேசிவிட்டு அப்படியே போய் விடுகிறார். எப்பவாவது அம்மா கூப்பிட்டால் உள்ளே வந்து இரண்டு வார்த்தை பேசிவிட்டுப் போய்விடுவார். அந்த வீட்டில் நானும் ஒருத்தி இருப்பதை அறவே மறந்துவிட்டார் போலும். எனக்கு ரொம்பக் கஷ்டமாயிருந்தது. நான் அப்படி என்ன கடூரமாய்ச் சொல்லி விட்டேன்? அவருடைய இந்தக் கோபம் தொடர்ந்து நிலைத்திருந்தாலே எல்லோருக்கும் நலமாயிருந்திருக்கும் என்று எனக்கு இப்பொழுது தோன்றுகிறது. என் வாழ்வும் இப்படித் துயர வலையில் சிக்கியிருக்காது.

ஒரு நாள் பகலில் பவுல் என்னைத் தேடி வந்தாள். அம்மா தூங்கிக் கொண்டிருந்தாள். வெளியறையில் அப்பா கணக்குப் பார்த்துக் கொண்டிருந்தார். நான் ''உன் தமையன் வீட்டிலில்லையா, பவுல்?'' என்று கேட்டேன். அவள் ஆச்சரியத்துடன் என்னைப் பார்த்து, ''இல்லையே. எங்கோ போயிருக்கார்'' என்றாள்.

''எங்கே?''

பவுல் என்னைப் பார்த்து நமட்டுச் சிரிப்புடன், ''அங்கேதான்'' என்றாள்.

''எங்கே? உன் புக்ககத்திற்கா?''

''என் புக்ககத்திற்கல்ல. உன்னுடைய ... '' சொல்லியவாறு அடக்க முடியாமல் சிரித்தாள்.

அப்புறம் நாத் அண்ணனைப் பற்றி நாங்கள் பேசவில்லை. நாங்களிருவரும் எனக்கு வரப்போகும் மணாளனின் குண விசேஷங்களைப் பற்றி பேச ஆரம்பித்தோம். ''உன் புக்ககத்தார் ரொம்ப பெரிய செல்வந்தர்களாம். மாடி வீட்டில் வசிப்பவர்கள் என்று அம்மா சொல்லுகிறாள். அங்கே நீ ராணி மாதிரி இருப்பாய்''

என் புக்கக ஐசுவரியத்தைப் பற்றிக் கேட்கக் கேட்க என் நெஞ்சம் விம்மித் தணிந்தது. நியாயம்தானே. கலியாணம் என்றால் புக்கக செல்வாக்குத் தானே முக்கியம். அதில் வேறு எவ்வித இன்பமோ, துன்பமோ இருப்பதாக எனக்கு அப்பொழுது தெரியாது. எவ்வளவு நல்லவர் நாத் அண்ணன்; இவ்வளவு பெரிய செல்வந்தருடன் என்னை அனுப்பி வைக்க எவ்வளவு பாடு படுகிறார்! அந்தோ! அன்றிலிருந்து என் வாழ்க்கையைப் பிணைக்க இரும்புச் சங்கிலி தயாராய்க் கொண்டிருந்தது என்று அறியாமல் போனேன்.

அன்று உண்மையாகவே புக்கக பெருமையில் என் மனம் துள்ளியது. நான் வேடிக்கையாய் பவுலிடம் ''எனக்கு இந்த சம்பத்தெல்லாம் அவசியமில்லை. உனக்குப் பிடித்திருந்தால் நீயே அவரைக் கலியாணம் செய்து கொள்'' என்றேன்.

இப்பொழுதெல்லாம் அம்மா எப்போதும் துக்கமாய் இருக்கிறாள் — என்னவாயிற்று இவளுக்கு? எதையோ நினைத்துக் கொண்டு திடீர் திடீரென்று அழுகிறாள். நாத் அண்ணனிடம் மட்டுமே பேசுகிறாள். பிறர் எவருடனும் பேசுவது இல்லை. ஒரு சமயம் அவர்களிருவரும் பேசிக் கொண்டிருந்த போது ஒளிந்து நின்று கேட்க எனக்குத் தோன்றியது. ''நான் சொல்லுவது ஒன்றுமே அவர் காதில் ஏறவில்லை. நீயாவது சொல்லிப் பார்'' என்றாள் அம்மா. ''ஏன் அப்படி? நாம் தவறாய் ஏதாவது சொல்கிறோமா என்ன?'' என்று நம்பிக்கையுடன் சொன்னார். அம்மாவுக்கு அந்த நம்பிக்கையில்லை. தளர்ந்த குரலில், ''உனக்கு அவர் குணம் தெரியாதா? பிடிவாதம் பிடித்தால் கடவுளால் கூட அவரை அசைக்க முடியாது. முகூர்த்தம் வேறு ரொம்ப நன்றாய் அமைந்திருப்பதாய்ச் சொல்லுகிறார். சதியை அங்குதான் கொடுப்பார். அப்படி நடந்து விட்டால் மேலே என்ன நடக்குமோ! நான் உயிருடன் இருக்கும்பொழுது சதியை ஒரு கிழவனுக்குக் கட்டிக் கொடுக்க விடமாட்டேன்'' என்றாள்.

அம்மாவின் துயரத்தின் காரணம் இப்பொழுது எனக்குப்

புரிந்தது. எல்லாம் என் காரணமாகத்தான். எனக்காக எல்லோரும் கவலைப்படுகிறார்கள் — நான் கவலையற்றிருக்கிறேன்.

மாலை நேரம். ஆகாயமளவு உயர்ந்த பனைமரங்களூடே தெரியும் கரிய மேகங்களுள் மறைந்துகொண்டிருந்த சூரியனின் கிரணங்கள் மென்மையான ஒளியைப் பாப்பின. துளசிமாடத்தில் விளக்கேற்றி விட்டு நான் பேசாமல் திண்ணையில் உட்கார்ந்தேன். முற்றத்தில் பரவிய இருட்டில் அகலின் வெளிச்சம் வலிமையற்றிருந்தது போல என் சிற்றறிவும் அளப்பறியாத வாழ்க்கைக் கடலில் மூழ்கி மடிந்தது. விவாகம் என்பது என்ன? கணவன்-மனைவி உறவைப் பற்றி எனக்கு ஒன்றுமே தெரியாது. எல்லோருடைய கவலையையும் பார்த்து என் மனமும் அழுந்திப் போயிற்று. எல்லோர் மனதையும் ஒரே சிந்தை வாட்டி எடுத்தது. வீடே அந்தக் கவலையில் பேச்சு மூச்சற்று ஒடுங்கிவிட்டது. துளசிமாட விளக்கும் மினுக்கென்று எரிந்துவிட்டுப் பொட்டென்று அணைந்துவிட்டது. உள்ளும் புறமும் நான் குருடியாகி விட்டேன். அம்மாவும் பிறரும் ஏன் இவ்வளவு கவலைப்படுகிறார்கள் என்று யார் எனக்கு விளக்குவார்கள்?

கிழ மாப்பிள்ளை இவ்வளவு கொடுமையானவரா?

அடுத்த நாள் நாத் அண்ணன் அப்பாவைக் கண்டு இந்தக் கலியாணத்தை நிறுத்திவிடும்படி வற்புறுத்தினார். ''மாப்பிள்ளை கிழவன்; மேலும் இரண்டாம் தாரம். சமீபத்தில் தான் ஜமீந்தாரராயிருக்கிறான். பணமிருக்கிறது. ஆனால் சதியின் கால் விரலுக்குக் கூட ஒப்பாக மாட்டான்'' என்றார். ஆனால் அப்பா பிடிவாதக்காரராயிற்றே. இந்த சம்பந்தத்தை முறிக்கக் கண்டிப்பாய் மறுத்துவிட்டார். பதிலுக்கு நாத் அண்ணனையே மிரட்டி உருட்டினார். அண்ணன் குறைந்தவரா? அவரும் கோபத்துடன் அங்கிருந்து எழுந்து போய்விட்டார். போகிற போக்கில் தான் இனிமேல் உயிருடன் இருக்கும்வரை இந்த வீட்டு வாசலை மிதிக்கப் போவதில்லை என்று சொல்லிவிட்டுப் போனார்.

பாவம் அம்மா தான் என்ன செய்வாள்? இருவரும்

பிடிவாதக்காரர்கள். அழுவதைத் தவிர வேறொன்றும் முடியவில்லை அவளால்.

இந்தச் சோக சூழ்நிலையில் என் கலியாண நாளும் நெருங்கி விட்டது. இரண்டே நாள்தான் இருந்தன நடுவில். தன்னால் முடிந்தவரை அப்பா ஒரு குறைவும் வைக்காமல் ஏற்பாடெல்லாம் செய்து கொண்டிருந்தார். ஆனால் வேலையைச் சமாளிக்கத் தான் யாருமே இல்லை. கலியாணப் பேச்சு எழுந்த அன்றிலிருந்து ஒருநாள் கூட அம்மா படுக்கையை விட்டெழுந்து சாதாரணமாய் நட மாடவில்லை. இந்நிலையில் அவளால் என்ன வேலை செய்ய முடியும்? பெரியம்மா என்று நான் அழைக்கும் நாத் அண்ணனின் தாய் வந்து போய்க் கொண்டிருந்தாள். அதனால் காரியம் எல்லாம் எப்படியோ ஆய்க் கொண்டிருந்தது.

கலியாணமும் ஆகிவிட்டது. எனக்கு எல்லாமே கன வாகத் தோன்றியது. அன்று காலையிலிருந்தே தூங்கிக் கொண்டிருந்தேன். இரவில் திடீரென்று மனிதர்களின் நடமாட்டமும், வாத்திய கோஷமும் என்னை எழுப்பி விட்டன. வீட்டு முற்றத்தில் கூட்டம் நிரம்பியிருந்தது. இவ்வளவு அமர்க்களத்திலும் நான் திரும்பத் தூங்கிப் போய்விட்டேன். அப்புறம் என்னை யார், எப்பொழுது, எழுப்பி மண்டபத்திற்கு அழைத்துப் போனார்களோ எனக்குத் தெரியாது.

பின்மாலை சமயம். ஆகாயத்தில் சூரியன் புதுப்பெண் ணைப் போல் எழும்பி, சுவர்க்கத்தின் முற்றத்தில் சிதறிக் கிடந்த ரோஜா மலர்களைத் திரட்டி உஷையின் ரோஜா வர்ணத்தை எங்கும் தெளித்துச் சென்றது. மரக்கிளைகளில் குளுமையான காற்று இன்னும் உறங்கிக் கொண்டிருந்தது. பெரியம்மா என்னை எழுப்பிக் குளிக்க வைத்தாள். இரவில் நடந்தவையெல்லாம் ஏதோ கனவில் கண்டவை போலிருந்தது. ஈரத் துணியுடனேயே நான் என் அறைக்குள் வந்துவிட்டேன். அங்கும் இருட்டு நீங்கவில்லை. ஜன்ன லண்டை நின்று புடவையை மாற்றியவாறு வெளியே முற்றத்தில் கூடியிருந்தவர்களைக் கவனித்தேன். இவர்கள் தான் மாப்பிள்ளை வீட்டாராயிருக்க வேண்டும். மாப்

பிள்ளை யார் என்றறியும் ஆர்வத்துடன் நான் அவர்களையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தபொழுது பவுல் எங்கிருந்தோ ஓடி வந்தவள் என்னைப் பார்த்து சிரித்தபடி பவுல், ''மாப்பிள்ளை!'' என்றாள்.

வெட்கத்தை விட்டு ''யார்? எனக்குக் காண்பி'' என்றேன்.

திண்ணையில் அமர்ந்திருந்தவருள் ஒருவரைச் சுட்டிக் காட்டிவிட்டு என் தோழி ஓடிப் போய் விட்டாள்.

அவள் சுட்டிக் காண்பித்தவர் நடு வயதினர் — தோசைக் கல்லைப் போல் கறுத்த, பெருத்த உடலமைப்பை உடையவராயிருந்தார். இந்த அழகிற்கு தங்கச் சங்கிலியும், கங்கணமும் அணிந்து கண் கொள்ளாக் காட்சியாயிருந்தார்; இவரா என் கணவர்? — என்னால் ஒப்புக் கொள்ளவே முடியவில்லை. கோபமும் தாபமும் என்னுள் குமுறின. இன்னொரு முறை அவரைப் பார்க்கக் கூடப் பிடிக்காமல் ஜன்னலை தடாரென்று மூடிவிட்டு அங்கிருந்து விலகிப் போனேன்.

அடுத்த நாளே எல்லோரும் புறப்பட்டுப்போய் விட்டனர். கொஞ்சம் ஆறுதலாயிருந்தது. இந்தச் சில நாட்கள் என் மனம் பட்டபாட்டை நான்தான் அறிவேன். கலியாண நாட்களில் அம்மா கண்ணில் தென்படவேயில்லை. அப்பா மட்டும் உள்ளுக்கும் வெளிக்கும் அலையும்பொழுது தென்பட்டார். ஆனால் அவரும் என்னிடம் அப்புறம் வரவில்லை. பவுல் மட்டும் எப்பவாவது என்னைக் கேலி செய்வதற்காகவே அறைக்குள் வந்தாள். ஆனால் அவளாலும் அந்த இருட்டறையில் அதிக நேரம் நிற்க முடியவில்லை. இந்த வீட்டிற்கு ரொம்ப வேண்டியவரான நாத் அண்ணன் கலியாண தினத்திற்குப் பிறகு வரவேயில்லை. ஆச்சரியம்தான்: எப்பொழுதும் எல்லாக் காரியத்திற்கும் தானே முன் நின்று பொறுப்பேற்கும் அதே நாத் அண்ணன்! உண்மையாகவே அப்பாவிடம் இவ்வளவு கோபமா அவருக்கு?

சில நாட்களுக்கப்புறம் பெரியம்மா வந்தாள். பேச்சு வாக்கில், ''நாத் வேலை பார்க்கக் கட்டக் போயிருக்கிறான்'' என்றாள். அம்மா ஆச்சரியத்துடன் ''வேலைக்கா

போயிருக்கிறான்?'' என்று வினவினாள். ''ஆமாம் சில நாட்களாகவே என்னவோ சோகமாய் இருந்தான். ஒரு வேளை வேலை விஷயமாயிருக்கலாம். நான் தான் அவனை நிர்ப்பந்தமாய் இங்கு நிறுத்தி வைத்திருந்தேன். ஆனால் கடைசியில் பிடிவாதமாய்ப் புறப்பட்டு விட்டான். சதியின் கலியாணத்திற்கு இரண்டு நாள் முன்பு, அவனுக்கும் சதியின் தந்தைக்கும் நடந்த வாக்கு வாதத்தைப் பற்றிச் சொன்னான்'' என்றாள்.

நாத் அண்ணனின் மனவருத்தத்தின் காரணம் எனக்குத் தெரியும். அப்பாவுடன் ஆயிரம் சண்டை போட்டாலும் இப்படி வீட்டை விட்டு விட்டுப் போகக் கூடியவரல்ல அவர். நான் தான் அதற்குக் காரணம். நான் அன்று வீசின சூடு சொல் அவருக்குக் கோபத்தை மூட்டிவிட்டது. என்னிடம் கோபம் கொண்டு தான் போய் விட்டார்.

குளிர் கால வெயில் மென்மையாய்ப் பரவியிருந்தது. மூங்கில் புதருள், முள் செடிகளின் நடுவே ஒரு புறா தன் கனவுக் காதலியை நினைத்து விரக கீதம் கூவிக்கொண்டிருந்தது. திண்ணையிலமர்ந்து இந்தக் கீதத்தைக் கேட்டுக் கொண்டிருந்த எனக்கு, நாத் அண்ணன் என்னை நிரந்தரமாய் விட்டு போய்விட்டார் என்று தோன்றிற்று. அவர் இனிமேல் வரவே மாட்டாரோ!

இரண்டு வருடங்கள் ஓடிவிட்டன. ஒரு யுகமே மாறி விட்டது போல இருந்தது. என்னுள்ளும் புறமும் எவ்வளவு மாறிவிட்டன!

போன வருடம் இதே சமயத்தில் பௌர்ணமிக்கு முன் வயல்களிலும் வரப்புகளிலும் ஒரே அமர்க்களமாயிருந்தது. பீர்க்கம் பூ பூக்கும் காலமல்லவா இது! வீட்டுக் கூரையில் கொடி நன்றாய்ப் பரவி பசுமையாயிருந்தது. இருளில் விரியும் மலர்கள் கொடியின் கண்கள் போல் பளிச்சிட்டன. மாலை வேளையில் வீசும் காற்று சிறு குழந்தை விளையாடுவதைப்போல் அக்கொடியை வந்து வந்து சீண்டிச் சென்றது.

பௌர்ணமி நெருங்கிவிட்டது. வீட்டைப் பெருக்கித் துடைத்து மெழுக வேண்டும். ஒன்றுமே ஆகவில்லை. வெள்ளை அடிக்கும் காரியமும் ஆரம்பமாகவில்லை. இவ்வருடம் குவார் பூர்ணிமா நடத்த வேண்டாம் என்று

அம்மாவின் எண்ணமா? நான் திண்ணையிலமர்ந்து சந்திரனையே பார்த்துக் கொண்டிருந்தேன். எதிரே மாஞ்சோலையில் இருந்த குளத்துக்குள் மரங்களூடே சந்திரனின் கிரணங்கள் நுழைந்து குவியலாய்க் கூடிக்கிடந்தன. எனக்குத் திரும்பவும் பௌர்ணமி நினைவிற்கு வந்தது. முற்றத்தில் ஒரே இருட்டு. அறையுள் விளக்கு எரிந்து கொண்டிருந்தது. அந்த வெளிச்சத்தில் அம்மா என்னைப் பார்த்துவிட்டுக் குரல் கொடுத்தாள்.

நான் அம்மாவிடம் போய் அமர்ந்தேன். ''இது வரையில் எங்கே இருந்தாய் நீ? உன் தந்தை வந்துவிட்டாரா?'' என்று கேட்டாள். ''எனக்குத் தெரியாது'' என்றேன்.

மேலே ஒன்றும் கேட்காமல் வெகு நேரம் பேசாமலிருந்தாள். முற்றத்தின் ஓலைக் கூரை வழியாய் சந்திர கிரணம் ஒன்று இழிந்து வராந்தாவின் ஒரு பக்கத்தில் விழுந்தது. அந்த வெளிச்சத்தில் அம்மாவின் முகம் தெரிந்தது. அவளுடைய வாய் ஏதோ முணுமுணுத்துக் கொண்டிருந்தது; நாம ஸ்மரணமாயிருக்கலாம். நான் சொல்ல வேண்டிய விஷயம் இருந்தது. அதனால் மெள்ள 'அம்மா' என்று ஆரம்பித்தேன். பதில் வரவில்லை. மீண்டும் கொஞ்சம் உரக்க, ''அம்மா, ஒ அம்மா'' என்று அழைத்தேன். இம்முறை பதில் வந்தது. ''என்ன விஷயம், சொல்லேன்'' என்றாள். ''பௌர்ணமி வருகிறது. துளசிமாடத்தைச் சுற்றித் துடைத்து, மெழுகி ஆகவில்லை. இனிமேல் எப்பொழுது செய்வதாம்?'' என்றேன். ''அவ்வளவு அவசரம் என்ன! பௌர்ணமி அன்றே எல்லாம் செய்துவிடலாம்.'' அம்மாவுக்குச் சிரிப்பு வந்துவிட்டது, ''உன் பேச்சே ,எப்பவும் இப்படித்தான்'' என்றாள். ''குவார் பௌர்ணமி வருகிறதே என்ற கவலையில் பாவம் சதிக்கு பசி தாகம் எல்லாமே மறந்துவிட்டது'' வெளியே ஒரு குரல் ஒலித்தது, தொடர்ந்து சிரித்தது.

சட்டென்று திரும்பிப் பார்த்தேன். முற்றத்தைத் தாண்டி எங்கள் பக்கமாய் வந்து கொண்டிருந்தது அந்த உருவம். இருட்டில் அந்த வெளுப்பு மேனி நெருப்பைப் போல் ஜ்வலித்தது. ''நாத் அண்ணா'' என்று ஆச்சரியத்துடன் கூவினேன்.

அம்மா புடவையை இழுத்துவிட்டுக் கொண்டு எழுந்து வந்தாள். ''சதீ, பாயைக் கொண்டு வந்து விரி'' என்றாள். அம்மாவை நமஸ்கரித்து விட்டு அங்கே தரையிலேயே உட்கார்ந்து விட்டார். ''இருக்கட்டும் சித்தி, பரவாயில் லை'' என்றார். ''எப்பொழுது கட்டக்கிலிருந்து வந்தாய்'' அம்மா கேட்டாள்.

''இன்று தான்.''

''இப்பொழுது உனக்கு லீவா?''

''அதெல்லாம் அப்பவே முடிந்துவிட்டது. அங்கே கொஞ்சம் வேலையிருந்தது, அதனால் வரமுடியவில்லை. ஏதோ தனிமை வாட்டியது. அதனால் இப்பொழுது வந்திருக்கிறேன்'' என்றார். தொண்டை கரகரத்தது. கட்டக் கில் இவருக்கு சுகமில்லை என்று நன்றாய்த் தெரிந்தது. ''தம்பி, உன் உடம்பு சரியாயிருக்கிறதா? உன் அம்மா வீட்டில் என்ன செய்து கொண்டிருக்கிறாள்'' என்று அம்மா கேட்டாள். ''அவள் இங்கே வர புறப்பட்டுக் கொண்டிருந்தாள். இப்பொழுது நான் வந்துவிட்டேனாத லால் வரமாட்டாளாயிருக்கும்'' என்றார். சுற்றுப் புறத்தை மறந்து நான் ரொம்ப நாழியாய் அவரையே பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருந்தேன். ''போய் வெற்றிலை எடுத்து வா'' என்று அம்மா என்னை நெட்டிய பொழுது தான் உணர்வுற்றேன். தலையில் புடவைத் தலைப்பை இழுத்துவிட்டபடி நான் அங்கிருந்து அறைக்குள் போய் விட்டேன். அவர்களிருவருடைய குரலும் அறைக்குள் கேட்டது. அதுவும் நாத் அண்ணனின் பழகிய குரல் தெளிவாய்க் கேட்டது. குழந்தைப் பருவத்திலிருந்து கேட் டுப் பழகிய குரலல்லவா அது? இரண்டு வருடமாய்த் தானே அவர் கட்டக்கிலிருக்கிறார். அதற்கு முன், தினமும் எங்கள் வீட்டிற்கு வந்து என்னைப் பக்கத்திலிருத்திக் கொண்டு எவ்வளவு பேசுவார்!

வெற்றிலைத் தட்டை எடுத்து வந்தேன். அதை அவர் பக்கத்தில் கொண்டு போய் வைக்கும் பொழுது தான் அவர் என்னையே உற்றுப் பார்த்துக் கொண்டிருப்பதைக் கவனித்தேன். தலையைக் குனிந்தவாறு தூண் மறைவில் நின்று கொண்டேன். திரும்ப அவர் பக்கத்தில் உட்கார

எனக்கு ஏனோ வெட்கமாயிருந்தது.

வீட்டுக் கொல்லையிலிருந்த மாந்தோட்டத்தின் நெருக்கத்தை லட்சியம் செய்யாமல் நிலா உள் வந்து முற்றம் முழுவதிலும் பரவி விட்டது. தூண் மறைவிலிருந்தவாறே நான் நாத் அண்ணனையே கண்கொட்டாமல் பார்த்தேன். அவருடைய திடமான உடலை நிலா சரிகைப் போர்வையைப் போல் தழுவியிருந்தது. இரண்டே வருடங்களில் அவர் எப்படி இவ்வளவு அழகாய் விட முடிந்தது?

வெளியில் அப்பாவின் குரல் கேட்டது. அம்மா உடனே எழுந்து போய்விட்டாள். நாத் அண்ணனும் புறப்பட எழுந்தார். பிறகு எதையோ எண்ணி உட்கார்ந்து விட்டார். ''என்ன சதி, அங்கேயே நிற்கிறாய்? இங்கே வாயேன்'' என்றார். வெட்கம் என்னை வாயைத் திறக்க விடவில்லை.

''இரண்டு வருடங்கள் முன் நடந்ததை இன்னமும் நினைத்துக் கொண்டிருக்கிறாயா? கோபம் தணியவில்லை?'' என்று கேட்டார். போய் அவர் பக்கத்தில் உட்காரவேண்டி வந்தது. ''நீங்கள் மாத்திரம் எப்படியோ?'' என்று கேட்க மனம் தூண்டியது.

மென்மையான குரலில் ''சதீ'' என்று அழைத்தார். ''உம்'' என்ற முனகத்தான் முடிந்தது என்னால். குரல் எழவில்லை. ''இந்த வெற்றிலைச் சுருள் யாருக்கு? எனக்கா?'' என்றார். பேச முடியவில்லை என்னால். தட்டை அவர் பக்கமாய் நகர்த்தி விட்டேன். அவருக்கு சிரிப்புத் தாளவில்லை. ''அது தான் தெரிகிறதே. ஆனால் தட்டிலிருந்து நக்கித் தின்னும் நாயோ பூனையோ அல்லவே நான். வெற்றிலை கையில் தரப்படும் பொருள்'' என்றார்.

வெட்கப் படவேண்டாத சமயத்தில் வெட்கம் வந்தால் அதீதமாய் சங்கோசப்படுவது பெண் ஜாதியின் குணம் போலும். மற்றொரு சந்தர்ப்பமாயிருந்திருந்தால் நான் அவர் கையில் வெற்றிலைச் சுருளை சந்தோஷமாய்க் கொடுத் திருப்பேன்; ஆனால் அவர் கேட்டபொழுது என்னால் அதைச் செய்ய முடியவில்லை. அவர் என் பக்கமாய் நகர்ந்து என்னை மேலும் சீண்ட ஆரம்பித்தார். ஆனால் நான் மரப்பொம்மையாய் தலை நிமிராமல்

உட்கார்ந்திருந்தேன்.

அம்மா வெளியிலிருந்து வந்து திண்ணையைத் தாண்டி அறைக்குள் போய்விட்டாள். அவர் எழுந்து விட்டார். ''நீ எனக்கு வெற்றிலை தரமாட்டாய் இல்லையா'' என்றவாறு வெற்றிலைத் தட்டிலிருந்த எல்லா சுருள்களை யும் எடுத்து கதவின் பக்கமாய் எறிந்துவிட்டு போய்விட் டார்.

நிலா மங்கிவிட்டது. நான் அங்கேயே நின்றவாறு குழந்தைப் பருவ நிகழ்ச்சியை நினைத்துக் கொண்டேன். அன்றும் இப்படித் தான் பிடிவாதம் பிடித்தார். இவ்வளவு வயதான பிறகும் அந்தக் குணம் மாறவில்லை. சின்ன விஷயத்திற்கெல்லாம் கோபம், பிடிவாதம்.

பௌர்ணமிக்கு முன்நாள். இருட்டும் முன்பு நானும் என் தோழியுமாய்ச் சேர்ந்து வீடெல்லாம் பெருக்கித் துடைத்து, மெழுகி விட்டோம். பிறகு துளசி மாடத்தைச் சுற்றிக் கோலமிட ஆரம்பித்தோம். அம்மா அதற்குள் மிரட்ட ஆரம்பித்தாள். ''அப்பொழுதிலிருந்து வேலை செய்கிறாயே, பசி தாகம் எதுவும் தெரியவில்லையா உனக்கு? இஷ்டம் போல் செய். வா, நீயாவது வந்து சாப்பிடம்மா'' என்று பவுலை இழுத்துக் கொண்டு போய்விட்டாள். எனக்கும் பசி காதடைத்தது. ஆனால் கோபம் பசியையும் மீறியது. அங்கேயே, கையில் அகலு டன், கோலம் போட்டுக் கொண்டிருந்தேன். என் பிடிவா தம் வேறொருவரை எனக்கு ஞாபகப்படுத்தியது. அன்று அவருடைய கையில் வெற்றிலையை நான் கொடுக்க வில்லை என்றுதானே. அவரும் தாபத்துடன் போய்விட் டார்! அன்றிலிருந்து நாலைந்து நாட்களாக அவர் நிழல் கூட எங்கள் வீட்டில் விழவில்லை. முன்பு எங்கள் வீட்டிற்கு வரும் வரை பகலில் உணவு கூட உண்ணாதவர் இப்பொழுது உண்மையாகவே என்னிடம் தீராத கோபம் கொண்டுவிட்டாரா?

பவுல் உண்டு விட்டு வந்தாள். ''உன் அண்ணன் இப்பொழுது வீட்டில் தானே இருக்கிறார்?'' என்று கேட்டேன்.

''ஆமாம், ஏன்?'' என்று ஆச்சரியத்துடன் என்னைப்

பார்த்தாள்.

''கட்டக் போய்விட்டாரோ என்று நினைத்தேன்.''

''ஏன், என்ன விஷயம்?''

மேலும் கேட்க வெட்கமாயிருந்தது. ஆனாலும் கடைசியில்; ''ஒன்றுமில்லை. இந்தப் பக்கம் காண்பதில்லையே என்று கேட்டேன்.'' பவுல் கோலம் போடுவதை நிறுத்திவிட்டு என்னைப் பார்த்தாள். பிறகு, திரும்ப கோலம் போட்டபடி, முகத்தை நிமிர்த்தாமலே, ''இன்று இங்கு வரப்போவதாகச் சொன்னார். ஏனோ காணோம்'' என்றாள். வருவதாகச் சொன்னாராமே! என் மேல் கோபம் இல்லை போலும். வீட்டில் வேலையிருந்திருக்கும்; அதனால் தான் வரவில்லைபோலும் என்று நினைத்துக் கொண்டேன். அனாவசியமாய் நான் கவலைப்பட்டேனே.

உள்ளேயிருந்து அம்மா குரல் கொடுத்தாள். ''சதி, எத்தனை நேரம் உனக்காகக் காத்திருப்பது நான்'' என்றாள். என் கையிலிருந்த கோல சாமானை பிடுங்கிக் கொண்டு, ''போய்ச் சாப்பிடு. சித்திக்குக் கோபம் வந்துவிடும்'' என்று பவுல் என்னை அனுப்பி வைத்தாள்.

கை அலம்பிவிட்டு சாப்பிட உட்கார்ந்தேன். ஒரு கவளம் எடுத்தவுடனேயே எனக்கு நினைவு வந்தது - சாப்பிடக் கூடாது என்றுதானே கோபமாய் இருந்தேன். இந்த நாத் அண்ணன் எங்கிருந்தாலும் அவரால் என் காரியமெல்லாம் குழம்பி விடுகிறது.

பௌர்ணமி அன்று மாலை பூஜை மணி அடிக்கும் முன்பு தோட்டத்தின் மறைவில் சந்திரன் பெரிய ஒரு வெள்ளித் தட்டைப் போல் உதித்துவிட்டது. திறந்த கோயிலுள் தெரியும் அகண்ட ஜோதியைப் போல் தோன்றிற்று பௌர்ணமி சந்திரன். தென்னை மர ஓலைகளின் மேலே சந்திரன் தெரிந்ததும் கிராமத்தில் குரவை ஒலி ஆகாயத்தை எட்டியது. இந்த குவார் பௌர்ணமி சந்திரனைப் பார்க்கத்தான் போலும் பீர்க்கம் பூக்கள் இன்னமும் வாடாமல் மலர்கின்றன!

சந்திரனின் ராணி இந்த பீர்க்கம் பூ - அவனுடைய காதலி. அதனால் தான் அந்த மஞ்சள் புஷ்பங்களின் மேல் சந்திரனின் ஒளி அவ்வளவு அழகாய்த் தெரிகின்றது.

என்னைக் கண்டதும் அம்மா ''என்ன பெண்ணோ நீ. காதில் பஞ்சடைத்து வைத்திருக்கிறாயா? அப்பொழுதி லிருந்து கூப்பிடுகிறேன் - தொண்டை வறண்டு விட்டது. வா இங்கே'' என்று கத்தினாள்.

அவளைப் பின் தொடர்ந்தேன். தட்டில் பிரசாதத்தை வைத்தபடி, ''போய் உன் நாத் அண்ணனுக்கு இரண்டு பீடா செய். நான் பிரசாதம் கொண்டு போகிறேன்'' என்றாள்.

அவர் எப்பொழுது வந்தார் என்று கூடத் தெரியவில் லையே எனக்கு! அலைந்து கொண்டிருந்த என்னை பார்த்திருக்கமாட்டார். ஆனால் பின் பக்கமாய் வருவா னேன்? வெட்கக்கேடு!

வெற்றிலையோடு வெளியில் வந்தேன். சாப்பிட்டுவிட் டுக் கை கழுவிக் கொண்டிருந்தார் அவர். என்னைப் பார்த்து விட்டு என் பக்கமாய் வந்தார். வெட்கத்தைத் தள்ளிவிட்டு வெற்றிலையை அவர் கையில் கொடுக்கப் போனேன். பார்க்காதவர் போல் விஷமம் செய்தார் சிரித்தபடி. ரொம்ப முயன்று கடைசியில் ''வெற்றிலை எடுத்துக் கொள்ளுங்கள்'' என்றேன்.

என் கை நடுங்கியது. அவர் வெற்றிலையைப் பெற்ற வாறு என் கையை அழுத்திப் பிடித்தார். ''நேற்று என்னைத் தேடினாயாமே? நிசி சொன்னாள்'' என்றார்.

போக்கிரிப் பெண் இந்த பவுல். என்னைப் பற்றி என்னவெல்லாம் கதை அளக்கிறாளோ! அவள் சொல்வ தெல்லாம் பொய் என்று மறுத்துக் கூறக் கூட விடவில்லை என் பாழாய்ப் போன வெட்கம்.

என் மௌனத்தைப் பார்த்து ''நான் இங்கு வருவது உன்னைப் பார்க்க. நீயோ வெட்கப்பட்டு என்னுடன் பேசாவிட்டால், நான் வருவானேன்?''

பவுல் என் பக்கத்தில் எப்பொழுது வந்து நின்றாள் என்று எனக்குத் தெரியவில்லை. நாத் அண்ணன் அவ ளைப் பார்த்து ''என்ன நிசி, என்னுடன் வருகிறாயா, வா'' என்று நடக்க ஆரம்பித்தார். பிறகு திரும்பி, ''நல்லது, இன்று இங்கேயே தோழியுடன் இருந்துவிட்டு நாளைக் காலையில் வந்துவிடு'' என்றவாறு போய்விட்டார்.

தூண் மறைவிலிருந்து அவர் போவதைப் பார்த்தபடி நின்றேன். ஒரே ஒரு விஷயம்தான் விடாமல் என்னுள் ஒலித்தது. உண்மையாகவே அவர் எனக்காகவா இங்கு வருகிறார்? ஆனந்தப் புயல் வீசியது என் மனதுள். என்னைக் காண்பதற்காக மட்டுமே இங்கே வருகிறார்! வேறு எதற்காகவுமல்ல! இந்த விந்தையை நூறு முறை சொல்லிக் கொண்டேன். மனதில் ஆயிரம் முறை ஒப்புக் கொண்டேன்; ஆனாலும் திருப்தி ஆகவில்லை. ஒரு நிமிடம் முன் பவுல் மேல் இருந்த என் கோபமும் தாபமும் இருந்த இடம் தெரியாமல் மறைந்து விட்டன.

மலர்கள் என்றால் எனக்கு எப்பொழுதுமே பிடிக்கும். அதனால்தான் பின் தோட்டத்தில் கணக்கற்ற பூச் செடிகளைப் பயிரிட்டிருந்தேன். ஒரு நாள் மாலை திடீ ரென்று 'நித்திய கல்யாணி மலர்ந்திருக்க வேண்டுமே, போய்ப் பார்க்கலாம்' என்று தோட்டப் பக்கம் போனேன். அங்கு பவுல் எப்பொழுதோ வந்து கூடை நிறையப் பூ பறித்துவிட்டிருந்தாள். என்னையும் பூ பறிக்க கூப்பிட் டாள். ''போதுமடி இவ்வளவு. இத்தனை மலர்களை என்ன செய்வதாம்?'' என்றேன்.

''என்ன செய்வதா'' சிரித்தபடி என்னைப் பார்த்தாள் பவுல்.

''இது தெரிந்திருந்தால் நீ சாயங்காலம் இப்படி அமைதி யாய் வீட்டில் இருப்பாயா?'' என்றாள்.

''போறும் உன் கேலி. வா போகலாம்.''

இருவரும் வந்து திண்ணையில் உட்கார்ந்தோம். என்ன விஷமம் இந்த பெண்ணிற்கு.' கூடை பூவையும் என் தலையில் கொட்டிவிட்டு ஹீ ஹீ என்று சிரித்தாள். அந்த மலரின் ஸ்பரிசத்தில் என் உடல் லேசாய் நடுங்கியது.

''இது என்ன இப்படிச் செய்தாய்?'' என்று கேட்டேன்.

''முதலிரவு படுக்கை'' என்று சொல்லி சிரித்தாள்.

''யாருடன்''? என்றேன்.

''யாருடனா? நில் ஒரு நிமிஷம் உன் கணவனின் பெயர் என்ன சொல். எனக்கு மறந்து போயிற்று''

ஆறிவரும் புண்ணில் திரும்பக் காயம் படுவதைப்

போலிருந்தது இந்தப் பேச்சு. ஏதோ நெஞ்சில் வலித்தது. ஆனால் என் பேச்சு நிற்கவில்லை. "போறும் நிறுத்து. எப்பவும் கேலிதானா?" "இல்லை உண்மைதான். வேடிக்கையல்ல. உன் புக்ககத்திலிருந்து அழைப்பு வந்திருக்கிறது. சித்தி சொன்னாள். உனக்கு என்ன வந்துவிட்டது சதி? உன் முகம் ஏன் இப்படி வெளிறிவிட்டது?" சொல்லிக் கொண்டே என் கழுத்தைக் கட்டிக் கொண்டாள்.

மூழ்கிக் கொண்டிருப்பவரிடமிருந்து கடைசி பிடிப்பும் பறிக்கப்படும் பொழுது ஏற்படும் பீதியை ஒத்திருந்தது என்னுள் எழுந்த வேதனை. அப்பொழுது எனக்கென்னாயிற்று என்று எனக்குப் புரியவில்லை. "பவுல்" தோழி அழைத்தாள். என் தலையைத் தன் நெஞ்சில் அணைத்தபடி உட்கார்ந்திருந்தாள் பவுல். "உனக்கு என்ன ஆயிற்று, சதி? என் மேல் ஆணை சொல்லித்தான் ஆக வேண்டும்" என்றாள்.

"ஒன்றுமில்லை. ஏதோ மயக்கமாய் வந்தது" என்றேன்.

"உன் கணவனின் பெயரைக் கேட்டா?"

அப்பொழுது எனக்குச் சிரிப்புத்தான் வந்தது. "பின் என்ன? போடி, அசட்டுப் பெண்ணே!" என்றேன்.

அந்த விஷயம் அங்கேயே முடிந்து போயிற்று. பச்சை நிற வெள்ளக்காடாய்ப் பரவியிருந்த வயல்களின் பசுமை மாலை இருளில் முழுகிப் போகும் மேகக் கூட்டத்தை நினைவுப்படுத்தின. பகலில் எப்பொழுதோ வெய்யிலை ஜமுக்காளமாக விரித்துக் காற்று உறங்கிக் கிடந்தது. மாலையில் அது விழித்த பொழுது அந்த ஜமுக்காளம் அங்கே இல்லை. அதைத் தேடி காற்று வயல்களினூடே சலசலத்துக் கொண்டிருந்தது. உன்மத்தம் பிடித்தவர்களைப்போல் நாங்களிருவரும் அந்தப் பக்கமே பார்த்தபடி உட்கார்ந்திருந்தோம். கடைசியில் பவுல் புறப்பட்டாள். "போய் வருகிறேன். இருட்டிக் கொண்டு வருகிறது" என்றாள். "சரி" என்று சுரத்தில்லாமல் விடை கொடுத்தேன். அவள் போய்விட்டாள். மன உளைச்சலில் மூழ்கிப்போய் நான் அங்கேயே அமர்ந்திருந்தேன். அடர்ந்த குளிர்காலக் காற்று, வீட்டு புகை கூண்டிலிருந்து

வரும் புகை எல்லாவற்றையும் திரட்டி ஒரு அரளியின் நீண்ட கொம்பொன்றுக்குத் தலைப்பாகையாய்க் கட்டிவிட்டிருந்தது. புல்லில் ஒளிந்துக் கொண்டு ஒரு வெட்டுக்கிளி இரவின் அமைதியைக் கிழித்துக் கொண்டிருந்தது - கர் கர் - கர்.

அம்மா என்னை எழுப்பிக் கொண்டு போனாள். இரவு வெகு நேரமாகிவிட்டது. நான் பேசாமல் போய் அறைக்குள் படுத்துக் கொண்டேன். ஆனால் தூக்கம் வரவில்லை. என் பாழாய்ப்போன கண்களுக்கு, தூக்கம் அன்னியமாகி விட்டது. எல்லாவிதக் கவலைகளும் என்னைச் சூழ்ந்து கொண்டன. இன்று பழெல் சொன்ன விஷயம் உண்மை தான் போலும். இல்லாவிட்டால் அப்பாவும் அம்மாவும் முகுந்தபுரத்தைப் பற்றிப் பேசுவானேன்? கலியாணத்தன்று அவரை நான் ஒரே ஒரு முறை பார்த்தேன். அவ்வளவுதான். அன்று என் மனதில் பதிந்துபோன அவர் உருவத்தை இன்று நினைத்துப் பார்க்கும்பொழுது நாலு புறமும் இருளே எனக்குத் தெரிந்தது. அவருடன் தானே நான் குடும்பம் நடத்தவேண்டும்? பிற இச்சைகளை எல்லாம் துறந்து அவரை மட்டும் நினைத்தல்லவா நான் வாழ வேண்டும்! ஆனால் இந்த அனர்த்தங்களுக்கெல்லாம் யார் பொறுப்பாளி? அந்த நாத் அண்ணனேதான். என் கலியாணத்திற்குப் பிறகு இத்தனை நாள் கட்டக்கிலேயே தங்கினவர் இன்னும் ஒரு வருடம் அங்கேயே இருந்திருக்கக் கூடாதா? அவரை ஒரு விதமாய் மறந்திருந்தேன். பின் ஏன் இப்படி இப்பொழுது தேவரூபத்துடன் வந்து என் மனதைச் சபலப்படுத்த வேண்டும்? அவருடைய அழகும், அன்பும், ஆதரவும் என்னைக் காந்தமாய் ஈர்த்தன. நான் என்ன செய்வேன்? அவரைச் சரணடைவதை விட வேறென்ன வழி எனக்கு?

அம்மா என்னைச் சாப்பிட அழைத்தாள். நான் மறுத்து விட்டேன். ஆனால் அம்மா அன்புடன் திரும்ப அழைக்கவே என்னால் தட்ட முடியவில்லை. அவளுடைய அன்பான அழைப்பு என் கண்களில் நீர் அருவியை வாவழைத்தது. அந்த இருட்டிலும் அம்மா நான் அழுவதைத் தெரிந்து கொண்டு, முதுகைத் தடவியபடி ''எங்கே

யாவது வலிக்கிறதா, அம்மா?'' என்றாள்.

''தலையை ரொம்ப வலிக்கிறது'' என்றேன். என் பக்கத்திலமர்ந்து விசிற ஆரம்பித்தாள். என்னை அறியாமல் தூக்கம் என்னை ஆட்கொண்டது. பட்டினியாய் உறங்கிவிட்டேன்.

அடுத்த நாள் நான் பாக்கு வெட்டிக் கொண்டிருந்தேன். பவுலின் தாய் எங்கள் வீட்டிற்கு வந்தாள். பல நாள் வியாதிக்குப் பிறகு அன்று என் அம்மா வெளியில் வந்து வராந்தாவில் உட்கார்ந்திருந்தாள். பெரியம்மா அவளைப் பார்த்து '' என்ன நடந்துகொண்டிருக்கிறது?'' என்று கேட்டாள்.

''என்ன இருக்கிறது நடக்க?'' என்றாள் அம்மா. ''வாயேன் உள்ளே.''

''இன்று எப்படி உனக்கு வழி தெரிந்தது?''

''ஏன், நான் இங்கு வருவதில்லையா?''

''நான் அப்படி சொல்லவில்லை. தினம் வருவதில்லை. ஏழைகளின் ஞாபகம் எப்பொழுதாவது வருமாயிருக்கும்''.

''என்ன செய்ய, சொல்? நீயும்தான் குடும்பம் நடத்துகிறாய். தெரியாதா உனக்கு வீட்டுத் தொந்திரவெல்லாம்? ஒரு நிமிடம் கண்ணை மூடக்கூட ஒழிவில்லை. இதை எல்லாம் விட்டு விட்டு பூரிக்குப் போய்விடலாமா என்று தோன்றுகிறது.''

''ஆமாம், இப்பொழுது இப்படித் தோன்றத்தான் செய்யும். ஆனாலும் வீட்டில் எல்லவாற்றையும் சரி செய்துவிட்டுத் தானே வெளியில் போக முடியும்? நிசிக்குக் கலியாணம் செய்யவேண்டும், வீட்டிற்கு மருமகள் வரவேண்டும். இவ்வளவு வேலை இருக்கிறதே உனக்கு!''

''உங்கள் ஆசிர்வாதத்தால் எல்லாம் நடக்க வேண்டும்'' என்றாள் பெரியம்மா. அப்புறம் இருவரும் பேசாமல் கொஞ்ச நேரமிருந்தனர். பிறகு பெரியம்மா,

''ஏன் அம்மா! சதியின் சாந்தி முகூர்த்தத்தைப் பற்றி பேச்சு எழவில்லையா?'' என்று கேட்டாள்.

அறையுள் பாக்கு வெட்டிக் கொண்டிருந்த என் கை அப்படியே உறைந்துவிட்டது. ''ஆமாம், இந்த தையில்

அவளை அனுப்பவேண்டும். என்ன நடக்கிறதோ பார்ப்போம்.''

''கூடிய சீக்கிரம் பெண்ணை அனுப்பிவை, புரிகிறதா? என்றைக்காவது ஒரு நாள் அனுப்பியே ஆகவேண்டும்; இப்பொழுதோ, பிறகோ. எவ்வளவுக்கெவ்வளவு சீக்கிரம் இந்த தொல்லையிலிருந்து விடுதலை கிடைக்கிறதோ அவ்வளவுக்கவ்வளவு நலம்'' என்றாள் பெரியம்மா.

அறையிலிருந்து வெளிவந்து பெரியம்மாவை, ''உன் பெண் உனக்கு இவ்வளவு பாரமாய்த் தோன்றினால் அவளை இதுவரையில் ஏன் கலியாணம் செய்தனுப்பாமல் வீட்டில் வைத்திருக்கிறாய், சொல்'' என்று கேட்க வேண்டும் போலிருந்தது. தன் வயிற்றில் உதிக்கும் பெண், தன் உதிரம் மாமிசம் கூடி வளர்த்த பெண் ஒரு தாய்க்கு இவ்வளவு பாரமாயிருப்பாளா? மாப்பிள்ளை, கிழவனோ, முரடனோ, விகாரமானவனோ எப்படி இருந்தாலும்சரி, பெண்ணை எப்படியாவது அவன் தலையில் கட்டிவிட்டால் போதும். அத்துடன் தாயின் கடமை முடிந்து விடுகிறது. பெண்ணுக்கு உணவும் துணியும் கிடைத்தால் போதும். உண்மையாய் பெண்ணிற்கு அவசியப்படும் சந்தோஷம், சுகம் என்னவென்று யாராவது வாய் தவறி கூட கேட்பது கிடையாது.

கொஞ்சநேரம் பேசிவிட்டுப் புறப்பட்டு விட்டாள் பெரியம்மா. வாசல் வரை போய்விட்டுத் திரும்பி வந்தாள். ''துத்தெரி! நான் வந்த விஷயமே மறந்துவிட்டது பார்'' என்றாள்.

''என்ன விஷயம்'' என்று அம்மா கேட்டாள்.

''இன்று நாத்தின் பிறந்த நாள். இருபத்தி இரண்டாவது வயதில் அவனுக்குக் கிரகக் கோளாறு இருந்தது. அதனால் கடவுளிடம் பிரார்த்தனை செய்து கொண்டேன். நீயும் சதியும் இன்று மாலை வருவீர்களல்லவா பூஜைக்கு?'' என்றாள். ''அவர் வீட்டிலில்லை. நான் எப்படி வருவது? சதி வருவாள்'' என்று அம்மா பதில் சொன்னாள்.

மாலையில் மூட்டமும் புயலுமாய் மூடிக் கொண்டு வந்தது. ''இப்படி இருண்டு வருகிறதே. நீ எப்படி பெரியம்மாவின் வீட்டிற்குப் போவாய்?'' என்று அம்மா

விசாரித்தாள்.

நான் அறையுள் போய்த் தூங்கிவிட்டேன். காற்றில் கதவு, ஜன்னல், அடித்துக் கொண்டன. அந்த ஆரவாரத்தில் நான் திடுக்கிட்டு எழுந்து நடுநடுவே யாராவது என்னைக் கூட்டிப்போக வந்திருப்பார்களோ என்று பார்த்தேன். கடைசியில் நன்றாய்த் தூங்கிப் போனேன். திடீரென்று யாரோ என்னைப் பலமாய் உலுக்குவதை உணர்ந்து தூக்கம் கலைந்தது. என் முன் பவுல் உட்கார்ந்திருந்தாள். என்னைப் பிடித்திழுத்தவாறு, ''கடவுளே! அகற்குள்ளா கவா தூங்கிவிட்டாய்'' என்றாள்.

''நீ எப்பொழுது வந்தாய், பவுல்?'' என்றேன்.

''கொஞ்ச நேரமாகவே உன்னை எழுப்ப முயன்று கொண்டிருக்கின்றேன். புறப்படு, போக வேண்டாமா நாம்?'' என்றாள். முகத்தைத் துடைத்துக் கொண்டு வெளியில் வந்தேன்.

''வா போகலாம்'' என்றேன்.

''அம்மாவிடம் சொல்லிக் கொண்டாயா?''

''சொல்லியாயிற்று.''

மைதானத்தின் மறுபுறத்தில் இருந்த நெற் பயிரின் பூக்களின் வாசனையை முகர்ந்து மயக்கமுற்றிருந்த மழைக் காற்று மேகங்களைக் கலக்கி அட்டூழியப் படுத்தியது. மேகங்கள் இப்படியும் அப்படியுமாய் ஓடிக் கலைந்தன. நாத் அண்ணனின் வீட்டை அடைவதற்குள் நல்ல மழை பிடித்துக் கொண்டது. வெளியில் திண்ணையில் கிராமத்து ஜனங்கள் சிலர் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தனர். நாத் அண்ணனும் அங்கு இருந்திருக்கலாம். பவுலும் நானும் நேரே உள்ளே போய்விட்டோம். சமையலறையில் பெரியம்மா வேலையாயிருந்தாள். என்னைப் பார்த்து ''உன் அப்பா வந்துவிட்டாரா?'' என்று கேட்டாள். ''இல்லையே'' என்றேன்.

''அம்மா என்ன செய்து கொண்டிருக்கிறாள்?''

''சும்மா தானிருக்கிறாள்.''

அங்கு ஏகப்பட்ட கோதுமை மாவு பிசைந்து வைக்கப் பட்டிருந்தது. நாங்களிருவரும் பூரி இடலானோம். பவு லால் ஒரு இடத்தில் அசையாமல் கொஞ்ச நாழி கூட

இருக்க முடியாது. நடு நடுவே வெளியே போய்ச் சுற்றி வந்தாள். என்னைவிட நான்கு வயது சின்னவள் அவள். அவளுடைய வயதில் எனக்கு கிராமத்தவர்களுள் வெகு சிலரையே தெரியும். அவளுக்கோ தெரியாதவர்களே கிடையாது. பூரி எல்லாம் இட்டு முடியும் தருணம். பெரியம்மா அதைப் பார்த்து, அங்கிருந்த என் சித்தியிடம், ''பார்த்தாயா இந்தப் பெண்ணின் வேலைத்திறத்தை! நிமிடத்தில் எவ்வளவு பூரி இட்டு வைத்து விட்டாள்! வேலை என்றால் இதல்லவோ வேலை! எங்கள் நிசியைப் பார் - அதோ குதிரையைப் போல் குதித்துக் கொண்டிருக்கிறாளே.'' பிறகு என்னைப் பார்த்து, ''போதும் அம்மா, நிறுத்திவிடு. நெருப்படியில் இத்தனை நேரமாய் உட்கார்ந்து வியர்த்துப் போயிருக்கிறது. கொஞ்சம் வெளியே போய் உலவி வா'' என்றாள்.

அன்று சாப்பிட்டு முடிந்த பொழுது இரவு ரொம்ப நேரமாகிவிட்டது. என்னை அங்கேயே தூங்கும்படி பெரியம்மா சொல்லுவதாக பவுல் வந்து சொன்னாள். எனக்கும் அங்கேயே இருக்க ஆசையாயிருந்தது. காலையில் நாத் அண்ணனை இன்னுமொரு முறை பார்க்க முடியுமல்லவா? ஆனால் பலவந்தமாய் அந்த இச்சையை அமுக்கிவிட்டு, ''இல்லை பவுல், அங்கு அம்மா காத்துக் கொண்டிருப்பாள்'' என்றேன்.

வீட்டிற்குள் நுழையும் முன்பே திரும்ப நல்ல மழை பிடித்துக் கொண்டது. வராந்தாவில் என்னைப் பார்த்துவிட்டு, அம்மா, ''நன்றாய் நனைந்துவிட்டாய் அல்லவா? போய்த் துணியை மாற்றிக் கொண்டு தூங்கு'' என்று சொன்னாள்.

அம்மா போனபிறகு நான் மெல்ல மெல்ல அறைக்குள் நுழைந்து கதவைத் தாழ்ப்பாளிட்டுக் கொண்டு அப்படியே ஈரத் துணியுடன் தூங்கி விட்டேன். நாத் அண்ணன் தொட்டதினால் மணத்தது என் புடவை. அன்று தான் என் முதல் இரவு என்று எனக்குத் தோன்றிற்று.

...நான்கு நாட்களுக்குப்புறம் என்னைப் புக்ககம் அனுப்ப ஏற்பாடுகள் துரிதமாய் ஆரம்பித்துவிட்டன. பயமும் கவலையும் என்னைச் சூழ்ந்து கொள்ள, நான்

பகல் இரவு என்று பாராமல் உயிரற்றவளைப் போல் படுக்கையிலேயே விழுந்து கிடந்தேன். இப்பொழுது யார் எனக்குத் துணை? என் மனதைத் தெரிந்து கொண்டு யார் என்னை இந்தச் சங்கடத்திலிருந்து மீட்பார்கள்? ஆட்டுக் குட்டியை பலி இடக் கொண்டுபோகும்பொழுது அதன் கண்களில் காணும் பரிதாபத்தை யார் கவனிக்கிறார்கள்? மனிதப் பிறவியான் நானும் அதைவிடப் பரிதாபமான நிலையிலிருந்தேன்.

பிறந்து வளர்நத இடத்தைவிட்டு, அன்று, முன் பின் தெரியாத, பரிச்சயமற்ற மனிதர்களுடன் வாழப் புறப்பட வேண்டும் நான். என் பிரயாணத்தைப் பற்றி பேச்சு எழுந்த அன்றிலிருந்து அம்மாவின் கண்களில் நீர் வற்றவே யில்லை. அன்று அவளால் அழுகையை அடக்க முடிய வில்லை. என்னைக் கட்டிக்கொண்டு அழுதவாறு பிதற்றிக் கொண்டிருந்தாள். நானும் அவளுடன் அழுதேன். அழுத ழுது மூச்சையாகிவிட்டேன் நான். தெளிவு வந்ததும் பெரியம்மா என்னைக் கூட்டிப்போய் பல்லக்கில் உட்கார வைத்தாள். சிவிகையின் கதவு வழியாக நாத் அண்ணன் தெரிந்தார். நான் அவருடைய வேஷ்டியின் முனையைப் பிடித்துக் கொண்டு அழுதேன். அதுவரை அடங்கிக் கிடந்த அவருடைய துக்கமும் பீறிட்டது. எனக்கு அறிவுறுத்திய வாறு சிவிகையுடன் வெகு தூரம் வரை வந்தார். பிறகு திரும்பிவிட்டார். நாத் அண்ணனுடன் கழிந்த பகல் வேளைகளை நினைவு படுத்திய மரங்களும் செடிகளும் வழி நெடுக எனக்கு விடை கொடுத்தன. கிராமத்தின் ஓரத்திலிருந்த அந்தப் பனைத்தோட்டம், அதன் ஓரமாய்த் தழைத்த மூங்கில் புதர்களின் நிழலிலிருந்த பாசிபடிந்த அந்தப் பெரிய கல், எல்லாமே ஒவ்வொன்றாய்த் தோன்றி மறைந்தன. என் கண்கள், நீர் மழையைப் பொழிந்தன. நான் தலையணையில் முகத்தை அழுத்திக்கொண்டு பிணம் போல் கிடந்தன.

அஷ்டமி சந்திரனும் தென்னோலையால் வேய்ந்த பல் லக்கில் அமர்ந்து வேட்டகம் போய்க் கொண்டிருந்தான். வழி நெடுக நின்ற மரங்களின் நிழல்கள் அவனை வரவேற்பதற்கென்றே போல வித விதமான கோலங்களை

வரைந்திருந்தன.

ஓர் இரவு பிரயாணத்திற்குப் பிறகு புக்ககம் போய்ச் சேர்ந்தேன். காலையில் சில பெண்கள் என்னை அழைத்துப்போய் மணையில் உட்கார வைத்தனர். மனித நெருக்கமும், புழுக்கமும் என் மூச்சை அடைத்தன. என் கணவர் - அவரைப் பார்க்க அவா மூண்டது என் உள்ளத்தில். முட்டாக்கை விலக்காமல் மெல்ல தலையை நிமிர்த்தி அவரைப் பார்த்தேன். கடவுளே! என்ன கோரம்! கரிக் கட்டை நிறம்; அதில் அம்மைத் தழும்புகள்! கவர்ச்சியற்ற இந்த உருவத்தை மனதில் இருத்திக் கொண்டு பிற எல்லாவித அழகையும் நான் இனிமேல் மறந்துவிடவேண்டும்! என் வாலிப இச்சைகளை இவரல்லவோ நிறைவேற்றித் தரவேண்டும். எனக்கு எல்லாமே இருட்டிக் கொண்டு வந்தது. எப்படியோ குனிந்த தலை நிமிராமல் உட்கார்ந்திருந்தேன்.

வைதீகச் சடங்குகள் ஆனதும் ஒரு பெண் என்னை அழைத்துப் போய் ஒரு புறமாய் உட்கார வைத்தாள். பிறகு ஒவ்வொருத்தராய் பல பெண்கள் அங்கு வந்து சேர்ந்தனர்-புதுப் பெண்ணைப் பார்க்க. கொஞ்ச நேரத்திற்குள் எள் விழ இடமில்லாதபடி கூட்டம் நெருக்கியது. என்னைப் பார்த்து அவரவர்களின் அபிப்பிராயத்தை வெளியிட்டபடி எல்லோரும் அங்கிருந்து போனார்கள். கடைசியில் என் சமவயதுப் பெண்கள் சிலர் மட்டும் பின்தங்கினர். என்னைப் பேச வைக்கவேண்டும் என்று ஏதேதோ முயன்றனர். நல்லவேளை அப்பொழுது வயது முதிர்ந்த பெண்ணொருத்தி வந்து என்னைக் காப்பாற்றினாள். அவர்களை விரட்டியபடி, ''பாவம், நேற்றிலிருந்து அன்ன ஆகாரமின்றி இருக்கிறாள். களைப்பாயிருக்கும். அவளைப்போய் இப்படித் தொந்திரவு செய்கிறீர்களே. விடுங்கள்'' என்றாள். அவர்களும் மெள்ள மெள்ள அகன்றனர். என்னை உறங்கும்படி சொல்லிவிட்டு அந்த அம்மாளும் கதவை சாத்திக்கொண்டு போய்விட்டாள்.

தூக்கம் எப்படி வரும் எனக்கு? தனிமையில் திரும்ப என் கணவரைப்பற்றி நினைக்கலானேன். அவர் வரும் நேரம் நெருங்கியது. சாத்திரப்படி நான் அவர் மனைவியல்

லவோ? நான் அவருக்கு இரண்டாந்தாரம். ஒரு வயதுக் குழந்தையை விட்டு விட்டு முதல் தாரம் போய்ச் சேர்ந்தாள். அன்றிலிருந்து எனக்காகவே காத்திருந்தார் போலும். இவருடன் ஒன்றி, வாழ்நாளெல்லாம் நான் குடும்பம் நடத்த வேண்டும். இவருடைய முகத்தைப் பார்த்தவாறு நான் என் குழந்தைப் பருவ ஆசைகளை மறந்துவிட வேண்டும் இல்லையா? அச்சமயம் என் மனக்கண் முன் வேறு ஒரு உருவம் தோன்றியது - பரிச்சயமான வசீகரமான ஒரு உருவம். அந்த உருவம் எங்கே, என் கணவர் எங்கே. மலைக்கும் மடுவுக்கும் உள்ள வித்தியாசம்! ஒப்பிட்டுப் பார்க்கவே வெட்கமாயிருந்தது. அந்த வசீகரமும் எனக்கு கிட்டும்படியாகத்தானே இருந்தது. ஆனால்...மேலே யோசிக்க முடியவில்லை. யோசிக்க யோசிக்க பைத்தியமே பிடித்துவிடும் போலிருந்தது. அந்தச் சித்தப் பித்தத்தில்தான் எவ்வளவு ஆனந்தம்!

பகல் வெளிச்சம் குன்றி மாலை வரும் நேரம். நல்ல கல்வீடு தானென்றாலும் நான் இருந்த அறையில் ஒரு கற்றாடி கூட இல்லை. இருட்டில் பேசாமல் நேரம் போனது தெரியாமல் உட்கார்ந்திருந்தேன். எங்கேயோ தூரத்தில் ஆலயமணி ஒலி கேட்டது. விளக்கு வெளிச்சம் எல்லா வீடுகளிலும் தெரிய ஆரம்பித்தது. கொஞ்சம் பொறுத்து சில பெண்கள் என்னைக் கூட்டிப்போய் வேறு ஒரு அறையில் அமர்த்தினர். இங்கும் இருட்டாயிருந்தது. ஒரு மூலையில் மட்டும் அகல் ஒன்று மென்மையாய் எரிந்து கொண்டிருந்தது. அதன் மந்த வெளிச்சத்தில், ஒரு பக்கமாய்க் கிடந்த கட்டிலும், விரிக்கப்பட்ட படுக்கையும் தெரிந்தன. என்னை மூலையிலிருந்த ஒரு பாய்மேல் உட்காரவைத்துவிட்டுப் போய்விட்டனர் அந்தப் பெண்கள். எனக்கு விஷயம் புரிந்துவிட்டது. மின்னலுக்குப் பிறகு வரப் போகும் கர்ச்சனையை பயத்துடன் எதிர்பார்த்திருக்கும் மனதைப்போல், என் மனமும் பதறியது; ஏதோ ஒரு விவரிக்கமுடியாத பீதி என்னைப் பற்றிக் கொண்டது; நெஞ்சு படபடத்தது. என் பயம் எனக்கே புரியவில்லை. அவர் என்ன பாம்பா, புலியா? நான் ஏன் பயப்பட வேண்டும்?

நாழிஆயிற்று; யாரும் வரவில்லை. எனக்குள் தைரியம் பிறந்தது. அவர் எவ்வளவுதான் குரூபியாயிருந்தாலும் அவருடைய மனைவியல்லவா நான். அவரை விட்டால் எனக்கு யார் கதி? எனக்கு அவரைப் பிடிக்கவில்லை என்றால் உலகம் எனக்கு ஆறுதல் அளிக்குமா என்ன? சிரிக்கத்தான் செய்யும் என் அசட்டுத்தனத்தைப் பார்த்து. என்னால் இவரை விரும்ப முடியாதா? முயன்று பார்க்க வேண்டும். அவருடைய எல்லாவிதக் குறைகளையும் மறந்து மனமார அவரை ஏற்றுக் கொள்ளத்தான்தான் வேண்டும். வேறு வழி? களைப்பும், மன உளைச்சலும் என்னை வாட்டி எடுத்தன. என்னால் நிமிர்ந்து உட்கார்ந்தி ருக்கக் கூட முடியவில்லை; எனக்குத் தெரியாமல் அப்ப டியே தூங்கிப் போய்விட்டேன். திடீரென்று குளிர்ச்சியான கை பட்டு என் தூக்கம் கலைந்தது. கலவரத்துடன் என் முட்டாக்கைச் சரி செய்தபடி எழுந்து உட்கார்ந்தேன். நெஞ்சம் தக் தக் என்று அடித்துக் கொண்டது. அந்த மயங்கிய வெளிச்சத்தில் என் முன் நிற்பவர் என் கணவர் என்று புரிந்து கொண்டேன்.

விளக்கை இன்னம் குறைத்தவாறு அவர் என்னைப் பார்த்து, ''வா படுக்கைக்கு'' என்றார்.

நான் பேசவில்லை. அவர் என்னைக் கைகொடுத்து எழுப்பி, படுக்கையருகில் கொண்டு போனார். ''ஏறிக் கொள்'' என்றார். நான் அசையாமல் நிற்கவே என் முக்காடை மெல்ல நீக்கியபடி சிரித்துக் கொண்டே ''இவ்வளவு என்ன வெட்கம்? எனக்கு இதெல்லாம் பிடிக்காது'' என்றார். முதன் முறையாக அவர் சிரிப்பைக் கண்ட நான் அரண்டுவிட்டேன். இப்படியும் ஒரு சிரிப்பா! கடவுளே, இதை நான் பார்க்காமல் இருந்திருக்கக் கூடாதா.

பதுமைப்போல் பேச்சற்று நின்ற என்னைத் தன் கைக ளால் தழுவி, படுக்கையில் இழுத்துக் கொண்டார். நான் அவருடைய கைகளை உதறிவிட்டுப் பின் வாங்கினேன். அவர் திரும்ப என் கைகளைப் பிடித்துக் கொண்டு கோபத்துடன் ''என்ன இது? நான் கடித்தா தின்கிறேன் உன்னை?'' என்று இரைந்தார். சொல்லிக்கொண்டே

என்னைப் பலமாய் இழுத்தார். அந்த இழுப்பைச் சமாளிக்க முடியாமல் நான் அவருடைய மார்பில் சரிந்தேன். திரும்ப நான் சமாளித்துக் கொண்டு உட்காருவதற்கு முன்னாலேயே அவர் என் முகத்தை நிமிர்த்தி முத்தம் இட்டுவிட்டார்.

மின்னல் வேகத்தில் அவரைத்தள்ளி விட்டுக் கட்டிலிருந்து இறங்கினேன். சீ, சீ! மனிதனா இவர்! வெறுப்பும் கோபமும் என்னை ஆட்கொண்டன. அவருக்கும் கோபம் தலைக்கேறிவிட்டது. என்னை ஒரு குழந்தையைப் போல் வாரி எடுத்துப் படுக்கையில் தள்ளி, ''தூங்கு இங்கே'' என்று கர்ஜித்தார். கல்லாய்ச் சமைந்து நான் உட்கார்ந்திருந்தேன். பெருந்தன்மை அற்ற மனிதர் இவர் ! மனைவி என்று இப்படி பலாத்காரமாய் என்னை ஆட்கொள்ள முடியுமா? இவரை விரும்பி, அன்புடன் வாழ வேண்டும் என்று நான் கொஞ்ச நாழி முன்புதான் மனதுள் நிச்சயம் செய்திருந்தேன்-என்ன பேதை, நான்!

அவர் படுக்கையில் மறுபுறமாய்த் திரும்பிப் படுத்துக் கொண்டு விட்டார். தூங்கிவிட்டார் போலும். அவருடன் படுத்துறங்க எனக்குப் பிடிக்கவில்லை. தரையில் படுத்துக் கொள்ளலாம் என்று நான் மெல்ல கட்டிலிருந்து இறங்கினேன். அதற்குள் அவர் என் புடவைத் தலைப்பைப் பிடித்துக் கொண்டு, ''எங்கே போகிறாய்?'' என்று கேட்டார். ''யம லோகத்திற்கு'' என்று கத்த வேண்டும் போலிருந்தது. பதிலொன்றும் கிடைக்காததால் அவருக்குத் திரும்பக் கோபம் வந்துவிட்டது. ''இப்படியே உன் பிடிவாதம் தொடர்ந்தால் உனக்குக் கஷ்டம்தான் வரும் - நினைவிருக்கட்டும். நான் சொல்வதைக் கேள் - வா என்னிடம்'' என்றார்.

திரும்ப என்னை இழுத்தார். நான் விட்டுக் கொடுக்கவில்லை. அவருடன் சண்டை போட பெண்ணான என்னால் முடியவில்லை. தளர்ந்துவிட்டேன். கடைசியில் அவர் என்னைத் தழுவி தன் மார்புடன் அணைத்துக் கொண்டு தன் முகத்தை என் முகம் பக்கமாய் இறக்கினார். ஒரு வேளை மீண்டும் முத்தமிடுவதற்கோ? இம்முறை அவரைத் தடுக்க நான் முயலவில்லை. ஏன்னவாவது

செய்து கொள்ளட்டும் என்று விட்டு விட்டேன். ஆனால் என்னுள் தொப்பளித்த வெறுப்பு என்னையும் மீறிவிட்டது. தெரிந்தோ தெரியாமலோ அவரைப் பின்னுக்குத் தள்ளிவிட்டு, நான் கட்டிலிலிருந்து குதித்து விட்டேன். என்னைப் பிடிக்க அவர் பின் தொடர்வதைக் கண்டு விளக்கை அணைத்து விட்டேன்.

இருளில் அவரால் என்னைப் பிடிக்க முடியவில்லை. தட்டுத் தடுமாறி அவர் என்னைத் தேடி அலைந்தார். அப்பொழுது அவரது தலை கட்டிலில் பலமாய் மோதிக் கொண்டது. வலி பொறுக்காமல் ''இருக்கட்டும், நாளைக் காலையில் நம் கணக்கு வழக்கை பேசித் தீர்த்துக் கொள்வோம். நீ இன்னும் என்னைப் புரிந்து கொள்ள வில்லை. இல்லையா?'' என்று உறுமினார். அப்புறம் எப்படியோ தட்டித் தடவி படுக்கையில் போய் விழுந்து தூங்கி விட்டார். இருளில் ஒன்றும் தெரியவில்லை.

ஒரு மணி நேரம் ஆயிற்று. எவ்வித அரவமும் இல்லை. கதவைப் பிடித்துக் கொண்டு, பாதிப் பிணமாய் பயத்தில் விறைத்துப் போய் நான் நின்று கொண்டிருந்தேன். அசைந்தால் அவர் பிடித்துக் கொண்டு விடுவாரோ என்ற பயம் என்னைக் கட்டையாக்கிற்று. அவருடைய குறட்டை ஒலிக்கத் தொடங்கிய பின் நான் கொஞ்சம் தைரியத்துடன் கதவை மெள்ளத் திறந்து கொண்டு, ஓசை செய்யாமல் வெளியில் வந்து விட்டேன்.

இரவின் கடைசி ஜாமம் பொழுது புலரும் வேளை. அந்த மந்த இருளில் மரங்களும் செடி கொடிகளும் நிழல்களாய்த் தெரிந்தன. கடவுளின் இந்தப் பேருலகில், அவருடைய கருணையை வேண்டி, என் மனதின் புலம்பல் அவரை எட்டும்படி செய்ய, என் நெஞ்சம் உருகி கண்ணீர்ப் பிரவாகமாய் ஒழுகிற்று. கணவன் என்றால் இப்படித்தானிருப்பாரோ என்று தோன்றலாயிற்று. இவரை என்னால் நேசிக்க முடியுமா?

அன்று காலை ஜமீன் வேலையாய் வெளியே போகத் தயாராய்க் கொண்டிருந்தார் என் கணவர். அன்று அவர் திரும்பி வரமாட்டார் என்று கேள்விப்பட்டு என் மனம் குதூகலித்தது.

காலையிலிருந்தே அந்தப் பணிப்பெண் அவருடைய பிரயாணத்திற்கு அவசியமான பொருட்களை தயாராக்கிக் கொண்டிருந்தாள். இவருடைய வீட்டில் வேறு யாரும் இல்லை போலும். ஆனால் எனக்கு ஒரு மாமியார் இருப்பதாய்க் கேள்வி. விதவை அவள். இந்தப் பெண் என் மாமியாராய் இருக்க முடியாது. ஏனென்றால் இவள் தலை முதல் கால்வரை அலங்காரம் செய்து கொண்டிருந் தாள். வயதும் அதிகமிருக்காது. யார் இவள்?

கதவண்டை என்னைப் பார்த்துவிட்டு அவள் என் பக்கம் வந்தாள். நாட்டியக்காரியைப் போல் கையை ஆட்டிக் கொண்டே பேசினாள். ''ஹுஹு! அம்மா குளித்து விட்டு ஈரத் துணியுடன் காத்திருப்பது தெரியவில்லையா உனக்கு?'' என்றாள்.

அவளுடைய பேச்சு என்னுள் கோபத்தை எழுப்பியது. இந்த வீட்டில் எல்லோருமே மரியாதை தெரியாதவர்கள் போலும். ''எனக்குத் தெரியாது'' என்றேன்.

''தெரியாதா? ஒன்றும் தெரியாதவளாய் வந்துவிட் டாயா இங்கு? குளித்தவுடன் உலர்ந்த துணி கொடுக்க வேண்டும் என்றும், பூஜைக்கு தயார் செய்ய வேண்டும் என்றும் யார் சொல்லிக் கொடுக்கப் போகிறார்கள் உனக்கு? குழந்தையா நீ? வெளியே வா.''

பேசிக் கொண்டே போய்விட்டாள். இங்கு வந்து இன்னும் இரண்டு நாள் கூட ஆகவில்லை. வெளியே வந்து என்ன செய்வதாம்? ஒரு பக்கம் பூஜை அறை தெரிந்தது. ஈரத் துணியுடன் அங்கு நின்றாள் ஒரு வயது முதிர்ந்த மாது. முதிர்ச்சி உடலில் தெரியவில்லை. திடமான சிவந்த மேனி. அறிவும் உறுதியும் ஒன்றி விளங்கின அந்த முகத்தில். இவர்தான் என் மாமியார்.

உலர்ந்த துணியைக் கொண்டு வந்து கொடுத்தவாறு அந்தப் பணிப்பெண் எல்லோர் செவியிலும் படும்படி, ''நான் தொடக் கூடாது. அதனால்தான் பிறர் தயவை எதிர்பார்க்க வேண்டியிருக்கிறது. ஒரே நிமிடத்தில் எல்லா சாமான்களையும் கொண்டு வந்து வைக்க முடியும் என் னால்'' என்று பறை சாற்றினாள்.

மாமியார் துணியை மாற்றிக் கொண்டார். என்னைப்

பார்த்து மெள்ள ''வீடு இருக்கும் கோலத்தைப் பார்க்கி றாய், அல்லவா? இவ்வளவு வெட்கப்பட்டால் எப்படிக் காரியமாகும் மகளே?'' என்றார்.

பூஜை அறைக்குள் போய் கதவை மூடிக் கொண்டார். அந்த அறையின் வாசலில் தூணில் சாய்ந்துகொண்டு சிறுவன் ஒருவன் வெகு நேரமாய் நின்று கொண்டிருந் தான். என்னைப் பார்த்துவிட்டு பக்கத்தில் வந்து நின்றான். தலைப்பைப் பிடித்துக் கொண்டு சிரித்தவாறு, ''புது அம்மா'' என்றான். அவனை இடுப்பில் தூக்கி வைத்துக் கொண்டு என் அறைக்கு வந்தேன். காலியாயிருந்தது அந்த அறை. ''உன் பெயர் என்ன?'' என்று கேட்டேன்.

''நடோ என் பெயர்'' என்றான்.

''என்னை எப்படி அடையாளம் கண்டு கொண்டாய், நடோ?'' என்றேன்.

''அதுவா? எவ்வளவோ நாளாக என் செவிலித்தாய் சொல்லிக் கொண்டிருந்தாள். எனக்கு ஒரு புதிய அம்மா வருவாள் என்று. அப்பா போய் மேள வாத்தியங்களுடன் அழைத்து வருவார் என்றாள்.''

''இந்தச் செவிலித் தாய் யார்?''

''தெரியாதா உனக்கு? அந்த ஸௌரபி தான். நீ வந்தபோது கதவண்டை நின்றாளே அவள்தான்''.

அந்தப் பணிப்பெண்ணாய்த்தானிருக்க வேண்டும்.

''இந்த செவலித்தாய் இங்கு என்ன வேலை செய்கி றாள், சொல்'' என்றேன்.

''எனக்குச் சாப்பாடு, பால் எல்லாம் கொடுக்கிறாள். வெளியே அழைத்துப் போவாள். முதலில் அவள் பக்கத் தில் தான் தூங்கிக் கொண்டிருந்தேன். இப்பொழுது கொஞ்ச நாட்களாக பாட்டியுடன் தூங்குகிறேன்.''

''உன்னை அடிப்பாளா இந்தச் செவிலித்தாய்?'' என்று கேட்டேன்.

''ஹ்ராம் .. ப. பால் குடிக்கா விட்டால், முரண்டு செய்தால் என்னை ஒரு பிரம்பால் நன்றாய் அடிப்பாள்.''

''அப்பா ஒன்றும் சொல்லுவதில்லையா நீ அடிபடுவ தைப் பார்த்து?''

''இல்லை. வெறுமனே சிரித்து விட்டு வெளியே போய்

விடுவார்'', கொஞ்சம் யோசித்து விட்டு, ''அவள் அப்பாவை வசியம் செய்து வைத்திருக்கிறாளாம்'' என்றான்.

''பாட்டி?''

''அவர் எப்பவும் பூஜை அறையுள்ளேயே இருக்கிறார். இந்தப் பக்கம் வருவதேயில்லை.''

தாயற்ற இந்த அனாதைக் குழந்தையின் பேச்சைக் கேட்டு எனக்கு அழுகை வந்தது. பாவம் குழந்தை. யாருமே இல்லை போலும். இவனிடம் அன்பு செலுத்த. அவனை நெஞ்சோடு அணைத்தவாறு ''யாரும் இல்லா விட்டால் போகட்டும். நான் இருக்கிறேன் உன்னை நேசிக்க'' என்று மனதுள் சொல்லிக் கொண்டேன்.

ஜமீன்தாரின் வீடு. மனித நடமாட்டம் அடங்க இரவு வெகு நேரமாகி விடது. எஜமானர் வீட்டிலில்லாததால் வேலை ஆட்கள் இரவு இரண்டாம் ஜாமம் வரையிலும் தன்னிச்சையாய் ஆரவாரித்துக் கொண்டிருந்தனர். பிறகு மெள்ள மெள்ள ஒவ்வொருவராய் வீடு போய்ச் சேர்ந்தனர். நானும் படுத்துக் கொள்ளலாம் என்று பாயை விரித்தேன். வெளியில் நடோவின் குரல் கேட்டது. ''புது அம்மா, தூங்கிவிட்டாயா? நானும் உன்னுடன் தூங்க வருகிறேன். என்னுடன் படுத்துக் கொள்ளும் ஆசையில் அன்பிற்காக ஏங்கும் இந்தக் குழந்தை இன்னும் தூங்கவில்லை! அவனை இடுப்பில் வைத்துக் கொண்டு, ''வா என்னுடனே தூங்கு. பாட்டியிடம் போகவில்லையா இன்று?''

''பாட்டியிடம் சொல்லி விட்டேன். இன்று உன்னுடன் தான் தூங்குவேனென்று.''

''அவர் என்ன சொன்னார்?''

''சரி என்று ஒப்புக் கொண்டார்'' என்றான்.

என் சக்களத்தியின் குழந்தை அவன். ஆனால், ஏனோ என்னுள் அவனுக்காக கரையற்ற நேசம் சுரந்தது.

வெளியில் ஸௌரபியின் குரல் கேட்டது. ''நடோ, தூங்க வா.''

என் கழுத்தைக் கட்டிக் கொண்டு கவலையுடன் ''புது அம்மா. இங்கு உன்னுடன் தான் தூங்குவேன் என்று சொல்லி விடு'' என்று வேண்டினான்.

''பாட்டி கூப்பிடுகிறாள், வா'' என்று திரும்ப ஸௌரபி குரல் கொடுத்தாள்.

''நான் பாட்டியிடம் சொல்லிவிட்டேன், இங்கேதான் தூங்குவேன்'' என்றான்.

''அப்பொழுது வா. என்னிடம் தூங்கு'' என்றாள். மேலும் எனக்குப் பொறுக்கவில்லை. ''குழந்தை ஆசைப் படுகிறான். இன்று இங்கேயே தூங்கட்டுமே'' என்றேன்.

என்னை விழித்துப் பார்த்தவாறு, ''முளைவிடும் முன்பே பையன் என்னவோ நியாயம் பேசுகிறான். வா, என்னிடம் தான் தூங்குவாய்'' என்று மிரட்டினாள். பயத்தினால் பொம்மையைப் போல் என்னைப் பற்றிக் கொண்டிருந்த குழந்தையைப் பிடுங்கிக் கொண்டு, ''வாடா, பேய்க்குட்டி. உன் எலும்பை நொறுக்கி விடு வேன் ஜாக்கிரதை'' என்று இழுத்துச் சென்றாள்.

அழுதவாறே நடேசா அவளுடன் போய்விட்டான், என்னைப் பரிதாபமாய்ப் பார்த்தபடி. என் உடலிலிருந்து ஒரு துண்டு சதையை யாரோ வெட்டிக் கொண்டு போய்விட்டதைப் போல் துடித்தது என் மனம். பாயை உதறி விட்டு வெளியில் வந்து உட்கார்ந்து கொண்டேன்.

அடுத்த நாள் காலையிலேயே என் கணவர் திரும்பி விட்டார். ஆட்கள் வெகு சுறுசுறுப்பாய்த் தங்கள் வேலைகளைக் கவனிக்கலானார்கள். என் நேரமும் வந்தாகிவிட்டது, என்று நினைத்துக் கொண்டேன்.

உள்ளே முற்றத்தில் அவருடைய குரல் கேட்டது. என் அறைக்கு எதிரே இருந்த அறையில் அவருடைய துணி மணிகள் வைக்கப்பட்டிருந்தன. திறந்த ஜன்னல் வழியாய்த் தெரிந்த காட்சி என்னுள் வெறுப்பை மூட்டியது. கட்டிலில் அவர் உட்கார்ந்திருந்தார். பக்கத்தில் நின்ற ஸௌரபி அவருடைய சட்டைப் பித்தான்களை அவிழ்த்துக் கொண்டிருந்தாள். இருவரும் சிரித்து மகிழ்ந்து பேசிக் கொண்டிருந்தனர். என்னைப் பார்த்து விட்டு அவர் கதவைச் சாத்தினார்.

இன்னும் என்ன மிஞ்சியிருக்கிறது அவமானப்பட — இதைவிடத் தலைகுனிவு தரக்கூடியது எதுவும் உண்டா?

அறையில் சுவரில் சாய்ந்தபடி உட்கார்ந்திருந்தேன்.

பணிப்பெண் ஒருத்தி பால் நிறைந்த குவளையை என்னிடம் வைத்தபடி, ''அம்மணி, இந்தப் பாலை நடோ பாபுவுக்குக் கொடுக்கச் சொன்னாள் ஸௌரபி அம்மா.''

சரியாய்க் கேட்கவில்லை. ''யார் சொன்னார்கள்?'' என்று கேட்டேன்.

''ஸௌரபி'' என்றாள்

ஒரு உதைவிட்டு குவளை தவலை எல்லாவற்றையும் எறிந்துவிட என் மனம் தூண்டிற்று. கோபத்தை அடக்கிக் கொண்டு, ''என்னால் முடியாது. அவளையே கொடுக்கச் சொல்'' என்றேன். அந்தப் பெண் போய்விட்டாள். சிறிது நேரம் பொறுத்து எதிர் அறையிலிருந்து அவருடைய குரல் கேட்டது. ''முடியாதாமா? இங்கே அவள் யஜமானி என்று எண்ணமோ? நடோ, நீ அவளிடம் போ'' என்றார்.

கதவைத் தடாம் என்று திறந்துகொண்டு, நடோவை இழுத்தவாறு என் அறைக்குள் வந்தாள் ஸௌரபி. நடோவை அங்கேயே விட்டு விட்டுப் போனாள். அவன் என் மடியில் உட்கார்ந்து கொண்டு ''புது அம்மா, ரொம்பப் பசிக்கிறது'' என்றான். என் கோபமும் தாபமும் போன இடம் தெரியாமல் மறைந்தன. அவனைக் கட்டிக் கொண்டு, ''வா, பாலைக் குடி கண்ணே!'' என்றேன்.

பகலெல்லாம் படுக்கையிலேயே விழுந்து கிடந்தேன். தூக்கம் வரவில்லை. ஆனால் இப்பொழுது தூங்காவிட்டால் இரவில் என்னை மறந்து தூங்கிப் போய்விடுவேனோ என்ற பயம். அப்படி நான் அயர்ந்து கிடக்கும் பொழுது அவர் திரும்பவும் என்னை ஆட்கொள்ள முயற்சிக்கலாம் என்ற பீதி என்னை உலுக்கியது. அதனால் கண்ணை மூடியவாறு படுத்திருந்தேன்.

விளக்கு வைத்த பிறகுதான் எழுந்தேன. அப்பவும் எழுந்திருக்க மனம் வரவில்லை. அன்று இரவு என்ன நடக்குமோ? — அதை எதிர்க்க என்னுள் தைரியத்தை வளர்த்தவாறு என் அறையிலேயே இருந்தேன்.

அன்று எஜமானர் வீட்டிலிருந்ததால் வேலையாட்களும் சுறுசுறுப்பாய் வேலைகளை முடித்துக் கொண்டு வேளையோடு போய்விட்டனர். அமைதியாய் இருந்தது வீடு. என் மனம் நிலைகொள்ளாமல் தவித்தது. அன்று நடோ

என்னிடம் தூங்க வரமாட்டானா என்று மனம் ஏங்கிற்று. அவன் வரவில்லை. ஒரு பணிப்பெண் தான், கையில் விளக்குடன் உள்ளே நுழைந்தாள். ''அம்மணி! அந்த அறையில் எஜமானர் உங்களுக்காகக் காத்துக் கொண்டிருக் கிறார்'' என்று மெல்லிய குரலில் சிறு நகையுடன் கூறினாள்.

முதுகைத் திருப்பிக் கொண்டு சுவரைப் பார்த்தவாறு கட்டிலில் என் கணவர் படுத்திருந்தார். காலடியோசை கேட்டு திரும்பிப் பார்த்தார். ''வா இங்கே'' என்றார். ஒவ்வொரு விஷயத்திலேயும் அவரை எதிர்க்க எனக்கு மனமில்லை. கட்டிலின் பக்கத்தில் போய் நின்றேன். அவர் எழுந்து என்னைப் படுக்கையில் படுக்க வைத்தார். அவரும் என் பக்கத்தில் படுத்துக் கொண்டார் அவருடைய வெப்பமான மூச்சு என்மேல் படும்படி. ''இப்படி ஒட்டிக் கொண்டு படுத்தால்தானா நாம் கணவன் மனைவி?'' என்று கேட்கத் தோன்றியது. ஆனால் இன்று எல்லாவற் றையும் பொறுத்துக் கொள்ளும் திடத்துடன் நான் எவ்வித எதிர்ப்பும் காண்பிக்கவில்லை.

கொஞ்ச நாழி ஆயிற்று. ''இன்று திரும்ப என்னுடன் மல்லுக்கு நிற்கக் கூடாது, என்ன? நான் என்ன பாம்பா புலியா உன்னை விழுங்கிவிட?'' என்றவாறு அவர் மெள்ள மெள்ள என் முதுகை வருடியபடி என்னைத் தன் பக்கம் இழுத்துக் கொண்டார். நான் ஒன்றும் சொல்லவில்லை. ''சமத்துக் குழந்தையைப் போல் இன்று பேசாமல் தூங்கு. கை காலை உதறிக் கொண்டு என்னைத் தொந்தரவு செய்யாதே'' என்றார். அவர் இழுத்த இழுப் பில் நான் அவருடைய மார்புடன் சங்கமமானேன். திடுக்கிட்டு வேகமாய் எழுந்து உட்கார்ந்து கொண்டு, திடமான குரலில், ''ஓ! இது என்ன நடக்கிறது இப்படி'' என்றேன். அதைத் தொடர்ந்து அவர் நெருப்பைக் கக்கு வார் என்ற பயத்தில் பேசாமலிருந்தேன். ஆனால், அவர் மென்மையான குரலில் ''நல்லது. நான் உன்னை ஒன்றும் சொல்லவில்லை. நீ தூங்கு. குழந்தை நீ. ஒன்றும் தெரியாது, ஒன்றும் புரியவும் புரியாது. அதனால் தான் இதெல்லாம் உனக்கு விஷமாய்க் கசக்கிறது. அதனால்

நானும் பலாத்காரம் செய்ய விரும்பவில்லை. ஆனால் நீ எப்பவுமே இப்படி அறியாதவளாய் இருக்க முடியாதே. கணவன் என்றால், யார், என்ன, என்று தெரிந்திருந்தால் இப்படி நடந்து கொள்ள மாட்டாய். நம் ஹிந்து தர்மப்படி கணவன் தான் மனைவிக்குக் கடவுள்'' என்றார்.

அவரை இடைமறித்து, ''எனக்குத் தெரியும்'' என்றேன்.

அவர் சிரித்தார். ''உனக்கு ஒன்றுமே தெரியாது. சாஸ்திரம் என்ன சொல்கிறது தெரியுமா? மனைவிக்கு கணவனைத்தவிர வேறு புகலிடம் கிடையாது ஜன்ம ஜன்மங்களுக்கு.'' நான் வாய் திறக்கவில்லை. அவர் பேசிக் கொண்டேயிருந்தார். ''நீ இன்னும் குழந்தை, அதனால் உனக்கு ஒன்றும் தெரியவில்லை. ஆனால் இப்படியே என்னை ஒதுக்கி வைத்தாயானால் எனக்கு எப்போதாவது கோபம் வரக்கூடும். அப்பொழுது என்ன ஆகும் தெரியுமா?''

என்ன ஆகும்?''

''உனக்கு சாப்பாடு போடமாட்டேன். கட்டிலில் என்னுடன் படுக்க வைத்துக் கொள்ள மாட்டேன். குடும்பத்தினர் எல்லோரும் உண்ட பிறகு மிஞ்சுவதை உண்டு, கவனிப்பாரின்றி, பிற பணிப்பெண்களைப் போல் விழுந்து கிடப்பாய்.''

அவர் நைச்சியம் பேசி என்னைத் திருத்தும் முயற்சியில் தன் முகத்தை என் முகத்தின் அருகில் கொண்டு வந்தார். நான் திருப்பிக் கொண்டேன் என் முகத்தை. ''இவ்வளவு தானா'' என்றேன்.

''முழுக்க முழுக்க நீ என் உடைமை. நான் என்ன செய்தாலும் யாரும் ஒன்றும் சொல்ல முடியாது. தெரியுமோ இல்லையோ?'' என்றார். பிடி சோற்றுக்காக நான் இங்கு வந்தவள்தானே! பெரிய மனிதர் பக்கத்தில் கொஞ்சம் படுத்துறங்கும் கௌரவத்திற்காக! தொண்டை அடைத்தது, துக்கமும் அவமானமும் தாளாமல்.

''இன்னும் கேட்டுக் கொள். நான் மனம் வைத்தால் இன்றே உன்னை விலக்கி வைத்துவிட்டு வேறு ஒரு விவாகம் செய்துகொள்ளலாம். உன் முரட்டுப் பிடிவாதத்தால் நான் வெறுத்துப் போய் அப்படியே செய்வதேனென்

றால், உன் நிலைமை என்னவாகும் என்று யோசித்துப் பார். உன் சக்களத்தி அரசியைப் போல் கட்டில் மேல் உட்காருவாள். நீ பணிப்பெண்களைப் போல் எல்லோரிடமும் திட்டு வாங்கிக் கொண்டு வராந்தாவில் விழுந்து கிடப்பாய்.''

''நான் என் வீட்டிற்குப் போய்விடுவேன்''.

சிரித்தார் அவர். பிறகு, ''அப்படிப் போனாயானால் அங்கும் மரியாதை கிடைக்காது. ஏச்சுப் பேச்சுத்தான் கிட்டும். எல்லோரும் உன்னை அலட்சியம் செய்வார்கள். தூற்றுவார்கள். அப்பொழுது உன் தந்தை அவமானம் பொறுக்காமல் உன்னை ஒரு நாள் இங்கேயே கொண்டு வந்து தள்ளிவிடுவார்'' என்றார்.

ஈரமற்ற அவருடைய மொழிகள் என்னைக் குத்தித் துளைத்தன. ''நான் எங்கேயாவது போய்விடுவேன்'' என்றேன்.

''அப்படிப்போனாயானால் உன் நிலைமை என்ன ஆகும் தெரியுமா? நீ மறுமணம் செய்து கொள்ள முடியாது. அழகும் வாலிப மிடுக்கும் இருக்கும்வரை சோற்றுக்குக் கஷ்டமிராது. அவ்வளவுதான்'' என்றார்.

என்ன ஆபாசமான பேச்சு இது! இவரால் எப்படி இந்த மாதிரி பேச முடிந்தது, அதுவும் தன் மனைவியைப் பற்றி! வெறுப்பும் மனக் கிலேசமும் என் வாயைக் கட்டிவிட்டன. நான் அசையாமல் நின்றேன். அவர் என் கையைப் பிடித்துக் கொண்டு பேசலானார். ''குழந்தையைப் போல் இருந்து கொள்; ஆனால் குழந்தை புத்தியை விட்டு விடு'' என்று சொல்லிக் கொண்டே என்னை இறுகத் தழுவி முத்தமிட்டார். பொறுமைக்கும் எல்லை உண்டு. அதற்கு மேல் எனக்குத் தாளவில்லை. முழு பலத்துடன் என்னை விடுவித்துக் கொள்ள முயன்றவாறு, ''என்னை விட்டு விடு. இல்லாவிட்டால் கத்தி ஊரையே கூட்டுவேன்'' என்றேன்.

என்னை விடாமல் நெஞ்சில் சாத்தியவாறு ''தொண்டை கிழியக் கத்து. கேட்டவர் யார் இங்கே? காலையில் உன்னைத் தான் கேலி செய்வார்கள், தூற்றுவார்கள்'' என்றார்.

மெள்ள மெள்ள அவருடைய முகம் என் முகத்தை அணுகியது. என்னால் பொறுக்க முடியவில்லை. அவருடையகையை வேகமாய் உதறிவிட்டு வெளியே வந்தேன். வராந்தாவின் அடியில் ஒரு கிணறு இருந்தது. என்னை அவர் பின் தொடருவதைப் பார்த்து விட்டு நான் கிணற்று விளிம்பில் ஏறி நின்றுகொண்டு ''என்னிடம் மேலும் அப்படி நடந்து கொண்டீர்களானால் நான் கிணற்றுள் குதித்து விடுவேன். ஜாக்கிரதை'' என்றேன்.

பயந்துபோன அவர் கீழிறங்கி வரவில்லை. வராந்தாவில் நின்றபடி கோபமாய் கர்ச்சனை செய்தார். ''இரு. உன்னை வழிக்குக் கொண்டு வருகிறேன் பார்'' என்று உறுமிவிட்டு, தன் அறைக்குள் போய் தடாம் என்று கதவைச் சாத்திக் கொண்டார்.

பின் தோட்டத்தின் இருட்டில் எங்கள் பேச்சுத் தெளிவாய்க் கேட்டது. பயத்தினால் என் உடல் சருகைப் போல் ஆடியது. தலைக்கு மேல் ஒரு ஆந்தை கத்தியது. அங்கேயே அடித்து வைத்த பொம்மையாய் நின்றவாறு யோசித்தேன். ''முடியாது. இவருடன் நான் இணைந்து வாழவே முடியாது. முயற்சி வீண்தான்'' என்று என் மனம் கூறியது.

குளிர் காலம் வந்துவிட்டது. காலையில் பனிமூட்டம் தென்பட ஆரம்பித்தது. வயல்களில் கதிர் பொன்னிறமாய் நின்றது. அதன் மணம் எங்கும் பரவி ஒரு வித மயக்கத்தை அளித்தது. அன்றிரவு எங்கள் வாக்குவாதத்திற்குப் பிறகு நாலைந்து நாட்கள் அவர் ஒன்றும் சொல்லவில்லை. ஸௌரபியுடன்தான் அவர் அதிகமாய்ப் பேசிப் பழகினார், வேண்டுமென்றே என் கண்முன்னால். நான் ஒருத்தி அவ்வீட்டிலிருப்பதை அவர் மறந்து விட்டார் போலும். நானும் வெகு ஜாக்கிரதையாய் நடந்து கொண்டேன். இரவில் நடோவை என்னுடன் வைத்துக் கொண்டேன். என்னை அவருடைய அறைக்கு அழைக்க யாரும் வருவதில்லை. நிம்மதியாயிருந்தது. ஆனால் என் அறைக்கு அவர் வந்துவிடுவாரோ என்ற பயமும் இருந்தது. அதனால் உறங்கும் முன் கதவை உள்ளே தாளிட்டுக் கொண்டேன். இரவில் எப்போதாவது விழிப்பு வரும்பொழுது

என் கணவரின் குரலுடன் இணைந்து ஸௌரபியின் குரலும் கேட்கும். அவர்களுடைய பேச்சு டணாரென்று கல்லெறி போல் என் செவியில் அதிரும். ஒவ்வொரு சமயம் எல்லோரையும் எழுப்பிவிடத் தோன்றும். அப்புறம், எப்படியோ போகிறார்கள், எனக்கென்ன என்று ஆகிவிடுவேன்.

காலை வேளையில் மாமியாருக்கு உதவியாய் ஏதாவது செய்து கொண்டிருப்பேன். ஒரு நாள் நான் குளித்துவிட்டு பூஜை அறையில் சந்தனம் அரைத்துக் கொண்டிருந்தேன். அப்பொழுது அவர், ''பஹூ, சாமான் உள்ளின் சாவி இனிமேல் உன்னிடம் இருக்கட்டும். கொடுக்கல் வாங்கல் கணக்கெல்லாம் என்னால் பார்த்துக் கொள்ள முடியவில்லை'' என்றார். ''என்னால் சமாளிக்க முடியுமா?'' என்று மெள்ளக் கேட்டேன். அவர் எப்பொழுதும் சிக்கனமாகத் தான் பேசுவார். ''வேறு யார் இருக்கிறார்கள் சமாளிக்க? கடவுள் ஆராதனையில் என் நாள் எல்லாம் செலவாகிறது. வேறு எதையும் கவனிக்க நேரமில்லை. இந்தச் சாவியை உன்னைத் தவிர வேறு யாரிடமும் கொடுக்க முடியாது'' என்றார்.

எனக்கு மனமில்லை. ஆனால் அவருடைய பேச்சைத் தட்ட முடியவில்லை. சாவியை வாங்கி வைத்துக் கொண்டேன். அன்றிலிருந்து இதுவும் ஒரு கடமையாயிற்று. இந்த மாதிரியான வேலைகளில் நான் என்னை மறந்திருப்பதே உத்தமம் என்று அதையும் வரவேற்றேன். பிற கடமைகளை முடித்துக் கொண்டு, சாமான் உள்ளைத் திறந்தேன். ஸௌரபி கதவண்டை நின்றாள். என்னைப் பார்த்துவிட்டு ஏதோ மனதுள் முணுமுணுத்தபடி அங்கிருந்து போய்விட்டாள்.

பெரிய அறை அது. ஆனாலும் அதில் கால் வைக்க இடமில்லை - அவ்வளவு சாமான். எது எங்கே இருக்கிறது என்று தெரிந்து கொள்ளவே எனக்கு ஒரு மணி நேரமாயிற்று. எல்லாவற்றையும் கீழே வைத்துவிட்டு சரியாக அடுக்க ஆரம்பித்தேன். அதற்குள் சம்பாமா என்ற பணிப் பெண் அங்கு வந்து, ''பஹூ ராணி! சமையலுக்கு சாமான்களை எடுத்துக் கொடு. தவசுப்பிள்ளை எத்தனை

நேரமாய் காத்து நிற்கிறார் தெரியவில்லையா?'' என்றாள்.

இத்தனை நாட்களாக, கண்டும் கேட்டும் தெரிந்து கொண்ட அளவிற்கு எல்லாப் பொருள்களையும் அளந்து ஒரு கூடையில் வைத்து சம்பாமாவிடம் கொடுத்து அனுப்பினேன். பிறகு திரும்ப அறையைச் சீர்திருத்த ஆரம்பித்தேன். அதற்குள் நடோவின் நினைவு வந்தது. இன்னும் அவன் பால் குடித்தாகவில்லை. கதவைப் பூட்டிக் கொண்டு வெளியில் வந்தேன். உடைந்துபோன ஒரு மண் குதிரை மேல் உட்கார்ந்து விளையாடிக் கொண்டிருந்த நடோ என்னைப் பார்த்துவிட்டு ஓடி வந்தான். ''புது அம்மா, எனக்கு ஒரு நல்ல குதிரை வாங்கித் தாயேன்'' என்றான்.

''வாங்கித் தரேன். கண்ணோல்லயோ, வா பாலைக் குடித்துவிடு'' என்றேன்.

''நிச்சயமாய் வாங்கித் தருவியா? என் மேல் ஆணையா?''

''தரேன்டா கட்டாயமாய். வா'' என்றேன்.

என் அறைக்கு அவனைக் கூட்டிப்போய் பாலைக் கொடுத்தேன். அப்பொழுது சமையலுள்ளிலிருந்து ஸௌரபியின் குரல் கேட்டது. ''இதெல்லாம் என்ன? விரல் விட்டு எண்ணும்படிக்கு அரிசியும் பருப்பும் இருக்கின்றன. உருளைக் கிழங்கோ வெங்காயமோ இல்லவே இல்லை. நம் யஜமானன் இதையா சாப்பிடுவார்? எந்த மாதிரி வீட்டிலிருந்து வந்திருக்கிறாளோ இந்தப் பெண்! சாமான் எடுத்துத் தர வக்கில்லாவிட்டால் சாவிக் கொத்தை தலைப்பில் தொங்கவிட்டுக் கொண்டு நடக்க ஏன் ஆசைப் பட வேண்டும்?''

என்ன அவமானம்! எல்லோர் முன்னிலும் ஒரு பணிப் பெண் பேசும் பேச்சா! அவளை அப்பவே விரட்டி அடிக்க மனம் விழைந்தது; ஆனால் வழியில்லை. அங்கேயே உட்கார்ந்தபடி என் கோபத்தின் வெப்பத்தில் வெந்து போய்க் கொண்டிருந்தேன்.

''புது அம்மா! இந்த ஸௌரபி பெரிய சண்டைக்காரி, இல்லையா?''

''ஆமாம், நீ பாலைக் குடி'' என்று பெருமூச்சுடன்

சொன்னேன்.

குளிர் காலத்தின் மென்மையான வெயில். பகல் உண விற்குப் பிறகு எல்லோரும் இங்கேயும் அங்கேயுமாய் தூங்கிக் கொண்டிருந்தனர். எனக்கு மட்டும் தூக்கம் வரவில்லை. திடீரென்று கதவண்ட காலடியோசை கேட்டது; அங்கே என் கணவர் நின்று கொண்டிருந்தார்.

முக்காடை இழுத்துவிட்டுக் கொண்டு எழுந்து உட்கார்ந்தேன். அறைக்குள் வந்து, ''அந்த சாவியை இப்படிக் கொடு'' என்றார்.

''எந்தச் சாவி?'' என்று கேட்டேன்.

''சாமான் உள் சாவி'' என்றார்.

''எதற்காக?''

கோபம் வந்துவிட்டது அவருக்கு. ''ஏன், எதற்கு என்றெல்லாம் உனக்குத் தெரிவானேன்? சாவியைக் கொடு என்னிடம்'', என்றார்.

''சாவியை யாரிடமும் கொடுக்கக் கூடாது என்று அம்மா சொல்லியிருக்கிறார்''

''சரி, அதைப் பற்றி அப்புறம் கேட்கிறேன். இப்பொழுது சாவியைக் கொடு''

சாவிக் கொத்தை தூக்கி எறிந்து விட்டு படுக்கையில் விழுந்தேன். அதை எடுத்துக் கொண்டு அவர் போய்விட்டார். இதெல்லாம் ஸௌரபியின் விஷமம். என்னிடம் வீட்டுப் பொறுப்பு இருப்பது அவளுக்குப் பிடிக்க வில்லை. அவளுக்கு இங்கு என்னைவிட அதிகாரம் ஜாஸ்தி என்று எனக்கு முதலேயே தெளிவாகி விட்டது. ஒவ்வொரு விஷயத்திலும் என்னைத் தாழ்த்தி அவமானப் படுத்துவதில் அவளுக்கு என்னவோ ஒரு திருப்தி. ஏன் என்னிடம் அவளுக்கு இவ்வளவு வெறுப்பு என்று எனக்குப் புரியவில்லை. நான் அவளுக்குக் கெடுதல் ஒன்றும் செய்ததில்லையே. பின் ஏன் இப்படி நடந்து கொள்ளுகிறாள்? மாமியாரிடம் சொன்னால் என்ன என்று தோன்றிற்று. அப்புறம், சாந்தமயாமாயிருந்த அந்த அம்மையின் அமைதியில் இவ்விதச் சிக்கல்களைப் புகுத்தி அனாவசியமாய் அவரைத் தொந்தரவு செய்யக் கூடாது என்று என் மனம் கூறியது. அவராகப் புரிந்துகொண்டால் சரி.

கலியாணத்தன்றே என் விதி கோணலானது என்று புரிந்து விட்டது. இப்பொழுது திருத்த முடியுமா என்ன?

சம்பாமா என்னைக் கூப்பிட்டுக் கொண்டே வந்தாள்.

''பஹு ராணி! விளக்கு வைத்தாகிவிட்டது. சாமான் உள்ளைத் திறக்க வேண்டாமா?'' என்றாள்.

''என்னிடம் சாவி இல்லை'' என்றேன்.

''உன்னிடம் இல்லை என்றால் பின் யாரிடம் இருக்கிறது அம்மா?'' என்று அதிர்ச்சியுடன் கேட்டாள்.

''எனக்கொன்றும் தெரியாது, போ'' என்றேன்.

வெளியில் ஸௌரபியின் குரல் கேட்டது. ''ஓ சம்பாமா, இங்கே வா.''

சம்பாமாவிற்கு ஒன்றும் புரியவில்லை. முட்டாளைப் போல் என்னையே வெறித்துப் பார்த்துவிட்டு அவள் போய்விட்டாள். சாமான் உள்ளைத் திறக்கும் ஒலி என் காதுள் ஊசி முனையைப் போல் குத்தியது.

மாலை வேளை. நடோ என்னிடம் ஓடி வந்தான். ''புது அம்மா, அப்பாவிற்கு நல்ல சுரம். வராந்தாவில் நடுங்கிக் கொண்டு உட்கார்ந்திருக்கிறார்'' என்றான்.

இன்று பகலில் சரியாய்த்தானே இருந்தார். திடீரென்று இது என்ன சுரம்?

''நிசமாகவா?'' என்று கேட்டேன்.

''நிசமாகத்தான். வந்து பாரேன்.''

''அம்மா எங்கே?'' என்று கேட்டேன்.

''அவர் இன்னும் பூஜை அறையை விட்டு வெளியே வரவில்லை.''

பகலொளி மங்கும் சமயம். அவர் பின் தாழ்வாரத்தில் கண்களை மூடியபடி நாற்காலியில் அமர்ந்திருந்தார். காலடி கேட்காதவாறு மெள்ள நடந்து போய் அவருடைய பக்கத்தில் நின்றேன். கண்ணைத் திறவாமலேயே அவர், ''யார்?'' என்றார். உடம்பைத் தொட்டுப் பார்த்தேன். நெருப்பாய்க் கொதித்தது. ''உள்ளே வந்து படுத்துக் கொள்ளுங்கள்'' என்றேன். அவருடைய படுக்கையை விரித்துப் போட்டு படுக்க வைத்தேன். கதவைச் சாத்திக் கொண்டு வெளியே வந்தேன். சம்பாமாவைப் போய் என் மாமியாரை அழைத்து வரும்படி அனுப்பினேன். அவள்

திரும்பி வந்து, ''பெரியம்மா பூஜை அறையுள் இருக்கிறார். கதவு தாழிடப்பட்டிருக்கிறது'' என்றாள்.

''ஸௌரபி எங்கே?''

''தெரியவில்லை. காலையிலிருந்தே வெளியே போய் விட்டாள்''

சுரவேகத்தில் அவர் அமைதியற்றுப் புரண்டார். அவர் பக்கத்தில் போய் நின்று கொண்டு, ''தலையை வலிக்கிறதா? பிடித்துவிடவா?'' என்று கேட்டேன்.

''பரவாயில்லை, வேண்டாம்'' என்று திரும்பிப் படுத்துக் கொண்டார். கொஞ்ச நேரம் பொறுத்துத் திரும்ப அவர் அலட்டிக் கொள்வது தெரிந்தது.

''ஏன் ரொம்பக் கஷ்டமாயிருக்கிறதா?'' என்றேன்.

''உம்... ஒன்றுமில்லை.''

தூக்கத்தில் அவருடைய கை என் மடிமேல் வந்து விழுந்தது. நான் அசையாமல் உட்கார்ந்திருந்தேன். அப்பொழுது அவர் தலையைத் தூக்கிக் கூப்பிட்டார் — ''சதீ, இருக்கிறாயா இங்கே?'' என்றார். அவருடைய முகத்தின் பக்கமாய்க் குனிந்து, ''என்ன வேண்டும்?'' என்றேன்.

''ஸௌரபி எங்கே? கொஞ்சம் கூப்பிடு அவளை'' என்றார். உறுதியுடன், ''அவளை நான் என் தலைப்பில் முடிந்து வைத்துக் கொண்டிருக்கிறேனா என்ன?'' என்றேன்.

அவர் பேசவில்லை. நான் கதவைத் திறந்து கொண்டு தட தடவென்று வெளியேறினேன்.

இரவு நேரம். ஸௌரபி இன்னும் வரவில்லை. பாவம், உடம்பு சுகமில்லை... இப்பொழுது எனக்குக் கோபம் என்ன வேண்டியிருக்கிறது! 'சீ! சீ!' என்று என்னையே நொந்து கொண்டேன்.

மாமியாரின் பூஜை முடிந்தபாடில்லை. திரும்ப நான் அவர் பக்கத்தில் போய் உட்கார்ந்து கொண்டு காலை வருடினேன். தூக்கக் கலக்கத்தில், ''யார், ஸௌரபியா?'' என்றார்.

''இல்லை நான் தான்'' என்றேன்.

தலையைத் தூக்கி என்னைப் பார்த்தார். பிறகு ஏனோ காலை இழுத்துக் கொண்டார். அவமானத்தால் குன்றிப்

போனேன். அங்கிருந்து போய்விட நினைத்தேன். அதற்குள் கதவைத் திறந்துகொண்டு ஸௌரபி உள்ளே வந்தாள். வந்ததும் ஜன்னலைச் சாத்திவிட்டு கட்டிலண்டை வந்தாள். அங்கு என்னைப் பார்த்துவிட்டு கலவரப்பட்டுக் கொண்டு அறையிலிருந்து போய் விட்டாள். காலடியில் பாம்பைக் கண்டு பதறி ஓடுவதைப் போலிருந்தது அவளுடைய ஓட்டம். அவர் விழித்துக் கொண்டுதானிருந்தார். எல்லாவற்றையும் பார்த்தும் இருப்பார். ஆனால் வெட்கப் பட்டுக் கொண்டு கண்ணைத் திறவாமலேயே கிடந்தார்.

எனக்கும் அங்கிருக்கப் பிடிக்கவில்லை. என் அறைக்கே வந்துவிட்டேன். எங்களிருவருடைய விருப்பு வெறுப்புகள் இவ்வளவு மாறுபட்டிருக்கும்பொழுது நாங்கள் எப்படி ஒத்து வாழ முடியும்? முதல் நாளிலிருந்தே எனக்கு எல்லாம் தெரிந்திருந்தும், அன்று திரும்ப ஏன் அவமானத்திற்கு உட்பட்டேன்?

சுரம் குறையவேயில்லை. என் மாமியார் அவரைவிட்டு அகலாமல் பார்த்துக் கொண்டிருந்தார். எனக்கும் நிம்மதியாயிருந்தது. அந்த அறைக்குள் போகவே அவசியம் ஏற்படவில்லை. போனாலும் அவர் தான் என்னுடன் பேசுவதில்லையே!

அன்று காலை குளித்துவிட்டு பூஜைக்காக பூமாலை கட்டிக் கொண்டிருந்தேன். சம்பாமா வந்தாள். ''பஹூ ராணி! உன் பிறந்தகத்திலிருந்து யாரோ வந்திருக்கிறார்'' என்றாள். மாலையை வைத்துவிட்டு ''இங்கே அனுப்பி வை'' என்றேன்.

திடீரென்று ''ஒரு வேளை நாத் அண்ணா வந்திருப்பாரோ'' என்று தோன்றிற்று. போய்க் கொண்டிருந்த சம்பாமாவை நிறுத்தி நானும் அவளுடன் நடந்தேன்.

''நானும் வருகிறேன். எங்கே அவர்?''

''உன் அறையை அடுத்த தாழ்வாரத்தில் உட்கார வைத்தேன்'' என்றாள்.

நாத் அண்ணன் வந்திருப்பாரோ? என் நினைவு இருக்குமா அவருக்கு? பூஜை அறையை மூடிக் கொண்டு என் அறைப்பக்கம் போனேன். பரிதவிப்பில், எதிர்பார்ப்பில், என் உடல் நடுங்கியது. அறைக்குள் நுழைந்தேன். நாத்

அண்ணன் வரவில்லை. வந்தது எங்கள் வீட்டு வயோதிகப் பணியாள். பக்கத்தில் போய், ''என்ன சயிதா, நீ இங்கே எதற்கு வந்தாய்?'' என்று கேட்டேன்.

''உன்னைப் பார்த்து வரும்படி யஜமானர் அனுப்பினார்.''

''அங்கே எல்லோரும் சௌக்கியம் தானே?''

''ஆம். எல்லாம் நலம்.''

''நீ புறப்படும் சமயம் அப்பா என்ன செய்து கொண்டிருந்தார்?''

''வெளியில் உட்கார்ந்திருந்தார்.''

''அம்மா?''

சயிதா சிரித்தான். '' நீ அங்கிருந்து வந்த நாளிலிருந்து யார் முகத்திலும் சந்தோஷக் களையே இல்லை. சிரிப்பு மறைந்து விட்டது. நான் புறப்பட்டு வரும்பொழுது உன் அம்மா ரொம்ப அழுதாள். என்னிடம், ''சயிதா, நீ போகிறாயே,-என் பெண்ணைப்பற்றி எல்லாம் விவரமாய் விசாரித்து வா. மாமியார் அன்பாய் இருக்கிறாரா, ஊண் உணவு சரியாய்க் கிடைக்கிறதா எல்லாம் கேட்டு வா'' என்றார். இந்த அற்ப விஷயம் புக்ககத்திலிருக்கும் பெண்ணின் நலனைப் பற்றிக் கவலைப்படும் ஒரு தாய்க்கு எவ்வளவு முக்கியமாய்த் தோன்றுகிறது! என்னை அறியாமலே கண்களில் நீர் ததும்பியது. முகத்தைத் திருப்பிக் கொண்டு, ''அப்பா என்னை அழைத்து வரும்படி சொல்லவில்லையா?'' என்று கேட்டேன்.

''ஒரு நாள் அப்படிச் சொல்லிக் கொண்டிருந்தார். வாந்திபேதி எல்லாம் நின்று போன பிறகு பெண்ணை அழைத்து வரவேண்டும் என்றார்.''

''கிராமத்தில் காலரா பரவியிருக்கிறதா, என்ன?'' என்று வியப்புடன் கேட்டேன்.

''அதைப்பற்றி ஒன்றும் கேட்காதே அம்மா. அக்கிரகாரத்தில் தினம் இரண்டு சாவு ஆகிறது. இன்று காலை நான் புறப்படும்போது மது பண்டா வாந்தி எடுத்துக் கொண்டிருந்தார். என்ன ஆயிற்றோ அப்புறம்? கட்டக்கிலிருந்து டாக்டரை அழைத்துவர திவாரி வீட்டுப் பேரப் பிள்ளைகள் போயிருக்கின்றனர். நல்ல வேளை இதுவரை நாம் இருக்கும் பக்கம் ஒன்றுமில்லை.''

''ஒன்றுமில்லை என்றால் நல்லது தான்'' நிம்மதியாய் மூச்சு விட்டேன். பிறகு அவனைக் குளித்து, சாப்பிட்டு வர சம்பாமாவுடன் அனுப்பினேன்.

அன்று என் கணவரின் உடல்நிலை தேவலை. சாயங் காலம் என் மாமியார் பூஜை அறையிலிருந்து வெளியே வந்தபோது நான் கதவண்டை நின்று கொண்டிருந்தேன். என்னைப் பார்த்துவிட்டு, ''யார், பஹுவா? என்ன விஷயம் சொல்'' என்றார்.

''எங்கள் கிராமத்தில் காலரா மும்முரமாய்ப் பரவி வருகிறதாம்''

''அப்புறம் ...?''

''இரண்டு நாட்களாவது அங்கு போய் வர ஆசையாய் இருக்கிறது'' என்று பயந்து கொண்டே சொன்னேன். அவருக்குக் கோபம் வந்துவிடுமோ என்று நினைத்தேன். ஆனால் அப்படி ஒன்றும் ஆகவில்லை. லேசாய் முறுவலித் தபடி, ''நான் தடை ஒன்றும் சொல்வதற்கில்லை. ஆனால் ஒரு விஷயம். நடோவின் முடி இறக்க வேண்டும். அடுத்த புதன்கிழமை நல்ல நாள் என்று புரோகிதர் சொல்கிறார். மேலும், என் பிள்ளையின் உடம்பு தேற வேண்டும் என்று நேர்ந்து கொண்டிருக்கிறேன். நீங்கள் எல்லோரும் கோயி லுக்குப் போய் காரியத்தை எல்லாம் முடித்துக் கொண்டு வந்தால் நல்லது என்று நான் நினைக்கிறேன்'' என்றார். பிறகு, திரும்ப, ''நீ கவலைப் படாதே அம்மா, அங்கி ருந்து வந்தவுடனே உன்னைப் பிறந்தகம் அனுப்பி வைக்கி றேன்'' என்ற சொல்லிவிட்டு நடக்க ஆரம்பித்தார். அவர் போவதைப் பார்த்துக் கொண்டே நின்றேன். இவ்வளவு உத்தமமான மாமியாரைப் பெற்ற எனக்கு என்ன குறைவு என்று நினைத்துக் கொண்டேன்.

சயிதா போய்விட்டான். ''எல்லா நிலைமையையும் பார்த்துக் கொண்டாய் அல்லவா? நாங்கள் கபிலேசுவர் போய்த் திரும்பியவுடனேயே யாரையாவது அனுப்பி என்னை அழைத்துப் போகச் சொல் அப்பாவிடம். நாத் அண்ணனிடமும் சொல் இந்தப் பக்கம் ஒரு முறை வந்து போக'' என்று சொல்லி அனுப்பினேன்.

கபிலேசுவர் பிரயாணம் கிட்டி வந்தது. இரண்டே

நாட்கள்தான் இருந்தன புறப்பட. மூன்று நாள் சுரத்திற்குப் பிறகு கொஞ்சம் இளைத்திருந்தார் என் கணவர். அன்று வெளித் தாழ்வாரத்தில் சாப்பிட உட்கார்ந்தார். மாமியார் பக்கத்தில் அமர்ந்து விசிறிக் கொண்டிருந்தார். ''இன்றுவரையிலும் சாமான் ஒன்றும் வாங்கி ஆகவில்லை; நாளன்றைக்கு கபிலேசுவர் போக வேண்டுமே!'' என்றார்.

''என்ன சாமான்? கூடக் கொண்டு போக வேண்டிய பொருட்களை வாங்கச் சொல்லி விட்டேன். சமையலுக்கு வேண்டியவைகளும் தயாராகின்றன. பால், தயிர் இவை எல்லாம் அங்கேயே கிடைக்கும். வேறு என்ன?'' என்றார் என் கணவர்.

''சரி. சிவிகை, வண்டி இதற்கெல்லாம் ஏற்பாடாகி விட்டதா?''

''மூன்று சிவிகைகளுக்கும், இரண்டு சாமான் வண்டிக்கும் சொல்லியிருக்கிறேன்.''

''மூன்று சிவிகை எதற்கு?'' என்று ஆச்சர்யத்துடன் கேட்டார் என் மாமியார்.

''ஏன் நீ வரப்போவதில்லையா அம்மா?'' என்று இவர் கேட்டார்.

''நானும் புறப்பட்டு விட்டால் இங்கு யார் காவல்? பூஜை, நைவேத்தியம் இல்லாமல் சுவாமி பட்டினியிருப்பாரா?''

''ஒரே ஒரு நாள் தானே'' என்றார் என் கணவர்.

''இல்லப்பா, ஒரே ஒரு நாளென்றாலும் நான் போக முடியாது. பஹு வீட்டிலிருந்தால் அவளிடம் பூஜை உள்ளை ஒப்புவித்துவிட்டுப் போவேன். வேறு யாராலும் இந்தப் பொறுப்பை ஏற்க முடியாது'' என்றார் என் மாமியார்.

அவர் பேச்சு எனக்குக் கௌரவமாகவும், கர்வமாகவும் இருந்தது. மனம் குளிர்ந்தது. என் கணவர் சாப்பிட்டுவிட்டுக் கை கழுவிக் கொண்டிருந்தார். ''குழந்தையை அழைத்துப் போகிறோம். எனக்கும் பலவீனமாயிருக்கிறது. இன்னும் யாராவது கூடவந்தால் நல்லது என்று தோன்றுகிறது'' என்றார்.

''வேறு யார் போக முடியும்?'' அம்மா கேட்டார்.

''யாராவது பணிப்பெண்?''

''சம்பா தான் போகிறாளே?''

''அவளுக்கு வயதாகிவிட்டது. தனியாய் சமாளிக்க முடியுமா? இன்னும் யாராவது ...''

''அம்மாவின் முகத்தில் தோன்றிய கோபமும், கடுமையும் அவருடைய வாயை அடைத்தன. அங்கிருந்து புறப்பட்ட விட்டார் என் மாமியார். போகும்போது, ''உன் இஷ்டம் போல செய்து கொள். ஆனால், நான் இன்றே பூரிக்குப் புறப்படுகிறேன்'' என்று சொல்லி விட்டு நடந்தார்.

சீ, மனிதருக்கு வெட்கம், மானம் எல்லாம் ஒரேயடியாய் எப்படி மறந்துவிடுகிறது? அதுவும் பெற்ற தாயின் முன்னிலையில்! அம்மா இன்று உண்மையாகவே பூரிக்குப் புறப்பட்டு விடுவாளோ?

அம்மா அன்று மாலை தன் தேவிதேவதைகளுடன் பூரிக்குப் புறப்பட்டுவிட்டாள். மகனுடைய நடவடிக்கையால் நொந்து போய்த்தான் அன்று புறப்பட்டிருக்க வேண்டும்.

போகும் முன்பு என்னை அழைத்து, ''உனக்கு எல்லா விஷயமும் தெரியும் அம்மா. நான் என்ன சொல்ல இருக்கிறது? கொஞ்சம் ஜாக்கிரதையாய்ப் பார்த்துக் கொள். ஒரு மாதத்திற்குள் திரும்பிவிடுகிறேன்'' என்று அன்புடன் சொன்னார்.

சிவிகை தூக்குபவரின் குரல் ஒலி மங்கின பிறகு நான் என் அறைக்குள் வந்து சுவரில் சாய்ந்தபடி உட்கார்ந்து கொண்டுயோசித்தேன். எல்லாக் கஷ்டங்களையும் பொறுத்துக் கொண்டிருக்கக் காரணமாயிருந்த என் கடைசி பக்கபலமும் இன்று என்னைத் தனியேவிட்டு போய்விட்டார். யாருக்கும் வேண்டாத ஒருத்தியாக விட்டேன் அந்த வீட்டில். எனக்கே வெட்கமாயிருந்தது. இனிமேல் என்னால் யாருக்கும் பிரயோசனமில்லை, யாருக்கும் நான் அவசியமில்லை. எனக்கு இனிமேல் வேலையேயில்லை விடுமுறை தான்.

மெள்ள இருள் கவிய ஆரம்பித்தது. அந்த இருட்டில்,

தனிமையில் என் மன ஆழத்தில் ''இன்று அம்மா போனார். ஒரு வேளை நாளைக்கு நானும் இப்படிப் போக வேண்டியிருக்கலாம்'' என்று தோன்றிற்று.

ஸௌரபியும் எங்களுடன் கபிலேசுவரின் ஆலயத்திற்குப் புறப்பட்டாள். என்னைப் போலவே தனியாய் ஒரு சிவிகை அவளுக்கு ஏற்பாடாயிருந்தது. என் கணவர் வீட்டுள்ளிலிருந்து இன்னும் வெளியில் வரவில்லை. என்னை ஒரு சிவிகையில் உட்கார வைத்தாள் சம்பாமா. இன்னொரு சிவிகையில் ஸௌரபியுடன் நடோ உட்கார்ந்திருந்தான். என்னைப் பார்த்துவிட்டு ''புது அம்மாவிடம் போகிறேன்'' என்றான்.

ஆனால் ஸௌரபி அவனை மிரட்டி அங்கேயே உட்கார வைத்தாள். பிடிவாதம் பிடித்து அழ ஆரம்பித்தான்; ஆனால் கேட்பார் யாருமில்லை. சிவிகைகள் புறப்பட்டன. கிராமத்தைத் தாண்டி வயல் வழியாய் மெள்ள மெள்ளச் சென்றன. பொன்னிறமாயிருந்த நெற்பயிர்கள் காலைப் பனியில் நனைந்து வளைந்துகொடுத்து வழிவிட்டன. மாயாஜாலக் கதையில் வரும் கனவுலகின் பொன்னிறமான ப்டிக்கட்டுகளைப் போல் அவை தோன்றின.

கொஞ்ச தூரம் போன பிறகு ஒரு ஆற்றோரமாய் சிவிகைகள் நின்றன. குளிர் காலம் தான்; ஆனாலும் ஆறு நிரம்பி இருந்தது. அக்கரையில் மரங்களின் ஊடே கோவிலின் பளபளக்கும் கலசம் தெரிந்தது.

எறும்பு வரிசையைப் போல இக்கரையிலிருந்து அக்கரைக்கு மனிதர்கள் போய்க் கொண்டிருந்தனர். அன்று மகாதேவருக்கு புஷ்ப அபிஷேகம். அதனால் தான் அவ்வளவு கூட்டம்.

என் கணவரின் சிவிகை கடைசியில் வந்தது. உடனேயே கட்டளை பிறந்தது: ''வெயில் ஏற ஆரம்பித்துவிட்டது. நேரம் போக்காமல் மேலே போங்கள்'' என்றார். பாய் கட்டிய ஒரு பெரிய படகுள் மூன்று சிவிகைகளும் வைக்கப்பட்டன. நாங்கள் உட்கார்ந்தபடியே இருந்தோம். ஆறு அப்படி ஒன்றும் அகலமில்லை; ஆனாலும் அதைக் கடப்பதற்குள் உச்சிவேளை ஆகிவிட்டது. கோயிலை அடுத்த ஒரு பூங்காவில் சிவிகைகளை இறக்கினர் தூக்குப

வர்கள். வெளியில் நிறைய ஹோட்டல்களும் கடைகளும் சுறுசுறுப்பாய் இயங்கின. கடுகு விழக் கூட இடமில்லாமல் உற்சவக் கூட்டம் நெருக்கி அடித்தது. நடோவின் முடி இறக்கியான பிறகு என் கணவர் அவனை நதியில் குளிப்பாட்டி அழைத்து வந்தார். மத்தியான வேளை, உணவு தயாராயிருந்தது. சாயங்காலம், கூட்டம் கொஞ்சம் குறைந்த பிறகு சுவாமி தரிசனம் செய்யலாம் என்று கவலையற்றிருந்தோம்.

மாலையும் வந்துவிட்டது. கூட்டம் குறையவேயில்லை. மாறாக அதிகமாயிருந்தது. சம்பாமா என்னிடம் வந்து ''பஹு ராணி, இன்னமும் நேரம் தாழ்த்த வேண்டாம் என்று யஜமானர் சொல்லுகிறார். வா, போய் தரிசனம் செய்வோம்'' என்றாள். எல்லோரும் ஒருவர் பின் ஒருவராய் உள்ளே போனோம். முதலில் ஸௌரபி அந்தக் கூட்டத்தில் எப்படியோ இடித்துத் தள்ளிகொண்டு வழி செய்தாள். அவளைத் தொடர்ந்து என் கணவர். பிறகு கோடி உடுத்திய நடோ. அப்புறம் சம்பாமா. கடைசியில் நான். கூட்டத்தைப் பார்த்துவிட்டு சம்பாமா என்னை எச்சரித்தாள். ''பஹு ராணி, என் தலைப்பைப் பிடித்துக் கொண்டு வா. கோவிலுள் வழி இன்னமும் குறுகலாயிருக்கும் ஜாக்கிரதை'' என்றாள். அப்படியும் அங்கேதான் நெருக்கமும் கூடுதலாயிருந்தது. மூச்சைப் பிடித்துக் கொண்டு எப்படியோ அந்த இருளிலும், வெப்பத்திலும் நானும் உள் நுழைந்துவிட்டேன். அட்சதையையும் பூவையும் சுவாமி மேல் போடுவதாக நினைத்துக் கொண்டு யாரோ மனிதன் தலையில் போட்டுவிட்டேன். அப்புறம் வழியே தெரியவில்லை. மேலும் அந்த மோதலில் எப்பொழுதோ எனக்குத் தெரியாமல் சம்பாமாவின் தலைப்பு நுனியையும் என் கை விட்டுவிட்டது.

கோவிலுக்குள் இருட்டில் ஒரு தூணில் மோதிக் கொண்டு நான் நின்றுவிட்டேன். பயத்தால் எனக்குத் தலையைச் சுற்றியது. ரொம்ப நாழிக்கப்புறம் கூட்டம் கொஞ்சம் குறைந்தது. நசுங்கியும் தள்ளிக்கொண்டும் கடைசியில் எப்படியோ வெளியில் வந்து சேர்ந்தேன். எங்கு பார்த்தாலும் மனிதத் திரள். அதில் என்னைச்

சேர்ந்தவர்கள் எவருமே தென்படவில்லை. என்னை அங் கேயே விட்டு விட்டுப் போய்விட்டார்களா என்ன?

பகல் வெளிச்சம் குன்ற ஆரம்பித்துவிட்டது. மேற்கு திசையில் கறுத்த மேகக் கூட்டம் ஒன்று மெள்ள மெள்ள நகர்ந்து கொண்டிருந்தது. மழைக்குப் பயந்து பிரயாணிகள் எல்லோரும் வேகமாக துறைப் பக்கமாய் ஓட ஆரம்பித்த னர். ஆற்றின் கரையில் கூட்டம் சொல்லி முடியாது. ஒரே ஒரு படகுதானிருந்தது. எல்லோரும் அதில் ஏறிக்கொள்ள முயன்றனர். படகு பத்துப் பதினைந்து முழ தூரத்தில் நின்றது. கூட்டத்தில் என்னால் முன்னேற முடியவில்லை. எப்படியோ எட்டிப் பார்த்தேன். எங்கள் மூன்று சிவிகைக ளும் படகுள் வைக்கப்பட்டிருந்தன. பயத்தால் தலை சுற்றியது.

அதே சமயம் என்னைத் தாண்டிக் கொண்டு ஒருவர் கோவில் பக்கமாய்ப் போனார். ஆனந்த அதிர்ச்சியில் ''நாத் அண்ணா'' என்று வாய்விட்டுக் கூவினேன்.

யாரையோ தேடுவதைப் போல் நாலு புறமும் பார்த்த வாறு, கூட்டத்தைத் தள்ளிக் கொண்டு முன்னேறிக் கொண்டிருந்தார். மூழ்கிக் கொண்டிருப்பவனுடைய கால் திடீரென்று மண்ணைத் தொட்டால் அவனுக்கு ஏற்படும் ஆறுதல் போலவே எனக்கும் இருந்தது அங்கு நாத் அண்ணனைக் கண்டது. பீதி எல்லாம் கனவாய் மறைந்து போயிற்று மந்திரவாதியின் வித்தைபோல். படகின் அரு கில் கூட்டம் கொஞ்சம் குறைந்திருந்தது. ஆனால் நான் கல்லாய்ச் சமைந்து அங்கேயே நின்றேன். முயன்றிருந்தால் ஒருவேளை அப்போதும் படகுள் ஏறிக்கொண்டிருக்க லாமோ? எந்தப் பேராசையோ என்னை ஆட்கொண்டு, என் சுயபுத்தியைத் தன் வசமாக்கிக் கொண்டது.

வேகமாய் அடித்த காற்று, மரம் இலைகளை உலுக்கி விட்டது. படகிலிருந்து நடோ கத்தி அழுதது கேட்டது. ''புது அம்மா எங்கே, என் புது அம்மா எங்கே?'' அப்புறம் எனக்குத் தாளவில்லை. இரு கைகளாலும் பலமாய் கூட்டத்தைத் தள்ளிக் கொண்டு படகை நோக்கி ஓடினேன். ஆனால் அதற்குள் பாலப் பலகையை நீக்கிவிட் டுப் படகு புறப்பட்டுவிட்டிருந்தது. ஆகாசத்திற்கும் பூமிக்

குமாய் கனத்த மழை பிரளயமாய்ப் பொழிய ஆரம்பித்து விட்டது. மரங்களூடே காற்று ஊளையிட்டது. களைத்துப் போய் அங்கேயே நின்றுவிட்டேன். அந்த ஊழிக் காற்றில், என் தலையையும் உடலையும் மறைத்த புடவை படபடத்தது. துறையிலிருந்த எல்லோரும் என்னையே உறுத்துப் பார்த்துக் கொண்டிருந்தனர். எனக்கு அதுகூடத் தெரிய வில்லை.

திடீரென்று பின்னால் யாரோ என் முதுகைத் தொட்டார். திடுக்கிட்டுத் திரும்பினேன் - நாத் அண்ணன்.

''சதீ'' என்றார். என்னால் ஒன்றும் பேச முடியவில்லை. முன் வந்து என் கையைப் பிடித்தபடி ''வா போவோம்'' என்றார்.

புயல் காற்று அடங்கிக் கொண்டிருந்தது. கோயிலின் ஒரு தூணைப் பற்றியபடி நான் பேசாமல் நின்றேன். நாத் அண்ணன் அருகிலேயே இருந்தார். அவரவர்களின் சிந்தையில் மூழ்கிப் போய் நாங்கள் இருவருமே பேச்சற்றிருந்தோம்.

அப்புறம் மெள்ள, 'சதீ' என்று கூப்பிட்டார்.

''உ..ம்'' என்றேன்.

காற்று குறைந்து போய்விட்டது. ''இந்தத் திறந்த வெளியில் இரவை எப்படிக் கழிப்பாய்?'' என்றார். நான் என்ன சொல்வது?

திரும்ப அவரே பேசினார். ''இப்படி ஒரு ஆபத்தை யார் எதிர்பார்த்தனர்? இருட்டிக் கொண்டுவருகிறது. இரவில் தங்கும்படியான கிராமம் கூட எதுவும் பக்கத்தில்லை.''

''இவருடைய கிராமம் இங்கிருந்து எவ்வளவு தூரம்?''

முறுவலித்தபடி ''ரொம்ப தூரம்; நாலைந்து மைல் இருக்கும். நடுவில் ஆறு வேறே. படகோட்டி இரவில் நம்மை அக்கரைக்கு அழைத்துப் போக சம்மதிப்பானோ என்னவோ'' என்றார். பிறகு கொஞ்சம் யோசித்துவிட்டு ''நீ இங்கே தனியாய் இருப்பாயா? நீ தங்க பக்கத்தில் ஏதாவது வீடு இருக்கிறதா என்று பார்த்து வருகிறேன்'' என்று புறப்பட்டார்.

''நானும் கூட வருகிறேன்'' என்று அவருடன்

போனேன்.

காற்றின் வேகம் அடங்கிவிட்டது. ஆனால் வானம் இருண்டு மழை வரும் போலிருந்தது. பூங்காவைத் தாண்டிக் கொண்டு கோயிலின் பின்புறத்தில் தெரிந்த பாதையில் நடந்தோம் அங்கு தாழ்வாரத்தில் ஒடிந்த கட்டிலொன்றில், கயிற்றால் கட்டி மூக்கின் நுனியில் பொருந்திய கண்ணாடி அணிந்த ஒருவர் அமர்ந்து பாராயணம் செய்து கொண்டிருந்தார். பக்கத்தில் குப்பி விளக்கொன்று புகைந்து கொண்டிருந்தது. காலடி கேட்டு தலையைத் தூக்கிப் பார்த்தார். பிறகு ''யார் அங்கே'' என்று கேட்டார்.

''ஒரு வழிப்போக்கன்'' என்றார் நாத் அண்ணன்

''என்ன வேண்டும்?''

''இருட்டில் கிராமத்திற்குத் திரும்பிப் போக முடியவில்லை. இரவில் தங்க கொஞ்சம் இடம் கிடைக்குமா?'' என்று கேட்டார் நாத் அண்ணன்.

அந்த வயோதிகர் படபடப்பாய், ''இல்லை. இங்கே இடம் கிடையாது. போ. திருடனோ, கொள்ளைக்காரனோ யாருக்குத் தெரியும் ஐயா! வேறு எங்கேயாவது போய்ப் பார்'' என்று விரட்டினார்.

''பக்கத்தில் கிராமம் எதுவும் இல்லையே, ஐயா. இங்கு வேறு கடையும் இல்லை. நான் எங்கு போய்த் தேட முடியும்?''

''எங்கும் இடம் கிடைக்காவிட்டால் கோயிலின் தாழ்வாரம் கிடக்கிறது. நிம்மதியாய் அங்கு தூங்கலாம், போய்வா.''

''மழை வந்தால் கோயில் தாழ்வாரத்தில் கொஞ்சம்கூட இடம் இல்லை, ஒதுங்கிக் கொள்ள. கூரை ஒரே ஒழுகல்.'' நாத் அண்ணன் கொஞ்சம் முன்னேறி கட்டிலின் மேல் இருபது ரூபாயை வைத்தவாறு ''இங்கேயே தயவு செய்து இரவில் தங்க ஏற்பாடு செய்ய முடியாதா?'' என்று கேட்டார். பணத்தைக் கண்டதும் அந்த ஆள் அப்படியே உருகிப்போனார். புன்சிரிப்புடன் ''சொந்த மனிதர்களுக்கு உதவாமல் இருக்க முடியுமா? கட்டாயம் இடம் தரத்தான் வேண்டும். உள்ளே வாருங்கள் ஐயா. இன்னும் யார் கூட?''

ஓ! மனைவியா? அப்பொழுது கட்டாயம் ஒரு தனி அறையே தருகிறேன்'' என்றார்.

இதைக் கேட்டு என்னுள் வெட்கமும், ஆனந்தமும் கலந்த அலை ஒன்று எழும்பி உடனேயே அடங்கியது. கட்டிலிலிருந்த குப்பி விளக்கை எடுத்துக்கொண்டு அந்த வயோதிகர் உள்ளே போனார். இருளில் நாத் அண்ணன் என் தோளைப் பிடித்தபடி சிரித்தவாறு ''நீ இங்கு என்னுடன் தனியாய் இருக்க முடியுமா?'' என்றார்.

''நான் எங்கும் இருக்க முடியும்'' என்றேன்.

''பயப்பட மாட்டாயா?''

''எனக்குப் பயமேயில்லை.''

''இவ்வளவு தைரியம் உனக்கு எப்பொழுது வந்தது?'' கேலியாய்க் கேட்டார்.

கடைக்காரர் வெளியில் வந்து ''ஒரு அறை போதும் இல்லையா? மற்றொரு அறையில் ஏகப்பட்ட சாமானிருக்கிறது. வாருங்கள், உள்ளே போய்க் கை கால் அலம்பிக் கொள்ளுங்கள். நான் படுக்கை அனுப்புகிறேன்'' என்றவாறு சுவர் பக்கமாய் முகத்தைத் திரும்பிக் கொண்டு நின்றார். எனக்கு மரியாதை போலும்! நாத் அண்ணன் என்னைப் பார்த்து முறுவலித்தார். அப்பொழுது அங்கு நின்று யோசிக்க நேரமில்லை. நான் உள்ளே போனேன். அவரும் பின் தொடர்ந்தார்.

உள்ளே முற்றம். அதை ஒட்டி கடை. கதவைத் தாண்டி இரு அறைகள். மண் சுவர். அறையைத் திறந்தபடி நாத் அண்ணன் என்னைப் பார்த்து ''போ உள்ளே உட்கார்ந்து கொள், நான் விளக்கு கொண்டு வருகிறேன்'' என்று சொல்லியபடி போனார்.

அந்த இருளில் குளிர்ந்த மண் தரையில் உட்கார்ந்து யோசிக்கலானேன். பரவாயில்லை ஏற்பாடு. ஒரே அறை; படுக்கையும் ஒன்றுதானோ? சேர்ந்து படுத்துக் கொள்ள அவசியப்படலாம். அந்த நினைவில் வெட்கத்தால் உடல் சிலிர்த்தது. கூடவே ஏதோ விவரிக்க முடியாத ஒருவித இன்ப அலை என்னுள் எழுந்து அடங்கியது. முன்பு ஒரு சமயம் இப்படி நிர்ப்பந்தமாய் ஒருவருடன் இரு இரவுகளைக் கடத்த வேண்டி இருந்தது. ஆனால் அன்றும்

இன்றும்! எவ்வளவு வித்தியாசம் ! ஒத்துப் பார்க்க முடியாத வேற்றுமை.

மழையும் காற்றுமாய் அடித்த சாரல் மரங்களை உலுப்பியது. இருள் சூழ்ந்த அந்த நிலைமையில் என் மனம் ஒருவித விரக்தியுடன் ''என் விதி எதுவானாலும் அது நடக்கும். நான் செய்யக் கூடியது ஒன்றுமில்லை'' என்று சமாதானப்பட்டது.

படுக்கை, விளக்குடன் திரும்பி வந்தார் நாத் அண்ணன்.

''எனக்குப் பசியேயில்லை ஒன்றும் வேண்டாம். நீங்கள் சாப்பிடுங்கள்.'' படுக்கையைக் கீழே வைத்துவிட்டு உட்கார்ந்தார் நாத் அண்ணன். ''எனக்கும் பசியில்லை'' என்றார் சிரித்தபடி.

''நான் மட்டும் பொய்யா சொல்லுகிறேன்?''

அவர் பேச்சு வேடிக்கையாயிருந்தது. ''சரி சாப்பிடுகிறேன்'' என்றேன். வெளியில் வீட்டுக்காரரின் குரல் கேட்டது. ''ஐயா சிற்றுண்டி கொண்டு வந்திருக்கிறேன்'' என்றார். நாத் அண்ணன் அவரிடமிருந்து வாங்கி வந்த பெரிய தொன்னை நிறைந்த ரஸகுல்லாவையும் ஒரு தட்டையும் என் முன் வைத்தார். ரஸகுல்லாக்களைத் தட்டில் கொட்டி அவர் முன் வைத்தேன். ''எடுத்துக் கொள்ளுங்கள் முதலில்.''

''நீ?'' என்று ஆச்சரியத்துடன் கேட்டார்.

''நீங்கள் முதலில் ஆகட்டும். நானும் எடுத்துக் கொள்ளுகிறேன்'' என்றேன். ''அப்புறம் வாக்குத் தவறினாயானால் அடி விழும்'' என்று சொல்லிக்கொண்டு சாப்பிட ஆரம்பித்தார். எனக்காக நிறைய மிச்சப்படுத்தி வைத்தார். எனக்கு மனமில்லை எதுவுமே சாப்பிட. ஆனால் வாக்குத் தவறலாகாது என்பதற்காக கொஞ்சமாகச் சாப்பிட்டுவிட்டுத் தட்டைக் கழுவி வைத்தேன். அதற்குள் அவர் படுக்கையை விரித்துப் போட்டு அதன் மேல் அமர்ந்திருந்தார். ஆனால் இதென்ன? ஒரே ஒரு படுக்கை தானா? என் மனம் நடுங்கியது.

''வா, உட்கார்'' என்றார் அவர்.

கொஞ்சம் தள்ளி, முகத்தை தொங்கவிட்டபடி தரையில் உட்கார்ந்தேன். வெளிச்சம் மந்தமாயிருந்தது. திரியை

உயர்த்திவிட்டபடி ''இன்று நான் கோவிலுக்கு வந்தது நல்லதாயிற்று. நான் வாராதிருந்தால் நீ தனியே என்ன செய்திருப்பாயோ'' என்றார்.

''நாங்கள் இங்கே வருவதைப் பற்றி உங்களுக்கு எப்படித் தெரியும்?'' என்று கேட்டேன்.

''சயிதா தான் சொன்னான். நீ வேறே அவனிடம் சொல்லி அனுப்பினாய் என்னை வரும்படி. வராமல் வழி?''

எனக்கு மானம் போயிற்று. 'சயிதாவிடம் ஏன் சொல்லி அனுப்பினேனோ! கொஞ்ச நேரம் பொறுத்து, ''பயப் படாதே சதீ, நாளைக்கு ஒரு சிவிகைக்கு ஏற்பாடு செய்துவிட்டேன். உன்னை மாமியார் வீடு வரை கொண்டு போய் விட்டுவிடுவார்கள், சரியா?'' என்றார். என் முக பாவத்தைப் பார்த்து நகைத்தார்.

புக்ககம் போகவேண்டும் என்ற கவலை தானோ என் பசி தாகத்தை அடைத்துவிட்டது? இல்லை, அவர் என்னைக் கேலி செய்கிறாரோ? ''நீங்கள் கூட வரமாட்டீர் களா?'' என்று கேட்டேன்.

''நானா? நீ கூப்பிட்டால் வருகிறேன்.''

இவர் என் ஒவ்வொரு வார்த்தையையும் பெரிதாய் மதித்து எல்லாவிதத் தொந்தரவுகளையும் பொறுத்துக் கொள்ளத் தயார். என் கணவரோ? கடவுளே, மனிதருக் குள் இவ்வளவு வித்தியாசமா? வேகமாய் வீசிய காற்றில் விளக்கு அணைந்துவிட்டது. இருளில் பேச்சற்று மௌன மாய் உட்கார்ந்திருந்தோம். கொஞ்சம் பொறுத்து நீண்ட பெருமூச்சுடன் அவர் என்னைக் கூப்பிட்டார். ''சதீ''

''உ...ம்'' என்றேன்.

''சதீ, இரண்டு மாதங்களுக்கு முன் நீ இந்தக் காற்றைப் போல் சுதந்திரமாய் இருந்தாய். எவருடைய நன்மையோ தீமையோ உன்னைப் பாதிக்கவில்லை. இதே போல் மழை பொழிந்து கொண்டிருந்த ஒரு நாள் என் தங்கை நிசி என்னிடம் வந்து 'அண்ணா, பவுல் நம் வீட்டிற்கு வருவாள். என்றாள். இந்த ஒரு பேச்சைக் கேட்டு என் மனத்தை எங்கெங்கோ ஓடவிட்டேன். கற்பனைகள் என்னை மாயாபுரிக்கே கூட்டிப்போயின. ஆனால் இன்று,

சில தினங்களுக்குள் நம்மிருவர் நடுவிலும் பெரிய அகழி ஏற்பட்டுவிட்டது. தனித்தன்மை வேரூன்றிவிட்டது'' என்றார்.

ஓலமிட்டுக் கத்த என் மனம் விரும்பியது. ''இல்லை, இல்லை, நான் முன்னைப் போலவே இப்பவும் தளையற்றவள்தான், சுதந்திரமானவள்தான். இன்றுவரையில் உன்னைத் தவிர வேறு எவரைப் பற்றிய சிந்தையும் கடுகளவு கூட என்னைத் தீண்டியதில்லை.'' ஆனால் சங்கோசம் என்னைக் கட்டுப்படுத்தியது.

நேரம் ஆயிற்று. அவர் பேசவில்லை. வெளியில் காற்று, மழையின் ரீங்காரம், உள்ளே எங்களுடைய மௌனமான தனிமை. என்னை அவருடன் உறங்க அழைப்பாரோ என்று பயமாயிருந்தது. வேறு வழியுமில்லை. என் உள்ளம் பயத்தால் நடுங்கியது. கொஞ்சம் பொறுத்து அவர், ''சந்தீ, நீ இங்கு படுத்துக்கொள், நான் போகிறேன்'' என்றார். ''நீங்கள் எங்கே படுப்பீர்கள். மற்றொரு அறையிலேயா?'' என்று நிம்மதியுடன் கேட்டேன்.

''நானா? எனக்கென்ன? இதோ தாழ்வாரத்தில் படுத்துக் கொள்ளுவேன். சிலமணி நேரம் தானே?'' என்றார்.

மழையிலும் குளிரிலும் வெளி வராந்தாவிலா? ஒரு கணப் பொழுதிற்கு என் பயம், சங்கை எல்லாம் மறந்துவிட்டது. ''இல்லை, அது கூடாது. வெளியில் படுத்துக் கொண்டால் கட்டாயம் சுரம் பிடித்துக் கொள்ளும். நீங்கள் இங்கேயே படுத்துக்கொள்ளுங்கள்'' என்றேன்.

''அப்புறம் நீ? ஒரு படுக்கைதானே இருக்கிறது'' வேட்கை குரலை நடுக்கியது.

''நானே வெளியில் போகிறேன்'' என்றேன்.

நகைத்தார் அவர். அந்தச் சிரிப்பில் அந்தரங்க வேதனை ததும்பியது.

''இல்லை, அசடே . நான் வாராந்தாவில் தூங்குகிறேன். நீ இங்கேயே படுத்துக்கொள்.'' கதவைச் சாத்தியபடி ''உள்ளே தாழ்ப்பாள் போட்டுக் கொள்'' என்று சொல்லியவாறு வெளியில் இறங்கினர்.

நன்றாயிருக்கிறது! நான் அறையுள் படுக்கையில் நிம்மதியாய்த் தூங்குவதும் அவர் வெளியில் குளிரில் இரவெல்

லாம் வெற்றுத் தரையில் கிடப்பதும்! படுக்கையைத் தள்ளிவிட்டு நானும் ஈரத் தரையில் படுத்துக் கொண்டேன். வெளியில் என் மன உளைச்சலைப் பார்த்து நொக்கரிப்பது போல் புயல் ஊளையிட்டது.

காலையில் அவர் வந்து குரல் கொடுத்தார். முடங்கிக் கிடந்த நான் எழுந்து உட்கார்ந்தேன். முக்காடை சரி செய்துகொண்டேன். ''இரவெல்லாம் கதவு திறந்தா கிடந்தது?'' பிறகு வியப்புடன் ''படுக்கையைத் தள்ளிவிட்டு தரையில் தூங்கினாய், இல்லையா?'' என்றார். ''கட்டிலும் மெத்தையுமா உங்களுக்குக் கிடைத்தது?'' என்று கேட்டேன்.

அவருடைய முகம் மலர்ந்தது. ''சரி புறப்படு, சட்டென்று பல்லைத் தேய்த்துக் கொள். சிவிகை வந்துவிட்டதா என்று பார்க்கிறேன்'' என்றார்.

கொஞ்சம் பொறுத்துத் திரும்பி வந்தார். ''சதீ, சிவிகை எங்கும் கிடைக்கவில்லையாம். ஒரு மாட்டு வண்டிதான் கிடைத்திருக்கிறது. பரவாயில்லையா?'' என்று கேட்டார்.

என்னைப் பற்றி அவருக்குத்தான் எவ்வளவு அக்கறை! ''சரி அதிலேயே போகிறேன்'' என்றேன். அவருடன் வெளியில் வந்து நதியைத் தாண்டி மறுகரையில் நின்ற மாட்டுவண்டியில் உட்கார்ந்தேன். அவர் முன் பக்கம் அமர்ந்து, ''ஆகட்டும், வண்டியை ஓட்டு'' என்று வண்டிக் காரனிடம் சொன்னார். ''எங்கே போக வேண்டும்?'' என்று அவன் கேட்டான். ''நாஉறரிமிச்ராவின் வீட்டிற்கு'' என்றார்.

அப்பொழுது வெயில் புறப்படவில்லை. மழைத் தண்ணீர் வழி எல்லாம் தேங்கி நின்றது. பூமித்தாய் காலையில் குளித்துவிட்டு ஈரத்துணியுடன் நின்றவாறு மரக்கொடிகளின் பசுமையைப் பிழிந்து உடுத்திக் கொண்டிருப்பது போல் இருந்தது. அந்த நேரத்து ஈரமும் பசுமையும். வெளியில் பார்த்தபடி நாத் அண்ணன் வண்டியுள் அமர்ந்திருந்தார். முகத்தில் சிரிப்பில்லை. அவரையே பார்த்தபடி மனதுள் ''இன்னும் கொஞ்ச நேரத்தில் இந்தச் சந்திப்பு முடிந்துவிடும். அப்புறம் எத்தனை நாள் வரை பார்க்காமல் இருக்கவேண்டுமோ? இவ்வளவு துக்கத்திலும், நேற்

றிரவு எனக்குக் கிட்டிய அமைதியும், மகிழ்ச்சியும் லாபமாகவே நான் கணக்கு செய்தேன். மனம் ரொம்ப கஷ்டப்படும்பொழுது அதைச் சமாதானம் செய்ய உபயோகப்படும் விலைமதிப்பற்ற பொக்கிஷமாக, நேற்றிரவின் நினைவு எப்பொழுதும் என்னுள் மறைந்து கிடக்கும்.

வண்டி போய்க் கொண்டிருந்தது. வயலில் பழுத்த நெற்கதிர்கள் மழையில் நனைந்து கிடந்தன - புக்ககம் போக மஞ்சள் பூசிக் கொண்ட புதுப்பெண்ணைப் போல். அதன் வாசனை மாப்பிள்ளையை வரவேற்பதைப் போல் பாவிக்கிறது. வீடுபோய்ச் சேருவதற்குள் வெயில் வந்துவிட்டது. முன் தாழ்வாரத்தில் என் கணவர் அமர்ந்திருந்தார். வண்டி நிற்பதைப் பார்த்து அவர் "யாருடைய வண்டி?" என்று கேட்டார்.

நாத் அண்ணன் வண்டியிலிருந்து இறங்கியவாறு என்னைப் பார்த்து "சதீ நீ இங்கேயே இரு. நான் போய்ச் சொல்லுகிறேன்" என்றார்.

அவர் என் கணவரிடம் போய் என்னமோ மெள்ளச் சொன்னார். வண்டியின் தட்டி வழியாய் நான் பார்த்துக் கொண்டிருந்தேன். நாத் அண்ணனின் பேச்சைக் கேட்டுவிட்டு அவர் கோபாவேசத்தில் "இந்த வீட்டை வேசிகளின் இல்லம் என்று நினைத்தாளா? வெட்கங்கெட்டு வந்துவிட்டாள் தன் முகத்தைக் காண்பிக்க. பட்டணத்தில் வேசியர்களுக்காக நிறைய விடுதிகள் இருக்கின்றன. அவளை அங்கு அழைத்துப் போ. நான் அவள் முகத்தில் கூட விழிக்க மாட்டேன்" என்று கர்ச்சித்தார்.

நாத் அண்ணனுக்கும் கோபம் வந்துவிட்டது. "இதென்ன நீங்கள் இப்படி தாழ்ந்த வகுப்பினரைப் போல் பேசுகிறீர்களே! கொஞ்சம் யோசித்துப் பேசுங்கள்" என்றார். அவருக்குக் கோபம் பொறுக்கவில்லை. "தாழ்ந்த வகுப்பினரா? அது நானா? அவளா? கோயிலில் வேண்டுமென்றே பின் தங்கிக் கொண்டாள். இரவை எப்படி, யாருடன் இருக்கும் உத்தேசத்துடன் அங்கு தங்கினாள் என்று நானும் அறிந்து கொள்ளலாமா? காலையில் வந்திருக்கிறாள் பத்தினிப் பெண் வேஷத்தில். நான் முட்டாளல்ல; எல்லாம் புரிகிறது. என் கண் முன்

வாராமல் போய்விடுவது நல்லது. இல்லாவிடில் ஆட்களைக் கூப்பிட்டு இங்கிருந்து அடித்து விரட்டச் சொல்வேன்'' என்றார்.

மேலும் கேட்கத் தாளவில்லை. வண்டியுள் பிணமாய்க் கிடந்தேன். மாமியார் காதில் இதெல்லாம் விழவில்லையா என்ன? அப்புறம் தான் நினைவு வந்தது — அவரும் ஊரிலில்லை. என் ஒரே பக்க பலமும் அங்கில்லை.

இவர்தான் என் கணவர்! இவருக்காக நான் இரவு முழுவதும் என்னை, என் கற்பைக் காப்பாற்றிக் கொள்வதாக நினைத்துக் கொண்டு தூக்கம் பிடிக்காமல் கிடந்தேன்! நாத் அண்ணன் வண்டிக்குள் உட்கார்ந்தபடி ''வண்டியை ஓட்டு'' என்றார்.

அவ்வருடைய கோபத்தைப் பார்த்து வண்டிக்காரன் பயந்து விட்டான். ''எங்கே ஐயா?'' என்று பயந்த குரலில் கேட்டான். ''ரயிலடிக்குக் கொண்டு போ'' என்றார்.

எங்கே போகிறேன் என்று தெரியாமல் வண்டியில் போய்க் கொண்டிருந்தேன். ஒன்றும் புலப்படவில்லை. எங்கே போவது, என்ன செய்வது? எதுவுமே தெரியவில்லை. இரண்டு நாட்களுக்கு முன் நான் யார், இன்று நான் யார்! எல்லாம் மாறிவிட்டது. ஒரு யுகமே, ஒரு ஜன்மமே கடந்து போனதைப் போல் தோன்றியது. ஒரு சிறு தவறுக்காக, அதன் காரணமாய், எனக்கு, கனவில் கூட நினைக்க முடியாத ஒரு நிலைமை ஏற்பட்டுவிட்டது. அதற்காக யாரும் கொஞ்சங்கூட என்னை மன்னிக்கத் தயாராயில்லை. நம் சமூகத்தில் ஒரு மனைவிக்குக் கணவன் அளிக்கக் கூடிய கொடிய தண்டனை எனக்கு வெகு எளிதில் கிட்டி விட்டது! அதற்கு லவலேசம் கூட மறுப்போ, எதிர்ப்போ யாரும் வெளியிடவில்லை. மறுபுறம் ஆண் வர்க்கம் எதைச் செய்தாலும், கொடும் அநியாயத்தைச் செய்து கொண்டேயிருந்தாலும், அது விஷயமாய் மறுப்புக் கூறவோ, எதிர்க்கவோ யாருக்கும் அதிகாரம் கிடையாது. எல்லாவற்றிலும் ஈன இனம் பெண் வர்க்கம் — அபாக்கியப் பிறப்புக்கள். யௌவனம் என்னும் வழுக்கும் பாதையில் செல்லும் போது, பெண் இனம்

தடுமாறுவதைக் கண்டு, தூற்ற, சமூகம் ஆயிரம் கண்களைத் திறந்து வைத்துக் கொண்டு, உஷாராய்க் காத்துக் கிடக்கிறது. பார்த்துவிட்டால் அப்புறம் தப்புவது கடினம். கூடவே மாரண தண்டனையும் அளிக்கப்படுகிறது. ஆனால் ஆண் இனம்! பேசி என்ன பயன்? அவர்கள் பிறப்பே வேறு.

மாட்டு வண்டி ரயிலடியை அடைந்தபொழுது ரயில் வரும் நேரமாயிருந்தது. நாத் அண்ணன் என்னை உள்ளே அழைத்துப் போனார். கொஞ்ச நேரத்தில் தடதடவென்ற பெரும் ஓசையுடன் தரையை உலுக்கியவாறு, காற்றின் வேகத்துடன் புகையையும் தூசியையும் எழுப்பிக் கொண்டு கறுத்த ரயில் வண்டி வந்து நின்றது. கதையில் வரும் அசுர அரசன் காணாமற் போன தன் பெண்ணைத் தேடிக் கொண்டு ஓடுவதைப் போல் தோன்றியது அந்த ரயிலின் வேகம். கூட்டத்தில் நெருக்கி அடித்துக் கொண்டு, நாங்கள் ஒரு பெட்டியில் ஏறி உட்கார்ந்தோம். வண்டி புறப்பட்டு விட்டது. கிராமப் பெண்ணான எனக்கு எல்லாம் புதியதாகவும், விநோதமாகவும் இருந்தது. ஏதோ கனவைப் போல் தோன்றியது.

ஒரு சிறு வீட்டின் முன் எங்கள் குதிரை வண்டி (பக்கி) வந்து நின்றது. ''இது எந்த இடம், நாத் அண்ணா?'' என்று வியப்புடன் கேட்டேன்.

''இதுதான் கட்டக்'' என்றார்.

இங்கே வரப்போவதைப் பற்றி எனக்குத் தெரியாதே ''கிராமத்திற்குப் போக வேண்டாம்?'' என்று கேட்டேன்.

''ஆமாம், போக வேண்டும். ஆனால் இன்று இல்லை'' என்றார்.

அந்த வீட்டில் ஒரு அறையைப் பெருக்கித் துடைத்து துப்புரவாக்கி, என்னைப் பார்த்து, ''சந்தீ, நீ இங்கே இரு நான் கடைக்குப் போய் வருகிறேன்'' என்றார்.

''நான் இங்கே தனியாய் இருக்க வேண்டுமா?''

''இல்லை, அசட்டுப் பெண்ணே. இந்த வீட்டில் வேறு மனிதர்களும் இருக்கிறார்கள். நான் இதோ வந்து விடுகிறேன்'' என்றார்

அவர் போன பிறகு நான் அறையிலமர்ந்து உலக

இயல்புகளைப் பற்றி யோசிக்கலானேன். இன்று சில மணி நேரங்களுக்கு முன் எனக்கு ஏற்பட்ட துக்கமயமான சம்பவத்தைப்பற்றி என் பெற்றோருக்கும் பிறருக்கும் இன்னமும் சமாசாரம் எட்டியிராது. கிராமத்திலும் யாருக்கும் தெரிந்திராது. ஆனால் தெரியாமலா போகப்போகிறது? ஒரு சிறு தவறுக்காக என்னை என் கணவர் வீட்டைவிட்டு விரட்டியதைப் பற்றித் தெரிந்துகொள்ளுவார்கள். அவருடைய காலடியில் விழுந்து கிடக்காமல் நான் எந்த தைரியத்தில் வந்தேனோ! அதுவும் நாத் அண்ணனுடன்! என் கலியாணத்திற்குச் சில மாதங்கள் முன்பே அவருடன் என் பேச்சு வார்த்தை நின்று போயிருந்தது. சீ! சீ! என் பெற்றோரின் முகத்தில் எப்படி விழிப்பேன்? அன்று கோயில் கும்பலில் நான் நசுங்கிச் செத்துப் போயிருக்கக் கூடாதா? கிராமத்தில் என் கணவர் என்னை ஏன் விலக்கிவிட்டார் என்று கேள்வி எழுந்தால் அப்பா என்ன பதில் சொல்ல முடியும்? என்னால் எல்லோருக்கும் தலை குனிவு. இதற்கெல்லாம் காரணம் இந்த நாத் அண்ணன்தான். வாசலில் நின்று கொண்டு என் கணவருடன் நான் தர்க்கம் செய்ய முடியாதல்லவா? என் சார்பாக இவரன்றோ பேசியிருக்க வேண்டும்? என் கணவரின் கோபத்தைத் தணிக்கும்படி இவர் தாழ்மையாய்ப் பேசவுமில்லை. என்னை வீட்டில் சேர்த்துக் கொள்ளும்படி வேண்டி என் கணவரின் காலில் விழுந்திருக்க வேண்டாமா இந்த அண்ணன்? அப்புறம் அந்த வீட்டில் என் நிலைமை எப்படியிருக்கும் என்று எனக்குத் தெரியாதா? இப்போதும் இதுவரையில் என் கணவரின் படுக்கையைத் தொடாமலேயே இருந்துவிட்டேன். இன்னும் கொஞ்ச காலம் அப்படியே இருந்துவிட்டுப் போகிறது. என் விஷயமாக இவர் ஏன் இப்படி வேதனைப்பட வேண்டும்? ஏதோ அசட்டு அகம்பாவத்தில் பெரிய தவறு செய்துவிட்டேன். அதைத் திருத்தவே முடியாது.

கதவு திறக்கும் ஓசை கேட்டு அந்தப் பக்கம் பார்த்தேன். நாத் அண்ணன் நின்று கொண்டிருந்தார். கூடை நிறைய சாமான்களை ஒருவன் அறைக்குள் வைத்துவிட்டுப் போனான்.

சிரித்த முகத்துடன் ''சதீ'' என்றார். கோபத்தில் நான் போகவில்லை. அவர் மேலும், ''வீட்டிற்கு வேண்டிய சாமான் எல்லாம் வாங்கி வந்திருக்கிறேன், சதீ'' என்றார். வேதனையால் அவருடைய முகம் களை இழந்துவிட்டது. பக்கத்தில் வந்த என் முதுகைத் தடவியபடி திரும்ப, ''சதீ'' என்றழைத்தார்.

''ஏன் அழுகின்றாய்? சொல்லக் கூடாதா எனக்கு?''

''தலைவலி'' என்றேன். கொஞ்சம் யோசித்துவிட்டு வேகமாய், அந்த வெயிலில் வெளியில் போனார். போன வேகத்தில் கூடை அவர் காலால் ஊதைபட்டுக் கவிழ்ந்தது. பானைகளும், குப்பிகளும் உருண்டு, சில உடைந்தும் போயின. ஆனால் அவர் கவனிக்கவேயில்லை. நிமிட நேரத்தில் ஒரு டப்பியுடன் திரும்பி வந்தார். ''இதோ இந்த மருந்தைத் தடவி விடுகிறேன். தலைவலி பறந்து விடும்'' என்றார். பொய்த் தலைவலிக்கு மருந்து. அப்புறம்என்னை நிர்ப்பந்தமாய்ப் படுக்க வைத்து விசிறி விட்டார். நான் பேசாமல் படுக்கையில் கிடந்தேன். கண்களில் நீர் ததும்பியது. இவரிடமா நான் கோபப்படு வது? நான் மௌனமாய் எழுந்தேன்.

''பரவாயில்லையா இப்பொழுது?'' என்று கேட்டார்.

''ஆம். அடங்கி விட்டது'' என்றேன்.

அப்புறம் வீட்டு விஷயங்களைப் பற்றி முன்போலவே சிரித்து சிரித்துப் பேசினார். ''அவசரத்தில் சட்டி பானை எல்லாம் உடைத்து விட்டேன். திரும்ப கடைக்குப் போக வேண்டும்'' என்றார். ''எதற்கு இவ்வளவு பானைகள்? இருக்கிறதை வைத்து சமாளிக்க முடியாதா என்ன?'' என்றேன்.

''போதுமா? அப்பொழுது சரி. இந்த சமயம் சமைய லுக்கு ஆள் கிடைப்பது சிரமம். யாராவது ஏற்பாடு ஆகிற வரை ..''.

அதற்குள் ''சமையலுக்கு ஆள் எதற்கு? நம் இருவருக் கும் என்னால் சமைக்க முடியாதா என்ன?'' என்று நான் சொன்னேன். நகைத்தபடி, ''உன் கைச்சமையலை ருசி பார்க்கும் ஆவலில்தான் நான் இன்று சரியாய் ஆளுக்காகத் தேடி அலையவில்லை. ஆனால் இந்த ஒரே வேளைக்கு

மட்டுந்தான். கடவுள் எனக்கு இந்த துர்ப்புத்தியை மேலும் தராமலிருக்க வேண்டும்'' என்றார். இருவரும் சிரித்து விட்டோம்.

அன்று பகல் உணவிற்குப் பிறகு பரிசாரகனைத் தேடி வெளியே போனவர் ரொம்ப நாழிக்கப்புறமும் வர வில்லை. அன்று புதிதாய் வேலைக்கு வந்திருந்த பணிப் பெண்ணை இரண்டு மூன்று தரம் அவரைத் தேடி அனுப்பி வைத்தேன். ஆனால் அவர் வரவில்லை. வர நேரமாகலாம் என்று நான் இரவுச் சமையலை ஆரம்பித்தேன். கறிகாய் நறுக்க உட்கார்ந்தேனோ இல்லையோ கதவண்டை ஒரு பெண் வந்து நின்றாள். வளமுள்ள குடும்பத்தைச் சேர்ந்த வளாய்த் தோன்றினாள். என் வயதுதான் இருக்கும் அவளுக்கும். எனக்கு அவளை யார் என்று தெரிய வில்லை. நானும் பேசவில்லை, அவளும் பேசவில்லை.

கொஞ்சம் பொறுத்து அவளாகவே பேச்சைத் துவக்கி னாள். ''நான் இரண்டாங்கட்டில் வசிக்கிறேன் இதே வீட்டில். என்னுடைய 'இவர்' கலெக்டர் ஆபிஸில் வேலை பார்க்கிறார். இரண்டு வருடங்களாய் இங்கிருக்கி றோம்'' என்றாள்.

இவர்களைப் பற்றித்தான் காலையில் நாத் அண்ணா குறிப்பிட்டார் போலும்! ''உட்காரேன்'' என்றேன்.

உட்கார்ந்தாள். ''எனக்கு உட்கார எங்கு பொழுது? இன்று மாதக் கடைசி சனிக்கிழமை. அதனால் கச்சேரி யிலிருந்து வர நேரமாகும் இவருக்கு. சாதரணமாய் இந்த சமயத்தில் சரியாய் மூச்சவிடக் கூட எனக்குப் பொழுதிருப் பதில்லை'' என்றாள்.

''இங்கே தனியாகவா இருக்கிறாய் நீ?'' என்று கேட் டேன்.

வியப்புடன் என்னைப் பார்த்தாள். ''ஆமாம்! வேறு யார் இருப்பார்கள்? ஐந்து வருடங்களுக்குப் பிறகு கடவுள் குழந்தை தந்தார்; ஆனால் அதையும் பிடுங்கிக் கொண் டார். அன்றிலிருந்து இவர் வேலைக்குப் போன பிறகு என்றும் தனியாகத்தான் இருக்கிறேன்''.

துக்கமும், வேதனையும் அவள் தொண்டையை அடைத் தன. கொஞ்ச நேரம் மௌனமாயிருந்தாள். குழந்தையை

நினைத்துக் கொண்டு மனதுள் அழுகிறாளோ என்று தோன்றிற்று.

பிறகு சகஜமாய் "இன்றுதான் வந்தீர்களா இந்த வீட்டிற்கு என்றாள்?"

"ஆமாம்" என்றேன்.

"இதற்கு முன் எங்கிருந்தீர்கள்?"

"கிராமத்தில்"

எதையோ யோசித்தவாறு "உன்னுடைய 'அவரும்' கச்சேரியில்தான் வேலை பார்க்கிறாரா என்ன?" என்று கேட்டாள்.

எனக்கு வெட்கமாயிருந்தது. முறுவலித்தபடி தலையைக் குனிந்து கொண்டேன். சிரிப்பு வந்துவிட்டது அவளுக்கு. "சொல்லேன். வெட்கமாயிருந்ததா என்ன? முதலில் நானும் இப்படித்தான் வெட்கப்பட்டேன் அவரைப் பற்றிப் பேச. நான் உன் பக்கத்து வீட்டிலிருப்பவள். என்னிடம் வெட்கப்படுவானேன்?"

"வேறு வழி தெரியாமல், "இல்லை" என்றேன்.

"வியாபாரம் ஏதாவது செய்கிறாரா?"

"இல்லை. ஒன்றும் செய்வதில்லை."

இதைக் கேட்க அதிசயமாயிருந்தது அவளுக்கு. "பின் அவர் கட்டக்கில் என்ன செய்கிறார்?" என்று கேட்டாள்.

"ஊர் சுற்றிப் பார்க்க வந்திருக்கிறோம்" என்று எதையோ சொல்லி வைத்தேன்.

"சுற்றுலாவா?" கண்களில் வியப்புடன் "வெறுமனே ஊர் பார்க்கவா? அதுவும் மனைவியையும் கூட்டிக் கொண்டு? கட்டாயம் நீங்கள் பெரிய செல்வந்தர்களாய்த் தானிருக்க வேண்டும். ஜமீன்தார் குடும்பமா?"

நாத் அண்ணாவை என்னுடன் இணைத்து இப்படிப் பேச்சு வளருவது எனக்கு என்னவோ மாதிரியிருந்தது. ஆனால் அதற்கு முற்றுப்புள்ளி வைப்பதற்காக "ஆமாம் அவர் ஜமீன்தார்தான்" என்றேன்.

மேலும் அவர் எந்த கிராமத்திற்கு ஜமீன்தார், எவ்வளவு பெரிய மிராசு என்று கேட்க அவள் விரும்பியிருக்கலாம். ஆனால் நல்ல வேளையாய் அப்பொழுது வெளியில் செருப்பொலி கேட்டது. அவள் உடனேயே புறப்பட்டு

விட்டாள். ''இன்று போய்வருகிறேன். அப்புறமாய்ப் பார்க்கிறேன் உன்னை'' என்றாள்.

''நல்லது'' என்று விடை கொடுத்தேன். அதற்குள் நாத் அண்ணா சமையலுள் கதவண்டை வந்துவிட்டார். ''நான் நினைத்தபடியே ஆயிற்று. நம் அன்னபூர்ணா இதற்குள் சமையலை ஆரம்பித்துவிட்டிருப்பாள் என்று நினைத்தேன்.'' பிறகு படியில் உட்கார்ந்தபடி, ''என்ன செய்ய, சமையலுக்கு ஆள் இப்பவும் கிடைக்கவில்லை'' என்றார்.

''அதனாலென்ன. காரியமாகிறதோ இல்லையோ?'' என்றேன்.

''அது சரி. ஆனால் உனக்கு வேலை செய்து பழக்க மில்லை. ஆள் அவசியம்தான்.''

''பிறந்தகத்தில் நான் சமையல் செய்து கொண்டுதானே இருந்தேன்?''

''அதெல்லாம் பழங்கதை. கொஞ்சம் வெயில் பட்டவு டனே இன்று உனக்குத் தலைவலி வந்துவிட்டது. ஜமீந் தார் வீட்டு மருமகள், அங்கு சமையல் வேலை கட்டாயம் உன் பொறுப்பாயிருந்திருக்காது''

''நான் பதில் சொல்லவில்லை. பழைய நினைவுகள், புக்கக அனுபவங்கள், வேதனை அலையை எழுப்பின என்னுள். மௌனமாய்த் தலையைத் தூக்காமல் கறிகாய் வெட்டுவதில் ஈடுபட்டேன். அவரும் எங்கேயோ தன்னை இழந்தவராய் அமர்ந்திருந்தார். அப்புறம் நான் அவரைப் பார்த்து, ''போய் துணியை மாற்றிக் கொண்டு வாருங்கள். சமையல் தயார்'' என்றேன். ''இதோ போகிறேன்'' என்றவாறு தன் அறைக்குள் போனார்.

இரவு உணவிற்குப் பிறகு பணிப்பெண் பாத்திரங்களைத் தேய்த்துவிட்டு தன் வீட்டிற்குப் புறப்பட்டாள். முற்றத்துக் கதவைச் சாத்தியபடி, ''கதவைத் தாளிட்டுக் கொள்ளுங் கள். நாய் உள்ளே வந்து பாத்திரங்களை எச்சிற்படுத்தி விடும்'' என்றாள்.

கதவைச் சாத்தப்போனேன் கைவிளக்குடன். அதற்குள் அண்ணா கதவைப் பூட்டிவிட்டுத் திரும்பி வந்து கொண்டி ருந்தார். என்னைப் பார்த்துவிட்டு, ''இந்தக் குளிரில் எழுந்து வர யார் சொன்னார்கள் உன்னை?'' என்றார்.

சிரிப்பு வந்தது எனக்கு. ''உங்களிடம் யார் சொன்னார்கள், தெரிந்து கொள்ளலாமா நான்?'' சிரித்துவிட்டார் அவரும். ''சரி, போய்த் தூங்கு. தாளிட்டுக் கொள் கதவை. திருட்டுப் பயம் அதிகம் பட்டணத்தில்'' என்றார்.

''திருட்டுப் பயமா?'' ஆச்சரியத்துடன் கேட்டேன்.

''ஆமாம் தனியாய்ப் படுத்துக் கொள்ளப் பயப்படுவாயா?''

''எனக்கு பயமே கிடையாது'' என்று சட்டென்று சொன்னேன்.

எனக்காக இவர் இரவு பகலாய் தூக்கம் வராமல் கவலைப்படுகிறார். எனக்கோ இவரிடம் பயம், சந்தேகம் எல்லாம். பெண் இனமே இப்படித்தான் விசுவாசமற்றதோ?

அன்று வெளியில் வெகு தூரம் வரையில் பனி மூட்டம் புகையைப் போல் பாவிக் கிடந்தது. குளிர் கால மூதாட்டி தன் தூசி படிந்த மேலாடையை ஆகாயத்தின் அடியில்; வெயிலில், உலர்த்திருப்பதைப் போல் தோன்றியது.

காலையிலெழுந்து நாத் அண்ணா எங்கேயோ புறப்பட்டு விட்டார். கேட்டதற்கு, ''ஒரு மணி நேரத்தில் வந்து விடுகிறேன்'' என்றார். சமையலுக்காக அரிசி, பருப்பு எடுத்துக் கொண்டிருந்தபொழுது வேலைக்காரி வந்தாள். ''என்னிடம் கொடுங்கள். அம்மா. நான் சமையலுக்கான எல்லா ஏற்பாடுகளையும் செய்து தருகிறேன். நீங்கள் அடுப்பண்டை உட்கார்ந்து கொள்ளுங்கள், போதும்'' என்றார்.

''ஏன்?'' என்று கேட்டேன்.

''சமைப்பதை மட்டும் உங்களுக்கு விட்டு விட்டு, மற்ற எல்லா காரியங்களையும் என்னைச் செய்யும்படி ஐயா கேட்டுக் கொண்டார். சம்பளம் கூட்டித் தருவதாயும் சொன்னார்.''

ஆவலுடன், ''உண்மையாவா?'' என்றேன்.

''ஆமாம். காலங்கார்த்தாலை உங்களிடம் பொய் சொல்லுவேனா அம்மா? என்ன பாவம் செய்தோ எல்லோரையும் விழுங்கி விட்டு உட்கார்ந்திருக்கிறேன். பொய் வேறு பேச வேண்டுமா?''

''இன்னும் என்ன சொன்னார்?''

''அவர் சொன்னதெல்லாம் சரிதானே? குழந்தைப் பருவத்திலிருந்தே எல்லாவித சௌகரியங்களுடன் வளர்ந்தவள் நீ. சமையல் செய்யக் கஷ்டப்படுவாய். ஆனால் என்ன செய்வது? சிரமமாய் இருந்தால் •சமையலுக்கு ஆளுக்குப் பஞ்சமா? கூப்பிடும் முன் ஓடி வருவார்கள். இது கட்டக் நகரம் அல்லவா? பணம் கொடுத்தாலும் இங்கே சமைக்க ஆள் கிடையாது. நான் ஐயாவிடம் சொன்னேன்...''

''என்ன சொன்னாய்?

''கிராமத்திற்கே போய்விடுங்களேன், இங்கே இப்படிக் கஷ்டப்படுவானேன் என்றேன்.''

''அதற்கு அவர் என்ன சொன்னார்?''

''வந்த வேலை முடிந்த பிறகுதான் போகமுடியும் என்றார்''

சப்பென்று போய்விட்டது எனக்கு. அவருக்குக் கிராமம் போவதில் இஷ்டமில்லை. நான் ஒன்றிரண்டு முறை அவரைக் கேட்டதற்கும் சரியாய்ப் பதில் சொல்லவில்லை. முகம் ஏதோ பேயறைந்தாற்போல் ஆகிவிடும், நான் கிராமம் போவதைப் பற்றிப் பேச்செடுத்தால். ஒரு குரூரமான, விஷமமான சந்தேகம் என் மனதை அலட்டிடியது. உறுதியுடன் அதைக் கிள்ளிப் போட்டுவிட்டு வேலையைக் கவனிக்கலானேன்.

கதவண்டை காலடி கேட்டது. அங்கு என் கூட்டுக் குடித்தனக்காரி நின்றாள். உள்ளே வந்தபடி, ''என்ன செய்து கொண்டிருக்கிறாய்?'' என்றாள்.

''ஒன்றுமில்லை. வா உட்கார்'' என்றேன்.

''உட்கார எங்கே பொழுது? இன்று காலையிலேயே ஏதோ வேலை என்று இவர் ஆபிஸிற்குப் போய்விட்டார். வீட்டில் காரியமொன்றும் இல்லை. இப்படி வரலாம் என்று தோன்றிற்று. இங்கேயும் நிசப்தமாயிருக்கிறதே?''

''ஆமாம்'' என்று ஒப்புக் கொண்டேன். ''எங்கே போயிருக்கிறார்? பரிசாரகன் தேடவா? பலே, எப்பேர்ப்பட்ட கணவன் உன் வீட்டுக்காரர்! உனக்கு வீட்டைப் பற்றிக் கவலைப்படவே அவசியமில்லை. வெயில் மழை எதை

யும் சட்டை செய்யாமல் வீட்டு அவசியங்களுக்காகவே அலைகிறாரே.. வேறு என்ன வேண்டும் ஒரு மனைவிக்கு? எனக்கு இந்த மாதிரி கணவன் கிடைத்திருந்தால், கால் தரையில் பாவாது, உண்மையாய்.''

அவள் சொல்லிவிட்டாள்; ஆனால் அவளுக்கு என்ன தெரியும். அவர் என் கணவரல்ல என்று? அப்படியும் எனக்கு ஒரு மனைவிக்கு தோன்றக் கூடிய பெருமை மனதுள் குமிழிட்டது. எனக்குத் தெரியாமலேயே, ''என் அதிர்ஷ்டம்தான்'' என்று ஒப்புக் கொண்டேன். பிறகு கொஞ்சம் பொறுத்து, ''நீ உன் ஊருக்குப் போவதில் லையா? எப்பவும் இங்கேயேதான் இருக்கிறாயா?'' என்று கேட்டேன். ''எங்கே போக, யாருக்காக? கணவர் எப்ப வும் என்னுடன் இருக்கிறார். புக்ககத்தில் மாமியார் கிழவி மட்டும் இருக்கிறாள். வருடத்தில் ஒன்றிரண்டு முறை இங்கு வந்து பத்துப் பதினைந்து நாட்கள் இருந்துவிட்டுப் போகிறாள்.''

''பிறந்தகத்தில்?'' என்று கேட்டேன்.

பெருமூச்சு விட்டவாறு அவள் கூறினாள்:

''அந்த வாசல் ரொம்ப நாளாய் அடைத்துப் போயிற்று. என் ஐந்தாவது வயதிலேயே அப்பா இறந்து விட்டார். இரண்டு வருடங்களுக்கு முன்னால் அம்மாவும் போய்ச் சேர்ந்தாள்'' என்றாள்.

ஏதோ அர்த்தமற்ற பயமொன்று என்னை உலுக்கியது. ரொம்ப நாளாய் என் பெற்றோரைப் பற்றி ஒன்றுமே சமாசாரம் தெரியவில்லை. நாத் அண்ணாவும் அவர் களைப் பற்றி ஒன்றுமே சொல்லவில்லையே? ஏன்? தெளிவற்ற சங்கடமும், உளைச்சலும் என் மனதை கிரா மத்தை நோக்கி விரட்டின. ஏதோ யுகயுகமாய் என் வீட்டினரைப் பார்க்காதது போல மனம் தவித்தது. உணர்ச் சிக் கடலில் என்னைத் தள்ளிவிட்டு என் பக்கத்து வீட்டுக்காரி புறப்பட்டுப் போய்விட்டாள். அன்று எப்படி யும் அவரிடம் இதைப் பற்றிப் பேசியே ஆகவேண்டும். கேட்காவிட்டால் அவருடைய காலில் விழுந்து. கெஞ்ச வேண்டும். என்னுடைய விண்ணப்பத்தை அசட்டை செய்து விடுவாரோ?

அன்ற பகலில் நாத் அண்ணா வராந்தாவில் அமர்ந்து உணவருந்திக் கொண்டிருந்தார். பக்கத்தில் விசிறிக் கொண்டே, தைரியமாய்ப் பேச்சைத் துவக்கினேன். ''இன்னும் எத்தனை நாள் இங்கு இருப்பதாம்? கிராமத்திற்குப் போக வேண்டாமா?'' என்றேன். என் முகத்தைப் பார்த்த வாறு, ''அலுத்துப் போய்விட்டதா இங்கே? சமையல் வேலை வேறு உனக்குக் கஷ்டமாயிருக்கிறது, இல்லையா?'' என்றார்.

''அதில்லை. கஷ்டமொன்றுமில்லை எனக்கு. ஆனால், ...''

''ஆனால் என்ன?''

கிராமத்திற்குப் போய் ரொம்ப நாளாய்விட்டது.''

''அது எனக்குப் புரியாமலா இருக்கிறது? இந்தக் குளிரில் எல்லா வேலையும் உன் தலையில் விழுந்திருப்பதும் தெரிகிறது. எல்லாவற்றையும் நான் பார்க்காதது போல்சகித்துக் கொண்டிருக்கிறேன். என்ன செய்வது சொல். வந்த அன்றிலிருந்து ஓயாமல் அலைகிறேன். சமையலுக்கு ஆள் தேடி'' என்று யோசனையுடன் சொன்னார்.

எனக்கு நல்ல வாய்ப்பு கிடைத்தது. ''கிராமத்தில் இவ்வளவு தொந்திரவு இராது. ஆளுக்காக அலைய வேண்டி வராது அங்கே'' என்றேன்.

ஒட்டாமல், ஏதோ போலியாகச் சிரித்தார். ஒன்றும் பேசவில்லை. எனக்குப் பிடிவாதம் வந்துவிட்டது.

''இனிமேல் பொறுக்காது. இன்றே போகலாம் கிராமத்திற்கு'' என்றேன்.

''இன்றா? எப்படிப் போவதாம் இன்று?'' கேலி தொனிக்கக் கேட்டார்.

''பின் எப்பொழுதாம்?''

''இன்னும் ஒரு மாதம் போகட்டும்?''

என் மனதில் தோன்றிய சங்கைதான் உண்மையோ? காரணமின்றி என்னை நிறுத்தி வைப்பானேன்? எல்லாம் புரிந்து விட்டது எனக்கு. ஒரு நிமிடம் கூட அங்கு தங்க

மனம் கேட்கவில்லை. கட்டாயம் போக வேண்டும். என் கிராமத்திற்கோ, இல்லை வேறு எங்கேயானாலும் சரி, நான் போய்த்தான் ஆகவேண்டும். இவருடைய பச்சோந்தி வார்த்தைகளை நம்பி என் பாவத்தை அதிகரித்துக் கொள்ள நான் விரும்பவில்லை.

உறுதியுடன், ''என்னை இப்படி இங்கு நிறுத்தி வைத்திருப்பதற்குக் காரணம் தெரிய வேண்டும் எனக்கு. மேலும் இங்கு ஒரு நிமிடங்கூடத் தங்க மனமில்லை எனக்கு. இப்போதே என்னைக் கிராமத்திற்கு அழைத்துப் போங்கள். இல்லை என்றால் நான் உண்ணாமல் இப்படியே விழுந்து கிடப்பேன், தெரிந்து கொள்ளுங்கள்'' என்று கண்டிப்பாய் அறிவித்தேன்.

வேதனையால் அவருடைய் முகம் கறுத்துவிட்டது. ''என் சந்தோஷத்திற்காகவா உன்னை இங்கு நிறுத்தி வைத்திருக்கிறேன், சதீ? உனக்கு ஒன்றுமே தெரியாது'' என்று மட்டும் சொன்னார்.

''எல்லாம் தெரியும், ஐயா. அன்று நீ கோவிலுக்கு ஏன் வந்தாய் என்று புரிகிறது. அப்புறம் என் கணவரின் ஆத்திரத்தை சாந்தப்படுத்த முயலாமல், என் சார்பாக மன்னிப்புக் கோராமல், கோபப்பட்டு என்னை அழைத்துக் கொண்டு ஏன் வந்துவிட்டாய் என்றும் புரிகிறது. பதினைந்து நாட்களுக்கப்புறமும் என்னை கிராமத்திற்குக் கூட்டிப் போகாமல் இங்கேயே வைத்திருப்பது ஏன் என்றும் புரிந்து கொண்டு விட்டேன்'' என்று கத்த வேண்டும் போலிருந்தது. ஆனால் வாயைத் திறந்து, ''எனக்கு ஒன்றும் தெரிய வேண்டாம். என்னைக் கிராமத்தில் கொண்டுபோய் விட்டு விடுங்கள் போதும்'' என்று மட்டும் சொன்னேன்.

இதைக் கேட்டு அவர் முகம் ரத்தமற்றுப் போயிற்று. ''குழந்தையைப் போல் இப்படி அடம் பிடித்தாயானால் நான் என்ன செய்ய? இந்த ஒரு விஷயத்தை பற்றி மட்டும் உன்னிடம் என் வாயால் சொல்லலாகாது என்று சபதம் செய்திருந்தேன். அப்படி நான் சொன்னால் கூட உன்னால் சகித்துக் கொள்ள முடியாது சதீ'' என்றார்.

என் சந்தேகத்தை இவருடைய பேச்சு ஊர்ஜிதப்படுத்தி

யது. ''பரவாயில்லை, சொல்லுங்களேன்'' என்று தீன மான அழும் குரலில் கேட்டேன். என் துக்கத்தைக் கண்டு அவருடைய கண்களும் குளமாயின. ''சரி சொல்லுகி றேன்; ஆனால் இப்பொழுதல்ல. நீ முதலில் உணவை முடித்துக் கொள். அப்புறம் சொல்லுகிறேன். உன் ஆணை. கட்டாயம் சொல்லுகிறேன்'' என்று வருத்தமாய் சொன் னார். ''இல்லை. இந்த நிமிடமே சொல்லுங்கள்'' என்று பிடிவாதம் செய்தேன். ''உன் மேல் ஆணையிட்டிருக்கி றேன், அப்பவும் உனக்கு இவ்வளவு அவநம்பிக்கையா? என் பேச்சை நம்பிப்போய்ச் சாப்பிடு. நான் அப்புறம் சொல்லுகிறேன்'' என்றார்.

அன்றைய தினம் முழுவதும் உணர்ச்சிச் சுழற்சியில் சிக்கிக் கிடந்தேன். வேலை எதிலும் மனம் போகவில்லை. ஒரு வேளை தட்டிக் கழித்துவிடுவாரோ அவர்? ஆனால் ஆணை இட்டுவிட்டாரே, அதை மீற மாட்டார்.

மாலையில் பணிப்பெண் வந்தாள். ''இரவு சமையல் செய்ய வேண்டாமா, அம்மா? அடுப்பே மூட்டவில் லையே இன்னும்?'' என்றாள்.

''நான் சாப்பிடப் போவதில்லை'' என்றேன்.

''ஐயாவும் உங்களுடன் பட்டினியாயிருக்க வேண்டுமா என்ன?''

''போ, காய்கறி நறுக்கி வை. இதோ வருகிறேன்'' என்றேன்.

ரொம்ப நேரமாய் அவர் வீட்டிலில்லை. உணவைத் தயார் செய்துவிட்டு அமைதியற்றுக் காத்திருந்தேன். இன்று சொல்லுவார் உண்மையை!

அரைமணி நேரம் பொறுத்து வந்தார். செருப்பைக் கழட்டிவிட்டு உள்ளே வந்து விளக்கை ஏற்றினார். நானும் சமையலறையை மூடிக் கொண்டு அவர் பக்கத்தில்-போய் நின்றேன். ''யார் சதியா?'' என்றார்.

இது என்ன, இவருடைய முகம் இப்படிக களை இழந்து, பேயறைந்தாற் போல் போவானேன்? கண்களில் துக்கம். அன்று என் மூளை ஏன் அப்படிக் குதர்க்கமாய் இயங்கியதோ! அவருடைய பரிதாபகரமான நிலைமையி லும் என் மனதில் இரக்கம் எழவில்லை. உடல் நலத்தைப்

பற்றிக் கூடக் கேட்கவில்லை. என் மூளையைப் போல் என் குரலும் அடைத்துப் போய்விட்டது.

''வா உள்ளே. என்னை விடமாட்டாயல்லவா? கொஞ்ச நாள் பொறுத்து மெள்ள மெள்ள நீயே தெரிந்து கொள்ளு வாய் என்று நினைத்தேன். சொல்ல வேண்டிய கஷ்டம் எனக்கிராது என்று நம்பினேன். நான் சொல்லித்தான் ஆகவேண்டுமா, சதீ? வா உட்கார்'' என்று அழைத்தார்.

நான் கட்டிலில் உட்கார்ந்து கொண்டேன். அப்புறம் அவர் என் பக்கத்தில் அமர்ந்து, துக்கம் அடைக்கும் குரலில் எல்லாவற்றையும் மெள்ள மெள்ளச் சொன்னார். இரண்டு மாதங்களுக்கு முன் கிராமத்தில் வாந்திபேதி பரவியதைப் பற்றியும், அதற்கு இரை ஆனவர்களைக் குறித்தும் சொன்னார். கடைசியில் என் தந்தைக்கும், பிறகு என் தாய்க்கும் அந்நோய் தொத்திக் கொண்டதையும், அவரே கட்டக்கிலிருந்து டாக்டரை அழைத்துப் போய் சிகிச்சை செய்ததையும், இரவும் பகலுமாக சிசுருஷை செய்தும் எல்லாம் பலனற்று போனதையும் விவரித்தார். முதலில் என் தந்தை, பிறகு என் தாய் இருவருமே உலக மாயையிலிருந்து விடுபட்டுப் போய்விட்டனர். அன்று கோயிலில் என்னிடம் எல்லா விஷயமும் சொல்ல நினைத் தாராம். ஆனால் எனக்கு ஏற்படக் கூடிய அதிர்ச்சியைத் தவிர்க்க எண்ணிச் சொல்லவில்லை. தொடர்ந்து என் புக்ககத்தில் ஏற்பட்ட அவமானத்திற்குப் பிறகு என்னை ஏன் இங்கு அழைத்து வந்தார் என்றும் புரிய வைத்தார்.

பெற்றோர் அற்ற அனாதை ஆய்விட்டேன். என்னே என் விதி! எதிர்பார்க்காத இந்த மின்னல் தாக்குதலால் நான் உரமிழந்து உடைந்து போனேன். அம்மா, அப்பா இருவரும் இல்லை. அவர்களை நான் இனிமேல் காணவே முடியாது. என்னால் அழக் கூட முடியவில்லை. ஆழங் காண முடியாத இந்தத் துக்கத்தில் என் கண்ணீரும் உறைந்து கல்லாய் மாறி, என் மனதைப் பொடிப்பொடி யாய் நொறுக்கிவிட்டது. தலை சுற்றியது; கண் இருண்டு நான் உணர்வற்றுக் கிடந்தேன். உணர்வு திரும்பிய பொழுது நாத் அண்ணா என்னைத் தன் மேல் சாய்த்துத் தாங்கியிருப்பதை உணர்ந்தேன். என் தலையை வருடிய

படி, ''இது என்ன சதீ, சீ! சீ!'' என்று சொல்லிக் கொண்டிருந்தார். ஆனால் அவரே அழுது கொண்டிருந்தார்!

அப்புறமும் என்னால் பொறுக்க முடியவில்லை. என் வெட்கம், சங்கோசம் எல்லாம் எரிந்து சாம்பலாகிவிட்டிருந்தன. அவர் அழுவதைக் கண்டு என் கண்ணீரும் மடைதிறந்தது போல பாய்ந்தது. அவருடைய நெஞ்சில் என் தலையை மறைத்தபடி குழந்தையைப்போல அழுதேன். மரணத் தறுவாயில் என் தாயின் கண்கள் என்னைத் தேடியிருக்கும். வியாகூலத்துடன் படுக்கையில் என்னைத் தேடிப் . பார்த்து, காணாமல் மனம் ஒடிந்து இறந்திருப்பாள்.

நிற்காமல் வழிந்த என் கண்ணீரை அடிக்கடி துடைத்தபடி நாத் அண்ணா ஒன்றும் பேசாமல் தன் நெஞ்சுடன் என்னை அணைத்தபடி அமர்ந்திருந்தார். சொல்ல என்ன இருந்தது? உலகத்தில் எல்லாவற்றையும் இழந்து விட்டவளை தேற்றுவது எப்படி?

இரண்டு நாள் பசி தாகம் தெரியாமல் அப்படியே படுக்கையில் விழுந்து கிடந்தேன். அவரும் ஊண் உறக்கமின்றி என்னண்டை உட்கார்ந்திருந்தார். என்னைத் தனியே விட்டு விட்டு ஒரு நொடி கூட அவர் அகலவில்லை. அச்சமயம், பெருந்துக்கத்தின் நடுவிலும் ஒரு விஷயம் தெள்ளெனத் தெரிந்தது. அவர் என் மீது எல்லையற்ற அன்பு கொண்டிருந்தார். உலகத்தில் இப்படிப்பட்ட நேசம் வேறு எவருக்கும் கிட்டி இருப்பதாய் நான் கேள்விப்பட்டதில்லை. எங்களுக்குள் எவ்வித உறவுமில்லை; அப்படியும் என்னை அவர் அன்பால் திணற வைத்தார்.

பெற்றோர் இல்லை, கணவர் வீட்டில் எனக்கு இடம் இல்லை. நான் யாருக்காக வாழ வேண்டும்? குமைந்து குமைந்து வாழ்வதும் ஒரு வாழ்வா? மரணமே தேவலை. ஆனால் நான் சாகவில்லை. யமனே மறந்துவிட்டான் போலும் இந்த அனாதையை. என்னைப் போன்ற ஒரு துரதிர்ஷ்டம் பிடித்தவளை உயிருடன் வைத்திருப்பதில் என்ன திருப்தியோ கடவுளுக்கு!

அன்று பணிப்பெண் மைத்திலியை என் பக்கத்திலிருத்தி விட்டு நாத் அண்ணா கொஞ்ச நேரம் வெளியில் போயிருந்தார். விசிறிக் கொண்டே அவள் பேசினாள். ''ஐயா எப்பொழுது வருவார்? இன்று என்ன செய்யப் போகிறாரோ சாப்பாட்டிற்கு?'' என்றாள்.

''ஏன்?'' என்று கேட்டேன்.

''உங்களுக்குத் தெரியாதா என்ன? எவ்வளவு முயன்றும் சமையலாள் கிடைப்பதாயில்லை. நீங்களிருக்கும் நிலைமையில் என்ன செய்வது?'' என்றாள்.

''அப்பொழுது சமையல் எப்படி நடக்கிறது?'' திடுக்கிட்டுக் கேட்டேன்.

''ஒன்றும் கேட்காதீர்கள், அம்மா. அவரைப் பார்த்தால் எனக்கு ரொம்பக் கஷ்டமாயிருக்கிறது. நீங்கள் இப்படிப் படுத்துக் கொண்ட பிறகு இரண்டு நாள் வரையில் சமையலறையில் அடுப்பே மூட்டவில்லை. உங்களுக்காக இரண்டு வேளையும் பாலை மாத்திரம் வெளி அடுப்பில் காய்ச்சிக் கொடுத்தேன். அவ்வளவுதான். நான் என் வீட்டிலேயே சாப்பிட்டுக் கொள்ள அவர் பணம் தந்தார்'' என்றாள். வியப்புடன், ''ஐயா விஷயம் என்ன?'' என்றேன்.

அதைத்தான் நான் சொல்ல வந்தேன். கேளுங்கள். இரண்டு நாள் வரையில் அவர் ஒன்றுமே சாப்பிடவுமில்லை, குடிக்கவுமில்லை. மூன்றாம் நாள் எனக்கே பொறுக்கவில்லை. ''சாப்பிடாமல், சம்பகப் பூ போன்ற உங்கள் உடல் வாடி வதங்கி கறுத்துப் போய்விட்டது. அறிவாளியான நீங்களே இப்படி நடந்து கொண்டால் எப்படி?'' என்று கேட்டேன். அதற்கு அவர், ''சமையலுக்கு ஆள் அகப்பட இல்லை. நான் என்ன செய்ய?'' என்றார். ''சமையலுக்கு வேண்டிய எல்லா ஏற்பாடும் நான் செய்து தருகிறேன். அடுப்பில் ஏற்றி இறக்கும் பொறுப்பு உங்களது'' என்றேன்.

''அப்புறம்?'' — தீனமாய்க் கேட்டேன்.

''பெரிய வீட்டுப்பிள்ளை அவர். பாத்திரத்தை முன்பின் பார்த்திருக்கவே மாட்டார். சமையல் செய்ய ஒத்துக் கொண்டார். ஆனால் முடியுமா அவரால்? தலை எழுத்து!

முந்தா நாள் இரவு சாதம் வடிக்கும் போது கஞ்சி அவர் கையில் கொட்டிவிட்டது. கை பூரா வெந்து போயிற்று'' என்றாள்.

மனதுள் சிலிர்த்தபடி, ''பிறகு ...?'' என்றேன்.

''அதனால் நேற்று காலை சமையல் இல்லை. ஏதோ ஹோட்டல் கீட்டலுக்குப் போய் எந்தக் குப்பையையோ உண்டு வந்தார். இப்பொழுது ஊரில் அம்மை பாவியிருக்கிறது. எங்கே போகிறாரோ சாப்பிட. எந்த மாதிரி இடமோ தெரியவில்லை. கவலையாய் இருக்கிறது'' என்றாள்.

மேலும் கேட்க முடியவில்லை என்னால். எனக்காக நான் கொஞ்சமும் கஷ்டப்படக் கூடாது என்பதற்காக இவர் இவ்வளவு துன்பங்களுக்குத் தன்னை உட்படுத்திக் கொள்ளுகிறார் என்ற எண்ணம் என்னுள் நிரம்பி என்னை உய்வித்தது. நானும் ஒருவருக்கு அவசியம் என்ற மன நிறைவு என்னைப் பூரிக்கச் செய்தது. என்னால் அவருக்குத் தொந்தரவு என்ற நினைவில் தோன்றிய வருத்தத்தையும் மீறிக் கொண்டு என்னுள் மென்மையான ஒரு மகிழ்ச்சி மேலெழும்பியது.

பிறகு சந்தேகத்துடன், ''இன்றும் ஹோட்டலுக்கா போயிருக்கிறார்?'' என்று கேட்டேன்.

''ஆமாம். இல்லாவிட்டால் உலகம் புரண்டாலும் உங்களை விட்டு அகலமாட்டாரோ அவர்!'' என்றாள் ஸாத்வி.

ஒரு மணி நேரம் பொறுத்துத் திரும்பி வந்தார். எப்போதும் போல நேரே என் அறைக்கு வந்து, என் கட்டிலருகே நின்றார். என் நெற்றியை வருடியபடி, ''சதீ'' என்று அழைத்தார்.

கலவரத்துடன் எழுந்து உட்கார்ந்தேன். ''உங்கள் கையைக் காட்டுங்கள் முதலில்'' என்றேன். அவர் தட்டிக் கழிக்கப் பார்த்தார். நான் பலவந்தமாய் அவருடைய இடது கையை இழுத்துப் பார்த்தேன். உடல் நடுங்கியது எனக்கு. உள்ளங்கை முழுவதும் ஒரே கொப்புளம்! அதில் சில புண்ணாகி விட்டிருந்தன.

''இது என்ன இப்படிச் செய்து வைத்திருக்கிறீர்களே'' என்ற அங்கலாய்த்தேன். புகார் செய்யும் குழந்தையைப்

போல் ''சுட்டுவிட்டது, நான் என்ன செய்ய?'' என்றார்.

வெந்நீரில் கையைக் கழுவி, தேங்காய் எண்ணெய் தடவிக் கட்டுப்போட்டுவிட்டேன். சாந்தமடைந்த குழந்தையைப் போல் கையைக் காண்பித்தார். ''இங்கு அம்மை பரவியிருக்கிறதாமே?'' என்று விசாரித்தேன்.

''ஆமாம்'' என்றார்.

''ஹோட்டலில் சாப்பிட யார் சொன்னார்கள் உங்களை?''

ஏதோ பெரிய தவறிழைத்துவிட்டதைப் போல அவர் பேசாமல் இருந்தார். இவ்வளவு பயமா என்னிடம்?

''இதற்கப்புறம் நீங்கள் ஹோட்டல் வாசல் வரைப் போனால் கூட நான் இங்கு தலையை முட்டிக் கொண்டு சாவேன். தெரிந்து கொள்ளுங்கள்'' என்றேன்.

அறைக்குள்ளே அடைந்து கிடந்து அழுவதை விட்டு விட்டு, வீட்டு வேலையில் ஈடுபடலானேன். இல்லாவிட்டால் இவரைப் போன்ற மனிதர் எந்தவேளை எதைச் செய்து வைப்பாரோ என்று பயமாயிருந்தது. கொஞ்ச நாளாகவே ஏனோ கவலையில் மூழ்கியவராய் இருந்தார். முகத்தில் மகிழ்ச்சியே இல்லை. காலையிலேயே வெளியில் போய்விட்டு பிற்பகலில் தான் திரும்பி வரவார். பிடி சாதம் உண்டுவிட்டுத் திரும்பக் கிளம்பிவிடுவார். ஒரு நாள் கேட்டுவிட்டேன்.

''இன்னமுமா சமையலுக்காக இப்படி அலைகிறீர்கள்?''

''இல்லை. வேறு வேலையிருக்கிறது'' என்றார்.

தை மாதம். ஆனால் குளிர் முழுக்கப் போகவில்லை. பகலில் கூட அறைக்குள் குளிரில் உடல் நடுங்கியது. மென்மையான வெயில் கூரை வழியே முற்றத்தில் அடித்துக் கொண்டிருந்தது. வெயிலில் பாயை விரித்து உட்கார்ந்து பாக்கு வெட்டிக் கொண்டிருந்தேன். அப்பொழுது இவர் வெளியில் போகப் புறப்பட்டார். பக்கத்தில் போய் ''எங்கே புறப்படுகிறீர்கள்?'' என்று கேட்டேன்.

''வேலையிருக்கிறது'' என்றார்.

''என்ன வேலை, நானும் தெரிந்து கொள்ளலாமா? இருபத்தி நாலு மணி நேரமும் இப்படிச் சுற்றுகிறீர்களே. கொஞ்ச நேரம் கூட வீட்டிலிருப்பதில்லை. அப்படி என்ன

வேலை?''

முறுவலித்தபடி, ''அவசியமான வேலைதான்'' என்றார்.

அவருடைய கையை என் இரு கைகளுக்குள் பிடித்துக் கொண்டு, ''என் ஆணை — என்ன வேலை சொல்லுங்கள்'' என்றேன்.

கொஞ்சம் யோசித்துவிட்டுப் பிறகு, ''எங்கேயாவது வேலை கிடைக்குமா என்று தேடிக் கொண்டிருக்கிறேன்'' என்றார்.

''ஏன்?''

என் கன்னத்தை மெல்லத் தட்டியபடி, சிரித்துக் கொண்டு, ''இல்லாவிட்டால் வீட்டுச் செலவு எப்படி நடக்கும், அசடே? நான் என்ன பெரிய பணக்காரனா?'' என்றார். ஒரு கையால் என் இடுப்பைத் தழுவிப் பிடித்த படி, ''இருந்த பணம் இன்றுவரை செலவாயிற்று. மேலே கொஞ்சம் கஷ்டந்தான். கடையிலும் கடன். அதை அடைத்தால்தான் கடைக்காரன் சாமான் தருவான். சம்பாதிக்கும் வழி தேடாவிட்டால் எப்படி நடக்கும்?'' என்றார்.

''வேலை கிடைத்ததா?''

''அவ்வளவு சுலபமா, வேலை கிடைப்பது?''

''என்ன ஆகும் அப்பொழுது?''

''பகலிரவாய் முயன்று வருகிறேன், என்ன ஆகுமோ? வேலை கிடைக்கா விட்டால் இங்கேயே கிடந்து பட்டினியில் வாட வேண்டுமா என்ன? வேறு வழியில்லாமல் கிராமத்திற்குப் போய்த்தான் ஆக வேண்டும்'' என்றார்.

ஏதோ ஒரு விவரிக்க முடியாத பயம் என்னை உலுக்கி எடுத்தது. கிராமத்திற்குப் போவதா? பெற்றோர் இருவருமில்லை. யார் பக்கபலம் என்று அங்கு போவது? ஆனால் கட்டக்கில் அம்மை பரவி வருகிறது. இவரோ நாள் முழுவதும் அலைகிறார். மனம் புதறியது நிலைகொள்ளாமல்.

''கட்டக்கிலிருந்து வேறு எங்கேயாவது போக முடியாதா?'' என்று கேட்டேன்.

''எங்கும் இதே அழகுதான். வேலை கிடைப்பது குதிரைக் கொம்பாயிருக்கிறது. கிராமத்திற்குத்தான் போக

வேண்டும் வேறு வழியில்லை'' என்றார்.

''எனக்காகத்தானே நீங்கள் இவ்வளவு பாடுபடுகிறீர்கள், இல்லையா?''

நான் மேலும் பேசுவதற்குள் என்னைத் தன் பக்கமாய் இழுத்து, முத்தமிட்டார். அந்த மர்ம மயமான ஸ்பரிசத்தால் என் இதயம் ரீங்காரம் செய்தது. உதிரத்தில் புயல் அடித்தது. ரொம்ப நாளாய் உறங்கிக் கிடந்த என் வாழ்க்கையின் ஒவ்வொரு மூலையையும் தொட்டுப் பேசிச் சென்றது அந்த உணர்ச்சிப் புயல். ஒரு கணத்தில் கற்பனைக்கெட்டாத பல அனுபவங்களைக் கோடிக் காட்டி விட்டுச் சென்றது.

கடைசியில் அவர் சொன்னதுதான் நடந்தது. எவ்வளவு முயன்றும் வேலை கிடைக்கவில்லை. சாப்பாட்டுக்கு வழி? கிராமத்திற்கே திரும்பிப் போக நிச்சயம் செய்தோம். கொஞ்ச நாள் முன்பு வரை அங்கு போக வேண்டும் என்று நான் ஆவலாய் இருந்தேன். ஆனால் இப்பொழுது, என் பெற்றோரின் மரணத்தைப் பற்றி அறிந்த அன்றே, அந்த ஆனந்தமும் உற்சாகமும் மடிந்து போயின. கணவன் என்னைத் தள்ளி வைத்துவிட்ட சமாசாரம் இதற்குள் கிராமத்தில் பரவி இருக்கும். இத்தனை நாள் கிராமத்திற்குப் போகாமல் இங்கு இவருடன் இருந்ததைப் பற்றி என்ன நினைப்பார்களோ. எல்லோரும் பெற்றோரைப் போல் ஆவார்களா? நாத் அண்ணாவின் வீட்டைத் தவிர எனக்கு வேறு எங்கு புகலிடம்? என் கலியாணத்தின்பொழுது என்னைப் பற்றி கிராமத்தார் பேசாத வம்பா? இப்பொழுது என்னை விட்டுவிடுவார்களா? அதை நினைக்கும் பொழுதே குடல் நடுங்கியது. கறுத்த பூதத்தை ஒத்த ஒரு உருவமற்ற பயம் என்னை சூழ்ந்துகொண்டது. ஆனால் வேறு வழியில்லையே!

அடுத்த நாள் நாங்கள் உண்மையாகவே கிராமத்திற்குப் புறப்பட்டு விட்டோம். கட்டக்கின் செம்மண்ணை விட்டு விட்டு மரங்களடர்ந்த கோணல் மாணலான பாதையில் சென்றது மாட்டு வண்டி. இவ்வளவு துக்கத்திலும் கிராம வெளியில் பரவிக்கிடந்த சாம்பல் நிற மண்ணை எடுத்துச் சிரத்தையுடன் உடலெல்லாம் தடவிக் கொள்ள வேண்டும்

போலிருந்தது. புண்பட்ட மனதைத் தேற்றிக் கொள்ள அந்த குழந்தைப் பருவ கனவுலகிற்குத் திரும்பிக்கொண்டிருந்தேன். நாத் அண்ணாவின் வீட்டெதிரே வந்து நின்றது வண்டி. மாவும் பலாவும் சூழ்ந்த அதன் திண்ணை முன் மாதிரியே இருந்தது. வெளிப்பக்கம் தென்னை மரங்களின் வரிசையை ஒட்டி ஓங்கி வளர்ந்திருந்த மகிழ மர நிழலிலிருந்த திண்ணையில் நானும் பவுலும் விளையாடினது பசுமையாயிருந்தது என் மனதில். வெளிப் பார்வைக்கு வீட்டிலோ, சூழ்நிலையிலோ எவ்வித மாறுபாடும் தெரியவில்லை. நாத் அண்ணா முதலில் வண்டியை விட்டு இறங்கி என்னையும் இறங்கச் சொன்னார்.

வண்டியின் அரவம் கேட்டதிலிருந்து சில கிராமக் குழந்தைகள் அதைச் சூழ்ந்துகொண்டு ஏதோ அதிசயத்தைக் காண்பவர் போல் அதனுள் எட்டி எட்டி பார்த்துக் கொண்டிருந்தனர். நாத அண்ணா இறங்கிப் போன பிறகு அவர்கள் தைரியமாய் வண்டியைச் சூழ்ந்து கொண்டு, உள்ளே இருந்து வரப்போகும் ரகசிய, அபூர்வப் பிறவியைக் காணும் ஆவலுடன் நின்றனர். இந்த அறியாக் குழந்தைகள் முன் இறங்க அன்று என் கால்கள் உரமிழந்து தள்ளாடின. என்னை யார் என்று அவர்கள் தெரிந்து கொள்ளவில்லை போலும்! தலைநிமிராமல் வேகமாய் வீட்டுள் புகுந்து விட்டேன்.

கதவுக்கு அப்பால், உள்ளே, முழங்காலளவு குப்பை குவிந்திருந்தது. எங்கும் ஒரே நிசப்தம். வீடு வெறிச்சென்று களை இழந்து கிடந்தது. எனக்குப் பதற்றமாய் இருந்தது. ''பெரியம்மா எங்கே?'' என்று அண்ணாவைக் கேட்டேன். முறுவலித்தார் அவர். ''அம்மா இங்கே எங்கே இருக்கிறார்?'' என்றார். ஒருவேளை யார் வீட்டிற்காவது போயிருக்கலாம். ''யாரையாவது பார்க்கப் போயிருக்கிறளா?''

''கார்த்திகை மாதத்திலிருந்து அவள் பூரியிலிருக்கிறாள்'' என்றார்.

''பவுல் எங்கே?''

''பவுலா? புக்ககத்தில் இருக்கிறாள்''

ஒரு விதத்தில் நல்லதுதான் யாருமில்லாமலிருப்பது

என்று தோன்றிற்று. இங்கே யார் முகத்திலேயும் விழிக்க வேண்டாம். ஆனால் இங்கு இவருடன் நான் தனியாய் எப்படி இருப்பது? ''பெரியம்மா இங்கே இல்லாத சமாசாரத்தை எனக்கு கட்டக்கிலேயே ஏன் சொல்ல வில்லை?''

திரும்ப முறுவலித்தார். ஆனால் அந்த முறுவலில் பிரேதக்களை வழிந்தது. ''சொல்லியிருந்தால் நீ என்னுடன் வந்திருப்பாயா?'' என்றார். அவருடைய சிரிப்பு நெருப்பாய்ச் சுட்டது என் உடலை. ''நம் கிராமத்திலேயே நானும் நீங்களும் மட்டும் ஒரே வீட்டில் இருப்பது சாத்தியமா? கேட்பவர்கள் என்ன பேச்சு பேசுவார்கள், இல்லையா?'' என்று கோபமாய்க் கேட்டேன்.

ஆழ்ந்த வேதனையில் சிரிப்பு மறைந்துவிட்டது அவருடைய முகத்திலிருந்து. தலையைக் கவிழ்ந்துக்கொண்டு, மெள்ள ,''என்ன செய்வது. வேறுவழி ஏதும் தெரியவில்லையே'' என்றார். ''வழியில்லை என்றால் கொஞ்சம் விஷம் கிடைக்கவில்லையா எனக்குத் தா?'' தாபமும் வெட்கமும் என்னை அழவைத்தன.

மாலை நட்சத்திரத்துடன் கடைசியாய் ஹோலி விளையாடி விட்டு மேற்கில், ரோஜா நிறப் பாதையில் ஒளியைக் கொட்டியவாறு சூரியனும் மறைந்தான். மாலை வேளையின் வர்ணஜாலம். மாங்களினூடே மயில் கழுத்து நிறப் புடவையை நெய்து கொண்டிருந்தது. என் அழுகை ஓயவில்லை. என்னைத் தேற்ற முன்போல் அவர் முயலவில்லை. அங்கேயே தூணில் சாய்ந்துகொண்டு கல்லாய்ச் சமைந்து அமர்ந்திருந்தார். திடீரென்று, ''காலையிலிருந்து நீ ஒன்றுமே சாப்பிடவில்லையே. நான் போய் ஏதாவது வாங்கி வருகிறேன்'' என்றபடி புறப்பட்டு விட்டார்.

கட்டக்கில் பணமுடை காரணமாய் மூன்று நாள் பட்டினி கிடந்தது எனக்கு ஞாபகம் வந்தது. அப்பா! எவ்வளவு கஷ்டமாயிருந்தது அந்தப் பட்டினி! மனித நிந்தை எவ்வளவோ தேவலை. என் விரோதிக்குக் கூட அந்தப் பசிப்பிணி வரலாகாது. புருஷரான இவர் எல்லா கஷ்டங்களையும் சலனமற்று எப்படிப் பொறுத்துக் கொள்ளுகிறாரோ! யாருக்காக? என்னைக் கட்டக்கிலேயே விட்டு

விட்டு அவர் சௌக்கியமாய் இங்கு வந்திருக்கலாமே. எனக்காக அவர் கஷ்டங்களையும், அவமானங்களையும் சந்தோஷமாய் ஏற்றுக் கொள்ளுகிறார். ஏன்? அவருக்கு நான் என்ன உறவு? மாறாக நானோ? கொஞ்ச நேரம் முன்பு கூட அவரிடம் ஆத்திரப்பட்டேன். மனதில் குதர்க்கமான சந்தேகங்களை வளரவிட்டுக் கொண்டு வாயில் வந்ததை உளறிக் கொட்டினேன். ஆனால் அவர் ஒரு முறை கூட எதிர்த்துப் பேசவில்லை - உண்மையா கவே குற்றம் செய்துவிட்டவரைப்போல். நன்றிப் பரவசத் தில் கணக்கற்ற அணுக்களாய்த் தெறித்து அவருடைய கால் தூசியில் கலந்து என்னையே இழந்துவிட விரும்பி னேன்.

சமையலறையின் படியில் கையில் நெய் விளக்குடன் அவர் நின்று கொண்டிருந்தார். ''சதீ'' என்று அழைத்தார். பிறகு அவர், ''எனக்கு ஏதாவது சிற்றுண்டி போதும். நீ என்ன சாப்பிடுகிறாய், சொல்'' என்றார்.

''நான் சாப்பிடுகிறேனோ இல்லையோ, உங்களுக்காக இன்று கட்டாயம் சமையல் ஆகும். மூன்று நாளாய் சாதத்தைக் கண்ணால் பார்க்கக் கூட இல்லை, நினைவிருக் கிறதா?'' என்றேன்.

''யார் சமைப்பதாம்?'' என்றார்.

''நான்தான்''

அதை எதிர்த்தபடி ''வேண்டாம், இன்று எனக்கு ஒன்றும் வேண்டாம். அவ்வளவு தூரத்திலிருந்து வந்த களைப்பிருக்காதா உனக்கு? அடுப்பண்டை உட்காராமல் இருக்க முடியாதா உன்னால்? இதோ போய் ஏதாவது சிற்றுண்டி வாங்கி வருகிறேன்'' என்றவாறு நடக்க ஆரம்பித்தார். உறுதியோடு அவரைக் கூப்பிட்டேன். ''போகாதீர்கள், நான் சொல்லுகிறேன்'' என்றேன். திரும்பி வந்தார். ''விளக்கை என்னிடம் கொடுங்கள். உக்கிராண உள்ளில் சமையலுக்கு வேண்டிய என்ன சாமான் இருக்கிறது என்று பார்க்கிறேன்'' என்றேன்.

லேசாய் எதிர்ப்பு வெளியிட்டார். ''திரும்பச் சமைய லா?'' அவரை ஆழ்ந்து பார்த்தபடி, ''அதைப் பற்றி உங்களை யாராவது கேட்டார்களா?'' என்றேன்.

மாக் (தை) மாதம். மாம்பூ உதிரும் சமயம். செடி, கொடி, புதர்களிலிருந்து பழுத்த இலைகள் உதிர்ந்து, பூவேலை செய்த கம்பளத்தைப் போல் தோன்றின. தரையில்உறங்கிக் கிடந்த குளிர்காலத்தை எழுப்பிவிட, அதன் மேல் கொசுவலைபோல் மூடிக் கிடந்த பனிப்படலத்தை வஸந்தத்தின் காற்று உலுக்கிக் கொண்டிருந்தது. ஆனால் குளிர் அவ்வளவு சுலபமாய்ப் போவதாயில்லை. பழுத்த இலைகளை உதிர்த்துவிட்ட மரங்களில் தளிர் இலைகள் புறப்பட்டு விட்டன. அன்று காலை அறையில் உட்கார்ந்து வெற்றிலை மடித்து வைத்துக் கொண்டிருந்தேன். வெளியில் குரல் கேட்டது: ''லோகநாத், வீட்டிலிருக்கிறாயா?'' வராந்தாவில் நாத் அண்ணா தன் புத்தகங்களை அடுக்கி வைத்துக் கொண்டிருந்தார். ''யார், அகூதியா?'' என்று கேட்டார். இந்த அகூதி எங்கள் கிராமப் பள்ளிக்கூடத்தில் வாத்தியார். ஐந்து வருட விடா முயற்சிக்கப்புறமும் அப்பர் பிரைமரி வகுப்பைத் தாண்ட முடியாமல், கடைசியில் சோர்ந்து போய் படிப்பை விட்டு விட்டவர். அப்புறம் கொஞ்ச நாள் கிராமத்தில் திரிநாத் உற்சவம், சௌதரி குளத்தில் மீன் பிடிக்கும் கோலாகலம், கோயிலில் ஆட்டு\பலி என்ற விஷயங்களிலேயே தன்னை ஈடுபடுத்திக் கொண்டு சுற்றி வந்தான். பிறகு நாத் அண்ணனின் பெரு முயற்சியால், ரொம்ப நாள் பொறுத்து கிராமப் பள்ளியில் வேலை கிடைத்து வாத்தியார் ஆகிவிட்டான்! டக் டக் என்று மரச் செருப்பு ஒலிக்க முற்றத்துள் வந்தான். நாத் அண்ணாவின் அருகில் உட்கார்ந்தபடி, ''என்று வந்தாய்?'' என்று கேட்டான்.

''முந்தா நாள்'' என்றார்.

''எல்லாம் நலம் தானே? உன் அம்மா இன்னமும் பூரியிலிருந்து வரவில்லை''

''இல்லை''

''அப்போ சமையலுள்ளில் யார்?''

''சதீ''

''புக்ககத்திலிருந்து வந்து உன்னிடம் தனியாய் இருக்கிறாளா?''

ஒரு பக்கமாய்த் திரும்பி சிரித்தான். அப்புறம் கத

வண்டை வந்து என்னைப் பார்த்து ''என்ன, இவ்வளவு சீக்கிரம் திரும்பி வந்துவிட்டாய்? அங்கு பிடிக்கவில்லையா?'' என்றான். நான் அவரை நமஸ்கரித்தேன். ''சரி, சரி. பெரியம்மாவும் இல்லை, வேறு யாரும் இல்லை. இங்கே உனக்கு பிடிக்குமோ பிடிக்காதோ, ஆனால் உன் நாத் அண்ணன் தான் இருக்கிறானே போதாதா?'' என்றான். என் முகத்தைப் பார்த்துவிட்டுச் சிரித்தான். வெட்கத்தாலும் அவமானத்தாலும் என் முகம் சிவந்துபோயிற்று. தலையைத் தாழ்த்திக் கொண்டு முக்காடை இன்னும் இழுத்துவிட்டுக் கொண்டேன்.

கொஞ்ச நேரம் பேசிவிட்டுப் போனான். போகும் பொழுது, ''இன்று போய் வருகிறேன், கொஞ்சம் வேலையிருக்கிறது. அப்புறம் வருகிறேன், நீ அழைத்தாயானால்'' என்றான். கடைசி வாக்கியத்தில் ஒருவித பரிகாசம் ஒலித்தது. ''ரொம்ப சரி. வா'' என்று சொல்லி விடை கொடுத்தார் நாத் அண்ணா. எல்லாம் புரிந்துதான் இருந்தது அவருக்கு.

இந்த கிராமத்து வாலிபர்கள் எப்பொழுதுமே இப்படித்தான் பண்பற்ற, அநாகரீகமானவர்களாய் இருப்பார்கள் போலும். ஆண் பெண் உறவைப்பற்றி எப்போதும் குதர்க்கமாய், விஷம நோக்கத்துடன் கற்பித்து விவரிப்பதில் திருப்தி அடைகிறார்கள். வருங்காலத் தலைவர்களாய்த் திகழப்போகும் இவர்கள் உயர் பதவிகளை வகித்து, தங்கள் குறுகிய, ஆரோக்கியமற்ற விசாரணை சக்தியின் உதவியால் சாதாரண மக்களுக்கு நீதிமுறைகளை வகுப்பார்கள்!

இந்தவிதமான கசப்பான யோசனைகளில் காலை வேளை கடந்துபோயிற்று. நான் சமையலுள் படியில் உட்கார்ந்திருந்தேன். அவர் கொஞ்சம் தள்ளி உட்கார்ந்து சாப்பிட்டுக் கொண்டிருந்தார். ஏதோ பேசும் நோக்குடன் என் பக்கம் ஓரிரு முறை பார்த்தார். ஆனால் அப்புறம் ஒன்றும் சொல்லாமலேயே தலை நிமிராமல் உணவருந்தி விட்டு அங்கிருந்து போய்விட்டார். காலையில் நடந்த விஷமம் அவரது மனதை அலட்டியது போலும்.

அன்று வேறு யாரும் வரவில்லை எங்களை விசாரிக்க.

பகல் உணவிற்குப் பிறகு வெளியில் போன அண்ணா சாயங்காலம் வரையிலும் திரும்பவில்லை. மாலை உணவைத் தயார் செய்து ஆரம்பித்தேன்.

அடுப்பை மூட்டிவிட்டு உக்கிராண அறையில் போய்ப் பார்த்தால் எல்லா கூடைகளும் காலியாயிருந்தன. அரிசி கூட இல்லை! அடுப்பைத் தணித்துவிட்டு வெளியில் வந்தேன். ஆகாயத்தில் நவமி சந்திரன் ராஜகுமாரியின் வெள்ளி மைச்சிமிழிப் போல் அழகாக உலவியவாறு, தன் மென்மையான ஒளியைப் பரப்பிக் கொண்டிருந்தான். தென்னோலைப் பின்னலுள் சிக்கிக் கிடந்தது அந்த ஒளி. இயற்கையின் வசீகரத்தில் மயங்கி நான் நின்று கொண்டிருந்தேன். பின்புறமாய் வந்து யாரோ என் கண்ணைப் பொத்தினார். நாத் அண்ணா என்று தெரிந்துவிட்டது.

''யாரென்று எனக்குத் தெரியும்'' என்றேன்.

''யார்?''

''அவர்தான்''

''அவர் யார்?''

''எனக்குத் தெரியாது போ'' என்றேன்.

கையைக் கண்களிலிருந்து எடுத்துவிட்டு என்னைத் தன் நெஞ்சுடன் அணைத்துக் கொண்டார். வெட்கமாயிருந்தது, ஆனால் நான் அவரைத் தடுக்கவில்லை. காலையில் உண்டான கசப்பு இந்த ஆனந்தத்தில் கரைந்துவிட்டது.

அவர் என் முகத்தைத் தன் முகத்துடன் இழைத்தபடி, ''வேறு யாராவதாவது இருந்திருந்தால்?'' என்று கேட்டார்.

அந்த உஷ்ணமான மென்மையில் என் உதிரம் சூடேறி அறிவை மழுங்கச் செய்தது. காதை ஒட்டி அடித்துக் கொண்டிருந்த அவருடைய இதய தாளம் என் உயிரை ஆனந்த நர்த்தனம் புரியச் செய்தது.

அதே சமயம் சந்திரனின் தெளிவான ஒளியில் கதவண்டை வந்து நின்றான் அருதி! எங்களைக் கண்டுவிட்டு வேகமாய்த் திரும்பிப் போய்க் கொண்டே, ''தெரியாமல் வந்துவிட்டேன் போகநாத் அண்ணா. தப்பாய் நினைக்காதீர்கள்'' என்றான்.

கண் இமைக்கும் நேரத்தில் அவர் என்னிடமிருந்து விலகி தூரே நின்று கொண்டார். நான் உயிரற்ற பொம்மை

யாய் அங்கேயே நின்றேன், என் இதய ஓட்டமே நின்று விட்டாற் போல். சந்திரனும் கருமேகத்துள் தன்னை மறைத்துக் கொண்டான்.

முன் தினம் நடந்த வெட்கங்கெட்ட சம்பவத்திற் கப்புறம் நாத் அண்ணாவின் முகத்தில் எப்படி முழிப்பது என்ற கவலையுடன் காலையிலெழுந்தேன். விடியற் காலையிலேயே எழுந்து மெள்ளக் கதவைத் திறந்து வெளியில் பார்த்தேன். அவர் எங்கும் காணவில்லை. ஒருவேளை இன்னும் எழுந்திருக்கவில்லையோ என்று அவருடைய அறையின் பக்கமாய்ப் போய் ஓசைப்படா மல் ஜன்னல் வழியாய் எட்டிப் பார்த்தேன். அங்கேயும் இல்லை அவர். ஒரு வித ஆறுதலுடன் நிம்மதியாய் மூச்சுவிட்டேன். அவருக்கும் சங்கோசமாயிருக்கலாம் என் னைப்போல். அதனால் தான் காலையிலேயே வெளியில் போய்விட்டார் போலும். வராந்தாவில் நின்று கொண்டி ருந்தபொழுது வெளியில் குரல் கேட்டது. ''நாத் அண்ணா இல்லையா?'' திடுக்கிட்டுப் பார்த்தால் அங்கு சயிதா நின்றான்.

என்னை சாஷ்டங்கமாய் நமஸ்கரித்துவிட்டு நின்றான். பழைய நினைவுகளும், என் பெற்றோர் காலத்து பல எண்ணற்ற அவசிய, அனாவசிய சம்பவங்களும் என் மனத்திரையிலோடி, மழைக் காலத்தின் ஓதக் காற்றைப் போல் என் உள்ளத்தின் வெறுமையை ஈரமாக்கின. இந்த வாழ்வில் அந்த மகிழ்ச்சி எனக்குத் திரும்பக் கிடைக்கவே கிடைக்காது.

நான் என் பெற்றோரின் இழப்பிற்காக அழுவதை ஊகித்துக் கொண்ட சயிதா மௌனமாய் நின்றான். கொஞ்சம் பொறுத்து நான் அவனைப் பார்த்து ''இவ்வ ளவு நாளாயிற்றா என் நினைவு வர?'' என்று கேட்டேன்.

அவனுடைய கண்களும் ஈரமாயிருந்தன. வேஷ்டி முனையால் முகத்தைத் துடைத்தபடி ''ரொம்ப நாளாய் வரவேண்டும் என்றுதான் இருந்தது. ஆனால் வேலை மும்முரத்தில் வரமுடியவில்லை அம்மா'' என்றான்.

''இப்பொழுது எங்கே வேலை பார்க்கிறாய்?''

''இங்குதான் அசூதி மஹந்தியின் வீட்டில்''

''பள்ளிக்கூட வாத்தியார் அசூதியா?'' என்று கேட்டேன்.

''ஆமாம், அவனேதான்.''

இந்த மூப்பிலும் இவன் வேலை செய்கிறான் பாவம்.

''என்னப்பா அவர்கள் வீட்டில் உனக்கு வயிறார சோறு போடுகிறார்களா?''

நீண்ட பெரு மூச்சுடன் ''கிடைக்கிறது. வயிற்றுப் பாட்டிற்காகத்தான் அங்கு உழைக்கிறேன். என் எஜமானரும் எஜமானியும் இறந்துபோன பிறகு எனக்கு எதிலும் பற்றற்றுவிட்டது. நாக்கு கூட மரத்து விட்டது'' என்றான்.

எனக்கு மனம் சங்கடப்பட்டது. ''நீ இங்கே வந்து விடேன்'' என்றேன்.

''எங்கே?'' வியப்புடன் கேட்டான்.

''என்னுடன் வந்து இரு, அந்த வேலையை விட்டு விட்டு''

''சரி, வருகிறேன். நீ இங்கே வந்த பிறகு பலமுறை நினைத்தேன் உன்னுடன் இருந்து விட. நாளையிலிருந்து அங்கே வேலையை விட்டு விட்டு உன்னிடமே வந்து இருக்கின்றேன்-நீ புக்ககம் போகும் வரை'' என்றான்.

பாவம், இவனுக்குத் தெரியாது போலும் என் புக்கக உறவு நிரந்தரமாய் முறிந்துபோய்விட்டது என்று. ஒரு வேளை கிராமத்தில் யாருக்குமே தெரியாதோ?

கொஞ்சம் பொறுத்து புறப்பட்டு விட்டான். ''இன்று போகிறேன், அம்மா, வேலையிருக்கிறது. நாளை முதல் இங்கேயே இருக்கிறேன்.'' ரொம்ப தூரம் போவதற்கு முன் எதையோ நினைத்துக் கொண்டு திரும்பி வந்தான். துண்டில் முடித்து வைத்திருந்த ஒரு வெள்ளை காகிதத்தை எடுத்து என் கையில் வைத்தவாறு ''அசூதி வாத்தியார் இதை உன்னிடம் கொடுக்கச் சொன்னான் மறந்துவிட்டது எனக்கு'' என்றான்.

ஆச்சரியத்துடன் ''என்னிடமா?'' என்றேன்.

''ஆமாம் உன்னிடம்தான் கொடுக்கச் சொன்னான்.''

அதைப் படித்த பிறகு கோபத்தால் என் உடல் கொதித்தது. ''போய்ச் சொல்லிவிடு, இந்த விஷயம் இன்னொரு தரம் அவன் சொல்லக் கூடாது, ஜாக்கிரத்தை என்று''

என்றேன். அதிர்ந்து போய் சயிதா ஒரு நிமிடம் என்னையே பார்த்துக் கொண்டிருந்துவிட்டு, அப்புறம் மெள்ள அங்கிருந்து போய்விட்டான். என்ன தைரியம் இந்த அசூதிக்கு! கடிதம் பின் வருமாறு இருந்தது.

''இதைப் படித்துவிட்டுக் கோபப்படாதே. நன்றாய் யோசித்துப் பார் - இதில் உனக்கு நன்மைதான் கிட்டும், தீமையல்ல. உனது தந்தைக்குப் பிறகு அவருடைய சொத்தெல்லாம் உன்னைச் சேருகிறது. இவ்வளவு பெருத்த செல்வம் உனக்கு அவசியமில்லை என்று நீயே அறிவாய். அதனால் அதை எல்லாம் நீ எனக்குத் தந்து விடு. நேற்றிரவு நான் உன் வீட்டில் கண்டதை வெளியில் சொன்னேன் என்றால் உன்னை உன் கணவர் விலக்கி வைத்துவிடுவார் என்று எனக்கு நன்கு தெரியும். உனக்கு என்னைவிட நன்றாய்த் தெரியும். உங்களிருவரைப் பற்றியும் இதற்குள் கிராமத்தில் வம்பு கிளம்பியிருப்பது தெரிந்திருந்தும் நான் நேற்றைய சம்பவத்தைக் குறித்து எங்கும் இதுவரை சொல்லவில்லை. நீ என் ஏற்பாட்டிற்கு சம்மதித்தாயானால் நான் எல்லாவற்றையும் மூடி மறைத்து விடுகிறேன். கிராமத்தில் இந்த விஷயம் தெரியாதபடி செய்துவிடுகிறேன். ஆனால் என் திட்டத்தை மறுத்தாயானால் நேற்றைய விஷயம் கிராமம் பூரா பரவும்படி செய்வேன். பலாபலன் உனக்குத் தெரிந்திருக்கும். உன்னையும், உன் நாத் அண்ணையும் கிராம ஜனங்கள் ஜாதிப்பிரஷ்டம் செய்துவிடுவார்கள். நெருப்பு, நீர், சம்பந்தம் கூட அற்றுப் போகும். உன் கணவர் இந்த கிராமத்தின் ஜமீன்தார். வேறு பெண் துணையின்றி நீ இங்கே லோகநாதுடன் இருக்கும் விஷயம் அவருக்கு இன்னும் எட்டவில்லை போலும். தெரிந்தால் உன் முகத்தில் முழிக்கமாட்டார். லோகநாதனையும் லேசில் விடமாட்டார். மாப்பிள்ளை என்ற உரிமையில் உன் தந்தையின் சொத்தை அப்படியே முழுங்கிவிடுவார். இப்பொழுது தன்னிச்சையோடு நீ செய்ய மறுப்பதை பிறகு ஒரு நாள் பலவந்தமாய் செய்ய வேண்டிவரும். அந்த சொத்தை நீ எப்படியும் இழந்துவிடுவாய். கணவர் உன்னை விரட்டி விடுவார், இந்தக் கிராமத்திலும் உன்னை இருக்கவிடமாட்

டார்கள். இதுதான் லாபம். அங்கேயும் இடமிராது, இங்கேயும் கட்டாயம் இல்லை. என் திட்டத்தை அனுசரித்து நடப்பாயானால் இந்த சங்கடங்களிலிருந்து நீ மீளலாம். நன்றாய் யோசித்து, எனக்கு சாதகமாய் தீர்மானிப்பாய் என்று நம்புகிறேன்.

இந்த மனிதன் மூலம் உன் சம்மதம் தெரிந்த பிறகு நான் அவசியமான பத்திரங்களுடன் இன்று மாலை உன்னிடம் வருவேன். அதிகமாய் நீ ஒன்றும் செய்வதற்கில்லை. ஒரே ஒரு கையெழுத்து மட்டும் போட்டாயானால் போதும். பிற்காலத்தில், புக்ககத்திலிருந்து எப்பொழுதாவது நீ இங்கு வந்து தங்க விரும்பினால் நான் உனக்காக வீட்டில் ஒரு அறையும், சாப்பாட்டிற்கு கொஞ்சம் நிலமும் தருகிறேன். இவ்விஷயங்களை அமைதியாய் யோசித்துப் பார்த்து, உன்னிடம் வந்திருக்கும் ஆள் வசம் உன் முடிவைத் தெரிவிப்பாய் என்று நம்புகிறேன். பி.கு. படித்துவிட்டு இதைக் கிழித்து போட்டுவிடு. லோகநாதனுக்கு இது தெரியவேண்டாம். உன்னை உருட்டி மிரட்டி உன் செல்வத்தை எல்லாம் அபகரித்துக் கொண்டு, உன்னை வீணடிப்பதில் அவன் இறங்கி இருக்கிறான் என்று எனக்குத் தெரியும். அவனை நம்பாதே - ஜாக்கிரதை.''

ஆத்திரம், அவமானம், வெட்கம் எல்லாமாகச் சேர்ந்து என் சிந்தையை பைத்தியமாக்கின. இந்த அசூதியும் ஒரு மனிதனா? அப்படியே சுவரில் சாய்ந்தபடி, அந்தச் சுவரைவிட உயிரற்றவளாய் எத்தனை நேரம்தான் உட்கார்ந்திருந்தேனோ எனக்கே தெரியாது. திடீரென்று கழுத்தண்டை மென்மையான மூச்சின் காற்றுபட்டு, திடுக்கிட்டு உணர்வு பெற்றேன் - நாத் அண்ணன் அங்கு நின்றார்!

என் கையிலிருந்த கடிதத்தைப் பறித்து வாசித்தார். பிறகு கோபமாக ''அந்த நாய் எங்கே போனான்?'' என்று கர்ஜித்தவாறு அந்தக் கடிதத்தைத் துண்டு துண்டாகக் கிழித்து எறிந்தார். பிறகு வேகமாய் வெளியில் போய்விட்டார்.

அவர் நிழல் மறையும் வரையில் அங்கேயே வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தேன். என்ன நடக்குமோ? பிடிவா

தக்காரரான இவர் அவசரத்தில் எதையும் செய்யக் கூடிய வர். அவரிடம் அக்கடிதம் சிக்குமுன் நானே அதைக் கிழித்தெறிந்திருக்கலாமே! கோபாவேசத்தில் அந்த அசூதியை கட்டாயம் தாக்குவார். என்ன ஆகுமோ?

எதெதையோ கற்பனை செய்துகொண்டு, பகல்பொழுதைக் கவலையுடன் கடத்தினேன். பகல் மடியும் நேரம் வரையிலும் கூட அவர் திரும்பவில்லை. என்ன ஆகியிருக்குமோ? இதுவே என்னை வாட்டி எடுத்தது. அசம்பாவிதமாய் ஏதாவது நடந்திருக்குமோ?

மாலையில் சயிதா வந்தான். ''அந்த வேலையை விட்டுவிட்டேன், மகளே'' என்றான். அவனைக் கண்டதும் பெரும் ஆறுதலாயிருந்தது - ஆழ்கடலில் தத்தளிப்பவனுக்குத் தரை புலப்படுவதைப்போல். ''நாத் அண்ணா எந்தப் பக்கம் போனார், பார்த்தாயா நீ?'' என்று கேட்டேன்.

''இன்று காலையில் அவரை அசூதி ஐயாவின் வீட்டில் பார்த்தேன். ஏதோ கோபமாய் வாக்கு வர்தம் நடந்தது. பிறகு மத்தியானம் வயல்களைத் தாண்டிக்கொண்டு அவர் அடுத்த கிராமத்திற்குப் போவதைப் பார்த்தேன்'' என்றான். அப்பாடி! நல்லவேளை இதுவரையில் அவருக்கு ஒன்றும் ஆகவில்லை. ''அவர் போன பக்கமாய் நீயும் போய் அவரை அழைத்து வரமுடியுமா? காலையிலிருந்து ஒன்றுமே சாப்பிடவில்லை அவர்'' என்றேன்.

சயிதா போய்விட்டான். எனக்கு ஆறுதலாயிருந்தது. கிராம ஜனங்கள் [illegible] நின்றாலும் என் சார்பாக உயிரைக் கொடுத்தாவது என் மானம் மரியாதையைக் காப்பாற்ற இருவர் இருந்தனர்.

அன்று விளக்கு வைத்தபிறகுதான் திரும்பினார் அவர். வராந்தாவில் சாப்பிட உட்கார்ந்தார். பேசிக்கொண்டே சாப்பிட்டார். ''இன்று நல்ல வேடிக்கை. காலையில் கிராமத்தில் எங்கும் அசூதியைக் காணாமல் கடைசியில் அவன் வீட்டிற்குப் போனேன். வெளியில் நின்று கொண்டு யாருடனோ பேசிக் கொண்டிருந்தான். என்னைக் கண்டு உள்ளே போய் ஒளிந்து கொண்டான். எவ்வளவு கூப்பிட்டும் வெளியே வரவில்லை. அவனுடைய மனைவி வெளியில் வந்து, ''அவர் இங்கு இல்லை'' என்றாள்.

''சரி'' அவன் வந்ததும் சொன்னாலும் போதும். நான் இப்பொழுது போலீஸ் ஸ்டேஷனுக்குப் போகிறேன், அவனைப் பற்றி பிராது கொடுக்க'' என்றேன். இதைக் கேட்டதும் அவன் வெளியே வந்தான். முதலில் அவனை வாயில் வந்தபடி திட்டினேன். பிறகு ''இனிமேல் நீ என் வீட்டுப் படியை மிதித்தாயானால், உயிருடன் திரும்ப மாட்டாய்'' என்று மிரட்டிவிட்டு வந்தேன்.

'''அவன் என்ன சொன்னான்?''

''என்ன சொல்லுவான்? இன்று என்னைப் பற்றி புகார் செய்யப் போயிருக்கிறான் போலும் ஜமீந்தாரிடம்''

ஆச்சரியத்துடன் ''நிஜமாகவா?'' என்றேன்.

''ஆமாம். போகட்டுமே. எனக்கு பயமில்லை. விஷயத்தை மறைக்க முடியுமா என்ன? ஜமீன்தார் யோசித்து, விசாரித்துத்தானே செயல்படுவார்?'' என்றார்.

இந்த ஜமீன்தார் என் கணவரல்லவா! அவருடைய அறிவைப் பற்றி எனக்குத் தெரியாதா என்ன? இவருக்குள்ள அதிகாரம் வரையற்றது. அப்படிப்பட்ட அதிகாரத்தை நல்ல முறையில் உபயோகிப்பவர்கள் எவ்வளவு பேர்? நியதி, சட்டம் என்ற போர்வையின் மறைவில் ஒவ்வொரு நாளும் நடக்கும் கணக்கற்ற அநியாயங்களும், அட்டூழியங்களும், விபசாரங்களும் யாருக்குத் தெரியும்? ஜமீன்தாரின் இச்சைதான் நியாயம். ஒவ்வொரு தினமும் கணக்கற்ற ஏழைகளின் ஏழ்மையும், பத்தினிப் பெண்களின் கற்பும் ஜமீன்தாரின் பேராசைக்கு இரை ஆகின்றன. ஆனால் சமூகம் கண்ணை மூடிக்கொண்டு இதை எல்லாம் பொறுத்துக்கொள்ளுகிறது. இதுதான் உலகம், இதுதான் சமூகம். அந்தோ! ஏன் தானோ உலகம் இவர்களை ஒத்த கயவர்களிடமிருந்து நன்மையை எதிர்பார்க்கிறது!

ஃபாகுன் (மாசி) மாதத்தின் மாலை வேளை. பூமியும் ஆகாயமும் ரோஜா நிறத்தில் தோய்ந்து போயிருந்தன. வஸந்த காலத்தை வரவேற்க மரங்களில் இளந்தளிர்களுடன், மலர்களும் முறுவலித்தன. அந்த வாசனையில் மயங்கிய பொன்வண்டு, மூங்கில் புதருள் பசும்பொன்னைக் கோடாய் இழுத்தவாறு பறந்து கொண்டிருந்தது. பின் வராந்தாவில் நின்றவாறு நான் இந்தத் தளிர்

இலைகளின் களியாட்டத்தை அனுபவித்துக் கொண்டிருந்தேன். அந்த வனத்துள் என்னை இழந்துவிட விரும்பினேன். கூடை கூடையாய் மாவிலைகளைப் பறித்து வந்து வீடு முழுவதும் தோரணம் கட்ட ஆசையாயிருந்தது. ஆனால் நான் என் சகஜமான, இயல்பான சுதந்திரத்தை இழந்துவிட்டிருந்தேன். அங்கு வந்ததிலிருந்து நான் வாசற்படியை தாண்டினவளல்ல. யாராவது என்னைப் பார்த்து விட்டு எதையாவது கேட்டு விடுவார்களோ என்ற பயம் என் காலைக் கட்டிப்போட்டது. கிராமத்தில் என் காரணமாய் நடக்கும் பூசலும், சண்டையும் எனக்குத் தெரியாமலில்லை. வீட்டிலிருந்தவாறே என்னால் அதை அனுபவிக்க முடிந்தது. கிராமத்தார் எல்லோரும் என் கவலைதான் மேலோங்கி நின்றது போலும். என்னை எதிர்ப்பதில் எல்லோருக்கும் ஒன்று கூடிவிட்டனர். சமூகப் பாவியைப் போல், யாருடைய குரல் கேட்டாலும், நான் ஓடி ஒளிந்து கொண்டேன். ஆனால் இந்த நாத் அண்ணாவே அலாதி தான். வெட்கத்தையும் மனக்கிலேசங்களையும் தன் பாதையிலிருந்து அகற்றியவாறு அவர் புயல் காற்றைப்போல் சுவாதீனமாய் உலாவி வந்தார்! வேடிக்கைதான்!

கொஞ்சம் பொறுத்து சயிதா வந்தான். என்னுடன் ஒன்றும் பேசாமலேயே தலை குனிந்தபடி வராந்தாவில் போய் உட்கார்ந்து கொண்டான்.

''எங்கே போயிருந்தாய் இதுவரை?'' என்று கேட்டேன். ஏதோ ஆத்திரத்துடன் ''சாக'' என்றான். ஆச்சரியத்துடன் அவன் பக்கத்தில் போய் ''சொல்லேன், எங்கே போயிருந்தாய்?'' என்று திரும்பவும் கேட்டேன். ''அது தான் சொன்னேனே, சாகத்தான். மாலையில் வேறு எங்கும் இடம் கிடைக்கவில்லை சாக. அதனால் கிராமத்தில் பாகவத் பெரியவருக்கு நமஸ்காரம் செய்யப்போனேன்'' என்றான். ''ஏன், என்னாயிற்று''ஆவலுடன் கேட்டேன்.

''என்ன ஆகும்? வயிறு நிரம்ப தின்றுவிட்டு கரிநாக்கு அந்தணர்களுக்கு பொழுதுபோவதில்லை. பஜனை, சபை, என்று கூடி அமர்ந்து அவனையும் இவனையும் பற்றி வம்பு பேசுவதுதான் வேலை. இந்த அசூதி மாஸ்டர் இவ்வளவு பெரிய போக்கிரி என்று எனக்கென்ன தெரியும்? கைகளை

ஆட்டி ஆட்டிக்கொண்டு பேசினானே!'' மேலே ஒன்றும் பேசவில்லை சயிதா.

அசூதியின் பெயரைக்கேட்டு என் நெஞ்சம் அதிர்ந்தது. ''அவன் என்ன சொல்லுகிறான்?'' என்று சந்தேகத்துடன் கேட்டேன்.

''உன்னிடம் என்னத்தைச் சொல்ல? சாயங்கால சமயம் இப்படி பச்சையாய் பொய் சொல்லும்பொழுது அவனது நாக்கு துண்டுபட்டு விழாததுதான் ஆச்சரியம். ''அனாதி மிச்ராவின் பெண் சதியை அவளுடைய கணவன் வீட்டை விட்டு துரத்திவிட்டார்'' என்று சொல்லுகிறான். அவளு டைய முகத்தில் முழிக்க மாட்டாராம் அவளுடைய கணவன். அவள் ஜாதி, குலம், இழந்தவாளாம்; அதனால் அவள் கைபட்ட தண்ணீரையைக் கூடத் தொடக்கூடாதாம். ''லோகநாத் திவாரி அவளை எந்த தைரியத்தில் தன் வீட்டில் வைத்துக் கொண்டிருக்கிறான்? அவன் அவளை வீட்டிலிருந்து வெளியேற்றாவிட்டால், அவனுடன் எவ் வித சம்பந்தமும் வைத்துக் கொள்ள முடியாது. சமூக திரஸ்காரம் தான் கிட்டும்'' என்று சாடினான். நான் கல்லைப் போல் நின்று கொண்டு அக்கயவனின் பேச்சைக் கேட்டேன். ஆனால் என் பொறுமைக்கும் எல்லையில் லையா? ரத்தமும், மாமிசமும்தானே என்னையும் மனித னாக்குகின்றன? கடைசியில் பொறுக்க முடியாமல் எழுந் தேன். ''கொஞ்சம் விளக்கைக் கீழே காட்டுங்கள். முகத் தைப் பார்க்கட்டும்'' என்றவாறு இந்தத் தடியுடன் அவன் பக்கமாய் ஓடினேன். அங்கிருந்தவர்களுள் சிலர் ஓடிவந்து என்னைப்பிடித்து இழுத்துக் கொண்டு வந்து இங்கே தள்ளிவிட்டனர். இல்லை என்றால் இன்று அவனை நான் ஒரு கை பார்த்திருப்பேன்'' கோபத்தில் அவன் உடல் நடுங்கியது.

வெட்கமும் அவமானமும் என்னைப் பேசவிடவில்லை. மௌனமாய் என் அறையில் போய் படுத்துக் கொண் டேன். தலையணையில் என் முகத்தை புதைத்துக் கொண்டு மனதுள் வெதும்பினேன். ''இதைக் கேட்கவா என்னை இன்றுவரை உயிரோடு வைத்திருக்கிறாய் கட வுளே. விசாலமான உன் படைப்பில் ஒரு சொட்டு விஷம்

கூடவா இல்லை, அபலையான என்ன ஒழிக்க? அத்துடன் தீர்ந்து போயிருக்கும் நாடகம். இந்த கேடு கெட்டவளின் கூட்டுறவால், ஒரு தூய்மையான, களங்கமற்ற ஜீவனும் அனாவசியமாய் அவமானப்படவேண்டி இருந்திராது. என் களங்கத்தில் காரணமின்றி இன்னொருவரை பங்காளி ஆக்க எனக்கு என்ன அதிகாரம்? நிந்தையும், என் களங்கத்தைப் பற்றிய பேச்சும் கேட்கப் பொறுக்காமல் தான் போலும் என் பெற்றோர் முன் கூட்டியே விடை பெற்றுக் கொண்டு விட்டனர்! அக்னி சாட்சியாக, அந்தணர்களின் முன்னிலையில் கணவர் என்று ஏற்பட்ட மனிதனுடனும், எவ்வளவு முயன்றும், தொடர்பை என்னால் வைத்துக்கொள்ள முடிந்ததா? உலகத்தில் என்னைப் பற்றிக் கவலைப்பட வேறு யார்? தன் கொள்கையையும், அபிமானத்தையும் முழுக்க முழுக்கத் தியாகம் செய்து விட்டு எனக்காக இப்படி செயல்படும் இந்த நாத் அண்ணன் எனக்கு யார்?'' மேலும் யோசிக்க முடியவில்லை. நாத் அண்ணன் எனக்கு யாரா? எல்லாம், சர்வமும் அவர்தான். உலகத்தார்கள் ஆயிரம் முறை மறுத்தாலும், லட்சம் தடவை ஒப்புக் கொள்ளாவிட்டாலும் இவர் ஒருவரை மட்டும் நான் என்னுடையவர் என்று ஏற்றுக் கொண்டிருக்கிறேன். வயது வந்த பிறகு, என் அறிவு மலர்ந்த பிறகு, என் பெண்மையின் காணிக்கையை இன்றுவரை மனதுள்ளேயே அவருக்குத் தானே அர்ப்பணம் செய்து வந்திருக்கின்றேன்!

வெளியில் குரல் கேட்டது. நாத் அண்ணா சயிதாவிடம் ஏதோ கேட்டுக் கொண்டிருந்தார். சரியாய்க் காதில் விழவில்லை. அப்புறம் கைகால் அலம்பிக் கொண்டு, தானே தட்டில் உணவைப் பரிமாறி, உட்கார்ந்து சாப்பிட ஆரம்பித்தார். நான் விழுந்த இடத்திலேயே கிடந்தேன். இன்றைய சம்பவத்திற்குப் பிறகு அவர் முன் வர எனக்குத் தைரியம் இல்லை. உண்டுவிட்டு கை அலம்பிக் கொண்டு தன் அறைக்குள் போய்விட்டார். அன்று எனக்குத் தூக்கம் இல்லை. தலையைக் குடைந்தன எண்ணங்கள். மனதுள் நெருப்புத் தகிக்கும்பொழுது எப்படி தூக்கம் வரமுடியும்?

அடர்ந்த பின்தோட்டத்தின் மௌனத்தைக் கீறிக்

கொண்டு நரி இரண்டு முறை ஊளையிட்டாகி விட்டது. படுக்கையில் புரண்டு புரண்டு உடலில் சூடு ஏறிடவே, கதவைத் திறந்து கொண்டு வெளியில் இறங்கினேன். அவருடைய அறையும் திறந்து கிடந்தது. அவர் முற்றத்தில் உலாவிக் கொண்டிருந்தார். கவலையால் அவருக்கும் தூக்கம் வரவில்லைபோலும். வராந்தாவில் என்னைப் பார்த்துவிட்டு ''யார் சதியா?'' என்று கேட்டுக் கொண்டே என்னை அழைத்தார். எப்பவும் போல் என் முதுகை வருடியபடி, ''தூக்கம் வரவில்லையா'' என்று அன்புடன் கேட்டார்.

அன்பிற்காக ஏங்கி நிற்கும் பிராணியிடம் இப்படிப் பட்ட வரம்பற்ற, ஆழம் தெரியாத ஆனந்தத்தைக் கொட்டிக் கொட்டித்தானே என்னை வீணடித்தார்! இந்த எல்லையற்ற அன்பின் இன்ப மயமான மயக்கத்திலிருந்து என்னால் விடுபட முடியாததலால்தான் எனக்கு என் கணவரும், புக்ககமும் விஷயமாய்க் கசந்தன! இதை விரும்பித்தான், நான் எல்லாவித அவமானத்தையும், களங்கத்தையும் ஏற்றுக் கொண்டு பேசாமல் இங்கேயே இருக்கிறேன். '' ஆனால் இனிமேல் வேண்டாம். என் கண்முன் எனக்காக நீங்கள் அவமானப்படுவதை என்னால் மேலும் பொறுக்க முடியாது. இனிமேல் முடியாது - இது தான் முடிவு'' என்று என் மனம் ஓலமிட்டது.

முகத்தைத் திருப்பிக் கொண்டு கல்லாய் நின்றேன். பதில் சொல்ல முடியவில்லை என்னால். என் மௌனத்தைப் பார்த்துவிட்டு அவர் என்னருகில் வந்து என் தலையைத் தன் நெஞ்சுடன் அணைத்தவாறு ''இப்படி முழித்திருக்கலாமா இரவில்? வா, படுத்துக் கொள். விசிறுகிறேன். தூக்கம் வரும்'' என்றார்.

விலகி நின்றுகொண்டு, உறுதியுடன் ''நான் தூங்கப் போவதில்லை'' என்றேன். சந்திரனின் கிரணங்கள் மூங்கில் வழியே நுழைந்து வாசலில் மெல்லிய ஒளியைப் பரப்பியது. அவருடைய முகமும் அஸ்தமன சந்திரனைப் போல் வேதனையால் வெளிறி வருவது தெரிந்தது. அவரிடம் நான் காட்டிய கடுமை என் தொண்டையை அடைத்தது. ஆனால் பலவந்தமாய் என் குரல் உறுதியை

வருத்திக் கொண்டு ''நீங்கள் ஏன் இப்படி தொந்திரவு செய்கிறீர்கள்? இறக்கக் கூட கொஞ்ச நேரத் தனிமை தரக்கூடாதா எனக்கு?'' என்று நிஷ்டூரமாய்க் கேட்டேன்.

கல்வெட்டைப்போல், தலையை நிமிர்த்தாமல் அங்கேயே நின்றார். அப்புறம் மெள்ள அங்கிருந்து போக முயன்றார். மேலும் சமாளிக்க முடிவில்லை என்னால். மனிதப் பிறவி தானே நானும் - பொறுமைக்கும் அளவில்லையா? ஓடிப்போய் அவருடைய நெஞ்சில் என் முகத்தைப் புதைத்துக் கொண்டு தாரை தாரையாய் கண்ணீர் விட்டேன். குழந்தையைப் போல் என்னைத் தூக்கிப் போய் படுக்கையில் விட்டார். தன் துண்டால் என் கண்களை துடைத்துவிட்டு என் முகத்துடன் தன் முகத்தை இழைத்தவாறு, ''ஏன் அழுகிறாய்? சீ, அழக்கூடாது. இந்தச் சிறிய விஷயத்திற்காக இப்படித் தைரியம் இழந்தாயானால் எப்படி? அழாதே, நெஞ்சைக் கல்லாக்கிக் கொண்டு, மேலும் நடப்பதைப் பார்'' என்றார்.

அவருடைய உடல் என் உடலுடன் சேர்ந்து கிடந்தது. அவருடைய மூச்சின் மர்மமான வாசனை என்னுள் நுழைந்து துக்கங்களை மறக்கடித்தது. உலகத்தை மறந்தேன், சமூகத்தை மறந்தேன். ஊஞ்சலில் அமர்ந்து, ஒளியும் இருளும் சூழ்ந்த கடலைக் கடந்து கனவுலகை நோக்கி ஒழுகுவதைப் போலிருந்தது எனக்கு. அப்படியே என்னுடைய புலன்களை அவரிடம் ஒப்படைத்துவிட்டு, அவருடைய மென்மையான வெதுவெதுப்பை அனுபவித்தவாறு அசையாமல் கிடந்தேன்.

கொஞ்ச நேரம் பொறுத்து அவர் எழுந்தார். ''கொஞ்சம் தூங்கு, இரவு முடியப் போகிறது'' என்று சொல்லிக் கொண்டு மெல்லக் கதவை மூடிவிட்டுப் போய்விட்டார்.

காலையில் வெயில் நன்றாய் பரவும் முன்னேயே நான் எழுந்து பற்றுப் பாத்திரங்களைத் தேய்த்துக் கொண்டிருந்தேன். வெளியில் ''லோகநாத், லோகநாத்'' என்று யாரோ அழைத்தார்கள். பழைய மீன் தூண்டில் ஒன்றைப் பழுது பார்த்துக் கொண்டிருந்த நாத் அண்ணா, தன் அறையிலிருந்து வெளியே போனார். சிறிது நேரத்தில் பல குரல்களின் சப்தம் கேட்டது. பயத்தால் இதயம் தடா

சென்று இறங்கியது. மெள்ள கதவிடுக்கு வழியாய்ப் பார்த்தேன். வெளியில் பலர் கூடி நின்றனர். எங்கள் கிராம புரோகிதரின் மகன் பிரபாகர் மிச்ர ஆவேசத்துடன் பேசிக் கொண்டிருந்தார். ''நீ அப்படிச் செய்யாவிட்டால், லோக நாத், இதோ எல்லோர் முன்னிலையிலும் சொல்லுகிறேன் கேட்டுக் கொள் - நாங்கள் எல்லோருமாக உன்னை கிராம சமூகத்திலிருந்து விலக்கிவைக்க வேண்டி வரும். நெருப்பு, நீர், வண்ணான், அம்பட்டன் எல்லாமே நிறுத்தி விடு வோம். மேலும் உன் வீட்டில் நடக்கும் எந்தப் பூஜை, திவசம், பூணூல், கலியாணம், முதலியவைகளுக்கும் இந்தக் கிராமத்திலிருந்து மட்டுமல்ல இருபது மைல் வட்டாரத்திலிருக்கும் எந்த அந்தண கிராமத்திலிருந்தும் யாரும் வரமாட்டார்கள் உன் படியைத் தாண்டி'' என்றார்.

நாத் அண்ணா கேலியும் கோபமும் ஒலிக்க, ''இவ் வளவு தானா, இன்னமும் ஏதாவதிருக்கிறதா?'' என்று கேட்டார்.

பிரபாகர் மிச்ர தொடர்ந்து பேசினார்: ''லோகநாத், விஷயத்தை சரியாகப் புரிந்து கொள்ளாமல் இப்படி திடீரென்று ஆத்திரப்படாதே. நேற்றும் இப்படித்தான் செய்தாய். இந்தச் சின்ன விஷயத்திற்காக இவ்வளவு பெரிய அந்தண சமூகத்திலிருந்து நீ கோபத்துடன் எழுந்து போய்விட்டாய். அதற்காகக் கூட நாங்கள் உன்னை குற்றப்படுத்தப் போவதில்லை.'' சிறிது தயங்கி, பிறகு தொண்டையைக் கனைத்துக் கொண்டு மேலும் தொடர்ந் தான். ''அனாதி மிச்ராவின் மகள் உனக்கு என்ன உறவு? அவளுக்காக நீ ஏன் எங்களை விரோதித்துக் கொள்ள வேண்டும்? சகோதரர்களிடையில் ஏன் அமைதியைக் கலைக்கிறாய்? போனது போகட்டும், இப்பொழுது அவளை நீ இங்கிருந்து வெளியேற்றிவிடு. அந்தண சமூகத்திடம் மன்னிப்புக் கேட்டுக்கொண்டு, லேசான பிராயச்சித்தமும் செய்து கொள். உன் கஷ்டங்கள் எல்லாம் விலகிவிடும். கணவரே அவளைத் தள்ளிவிட்டார் என் றால் அவள் குலத்திலிருந்தும் விலக்கப்பட்டவள் ஆகி றாள். அதற்கு அர்த்தம்.......''

நாத் அண்ணா கோபத்தில் கர்ச்சித்தார். ''மேலே பேச

வேண்டாம். உடனே இங்கியிருந்து போய்விடு. அதுதான் உனக்கு நல்லது. இல்லை என்றால் போலீஸைக் கூப்பிடு வேன்''

அந்த அசூதியும் மிச்ராவின் பின் நின்றவாறு எங்கள் பக்கம் பார்த்துக் கொண்டிருந்தான். நாத் அண்ணாவின் கோபத்தைக் கண்டு, திடுக்கிட்டுத் தலையைத் தாழ்த்திக் கொண்டான். பிரபாகர் மிச்ராவும் திடுக்கிட்டு விட்டார்; ஆனால் தன் பலவீனத்தைக் காட்டிக் கொள்ளாமல் ''நீ ஏன் இப்படி அகாரணமாய்....?'' என்று ஆரம்பித்தார்.

நடுவிலேயே அவனைத் தடுத்தபடி ''போகப் போகி றாயா, இல்லை காவல்காரனைக் கூப்பிடவா?'' என்றார் நாத் அண்ணா.

அதே சமயம் அசூதியும் வெளியேறிக்கொண்டே ''வாருங்கள் மிச்ராஜி, அவனுடைய வைப்பாட்டியுடன் சுகமாய் இருக்கட்டும். நடுவில் நாம் ஏன் தடை செய்ய வேண்டும்?'' என்றான்.

பிரபாகர் மிச்ர மேலும் பேசும் முன்பு அசூதி அவரை இழுத்துக் கொண்டு வெளியேறினான். போகிற போக்கில் மிச்ராஜி தன் பூணூலைப் பிடித்தபடி சபதம் செய்தார். ''நான் ஒரு அந்தணனின் மகனானால், நான் இதைச் செய்து காண்பிப்பேன்'' என்றார்.

இதைக்கேட்டு என் மூளை மரத்துப் போய்விட்டது. கால்கள் துவண்டன. நான் விழாமல் எப்படி நிமிர்ந்து நிற்க முடிந்தது என்பது ஆச்சரியம் தான். நாத் அண்ணன் உள்ளே வந்ததும் நான் ஓடிப்போய் அவருடைய கால்க ளடியில் தலையை முட்டியவாறு விக்கி விக்கி அழுதேன். ''எனக்காக நீங்கள் ஏன் இப்படி ஆபத்தில் சிக்கிக் கொள்ள வேண்டும்? என்னை வெளியேற்றி விடுங்கள். எல்லாத் தொல்லையும் ஒழிந்து போகும். போங்கள், அவர்களைக் கூப்பிடுங்கள்....'' என்றேன்.

இரு காங்களாலும் என்னைப் பிடித்து எழுப்பி என் க்ண்களைத் துடைத்து விட்டார். முறுவலித்தபடி, ''அப்படியே செய்கிறேன். வெளியேற்றி விடுகிறேன்'' என்றார்.

வஸந்த காலம் ஆயிற்று. ஃபாகுன் மாத மலர்கள் மீது

சித்திரையின் அனல் காற்று மண்ணையும் மணலையும் வாரி இறைத்துவிட்டு, மைதானத்தின் மறு கோடியிலிருந்த புனைக் காட்டின் பந்தலை உலுக்கியபடி போயிற்று. என்னுள்ளும் இப்படிப்பட்ட கொடுங்காற்று வீசாத நாளில்லை. கலியாணத்திற்குப் பிறகு இரண்டு ஆண்டு களில் எனக்கு அமைதி கொஞ்சமாவது கிடைத்ததுண்டா? ஒரு பெண்ணிற்கு வாழ்க்கையில் கிடைக்கக் கூடிய எல்லாவித பாக்கியங்களும் எனக்கு கிட்டின. தாய்-தந்தை, அன்பு, கலியாணம், ஜமீன்தார் கணவன்! எனக்கு எதில் குறைவு? ஆனால் இதெல்லாம் கிடைத்தும் அனுப விக்கத் தான் எனக்குக் கொடுத்து வைக்கவில்லை. எல் லோருக்குமா மனம் போல் மாங்கல்யம் அமைகிறது? கணவனின் விருப்பத்திற்கும், நிலைமைக்கும் தக்கபடி மனைவி தன்னைப் பலவந்தமாய் உருவாக்கிக் கொள்வது தான் நம் தர்மம். பெண்மையின் முழுமையும் இதில் தான் என்று சொல்லப்படுகிறது. கணவன் எப்பேர்ப்பட்ட துர்த்தனாயிருந்தாலும் சரி, மனைவி அவனைக் களங்க மற்ற தேவ புருஷனாய் நினைத்து, அவனைப் பூஜிக்க வேண்டும். இதுதான் நம் சாஸ்திரங்களை உருவாக்கின ரிஷி முனிவர்களின் திடமான கட்டுப்பாடு. ஆனால் என்னால் அப்படிச் செய்ய முடிந்ததா? சமூகத்தின் திருப் திக்காக கணவனின் விருப்பத்திற்கு என்னை அர்ப்பித்துக் கொள்ளும் முன்பே, கணவனின் அன்பு என்ற மோகனக் கனவு நிரந்தரமாய்க் கலைந்து போய்விட்டது. என் வாழ்க்கையின் போக்கும் திசை திரும்பி விட்டது. அப் பொழுது ஒருவித ஆறுதலிருந்தது-இனிமேல் மனைவி யாய் நடிக்க வேண்டிய அவசியம் இல்லை என்று. ஆனால் ஒரு மாய ஆசையின் சுழலில் அகப்பட்டுக்கொண்டு என் வாழ்க்கையின் நிலையான புகலிடத்தைக் கடலில் தொலைத்துவிட்டேன். வாலிப மோகத்தின் மையலில் கட்டுண்டு. அந்த அன்பு என்னை அடுத்து வந்தும், அதை நான் அனுபவிக்க முடியாதவளாய்விட்டேன். வாழ்நா ளெல்லாம் ஒருவரை நான் என் கணவராய் மதித்து, என் மனதின் விருப்பங்களை அவரிடம் ஒப்புவித்துவிட்டு சிந்தையற்றிருக்கும் ஆசையை வைத்திருந்தேன். அவர்

மன்னை அடுத்திருந்தும்கூட, அந்த அண்மை அர்த்தமற்ற தாகிவிட்டது. கடவுள் ஏன்தானோ இந்த வாழ்க்கையை இப்படி ஒரு சிக்கலில் மாட்டி, என்னைத் தவிக்கவிட்டு விட்டார்! இது போதாதென்று, என் துரதிர்ஷ்ட வாழ்க்கை யுடன், அன்றலர்ந்த பவழமல்லியைப்போன்று களங்க மற்ற, குற்றமற்ற இன்னொரு ஜீவனையும் சிக்கவைத்து என்ன திருப்தி அடைகிறாரோ அந்தக் கடவுள்! நான் எப்போதும் இதை விரும்பவில்லையே, ஈச்வரா. இவ்வித மான நிந்தையும் அவமானமும் நிறைந்த சேற்றில் அவரை எனக்காகத் தள்ளவேண்டும் என்று நான் கனவிலும் விரும்பியதில்லையே.

அன்று காலிக் கூடையுடன் திரும்பிய சயிதா "கிராமத் தில் எல்லோரும் ஒன்று கூடிவிட்டனர். தாய்கறிக்கு இரண்டு மடங்கு விலை தருவதாய்ச் சொல்லியும் யாரும் அவைகளைத் தொடவில்லை'' என்றான்.

''இன்று சந்தை நாள் அல்லவா? அங்கிருந்து எல்லா சாமான்களையும் கொண்டு வரலாமே!'' என்று நாத் அண்ணா யோசனை சொன்னார்.

''சந்தை நாளன்றைக்குத்தான். நடுவில் இரண்டு நாட் கள் என்ன செய்வது? வீட்டில் கறிகாய் எதுவுமே இல்லையே'' என்று கவலைப்பட்டான் சயிதா.

கொஞ்ச நேரம் யோசித்துவிட்டு ''இச் சமயம் எப்படி யாவது சமாளித்துக் கொள். அப்புறம் பார்த்துக் கொள்ள லாம்'' என்றார் அவர்.

சைகையால் சயிதாவை என்னிடம் அழைத்தேன். பிறகு மெள்ள ''வயசாய்விட்டது. ஆனால் இன்னமும் அறிவு வரவில்லை உனக்கு. கறிகாய் கிடைக்காததை அவரிடம் போய்ச் சொல்லுவானேன்?'' என்றேன். ''எனக்கென்ன தெரியும்?'' என்று கலவரப்பட்டான் சயிதா. கறிகாய்க்கு என்ன ஏற்பாடு செய்வதென்று அவனுக்குச் சொல்லிவிட்டு நான் சமையலறையுள் போய்விட்டேன். கொஞ்சம் பொறுத்து வெளியில் வந்தேன். அவர் அப்படியே வராந் தாவின் தூணில் சாய்ந்தபடி அமர்ந்திருந்தார். ''இவ்வளவு நாழி ஆய்விட்டது. குளிக்க வேண்டாமா?'' என்று கேட்டேன். கனவிலிருந்து விழிப்பவர்போல் அவர் என்

னைப் பார்த்தபடி ''ஆம். கொஞ்சம் எண்ணெய் கொடு'' என்றார். எண்ணெயும், துண்டும் கொண்டு வந்து அவர் பக்கத்தில் வைத்தேன். எண்ணெய் தடவிக்கொண்ட பிறகு அவர், ''சதீ, என் அறையிலிருந்து மீன் தூண்டிலைக் கொண்டு வாயேன்'' என்றார்.

''அது எதற்கு இப்பொழுது?'' என்றேன்.

''கறிகாய் எதுவும் கிடைக்கவில்லை என்று சயிதா சொன்னாளே. ஏதாவது மீன் கீன் கிடைக்கும் பார்க்கின்றேன்'' என்றார்.

''நீங்கள் போய்க் குளியுங்கள். அதைப்பற்றி எல்லாம் கவலைப்பட வேறு மனிதர்களும் உள்ளனர்'' என்றேன்.

''அப்படியா? என்னைப்பற்றிக் கவலைப்பட யாருமில்லை என்று நினைத்தேன்'' என்றார்.

துண்டை அவரிடம் எறிந்தபடி ''முதலில் போய்க் குளியுங்கள். ரொம்ப நேரமாய்விட்டது'' என்றேன். அவர் போய்விட்டார்.

சாயங்காலம் நாத் அண்ணா முற்றத்தில் காலை அலம்பிக் கொண்டிருந்தார். நான் அவர் பக்கத்தில்போய் நின்றேன். ''என்ன விஷயம்? இவ்வேளைக்கு கறிகாய் இல்லையா'' என்று முறுவலித்தபடி கேட்டார்.

''அதில்லை'' என்றேன்.

''பின் என்னவாம்?'' என்றார்.

மனதை தைரியப்படுத்திக்கொண்டு ''சயிதாவின் துணையோடு கொஞ்சநேரம் வெளியில் போய்வர விரும்புகிறேன்'' என்றேன். முறுவல் மறைந்தது. கொஞ்சம் யோசித்து விட்டு ''தெருவில் நடந்தே போவாயா தனியாய்?'' என்றார். மனதுள் சிரித்துக் கொண்டேன். கணவன் வீட்டில் புகல் கிடைக்காததனால்தானே நான் இப்படி வெளியில் அல்லாடுகிறேன்? எனக்கு என்ன வெட்கம் வேண்டியிருக்கிறது வெளியில் போய்வர? ''இருளில் யாருக்கும் முகம் தெரியாது'' என்றேன்.

''அப்படியானால் சரி, போய்வா. ஆனால் சீக்கிரம் வந்துவிடு. நான் காத்துக் கொண்டிருப்பேன்'' என்றார். நல்லது கெட்டது யோசிக்காமல் சயிதாவைக் கூட்டிக் கொண்டு புறப்பட்டேன். ''எங்கே போக வேண்டும்,

மகளே?'' என்று சயிதா கேட்டான்.

''பிரபாகர் மிச்ராவின் வீட்டிற்கு'' என்றேன்.

திடுக்கிட்டுப் போனான். ''பிரபாகர் மிச்ராவின் வீட்டிற்கா? அவன் கிராம ஜனங்கள் எல்லோரையும் ஒன்று கூட்டி, நம்மைத் தனியாய் பிரித்துவிட்டானே, உனக்குத் தெரியாது?'' என்றான்.

''தெரியும், நட'' என்றேன்.

மனதுள் கோப முணமுணப்புடன் முன்னாலே நடந்தான். முழு தூரம் தெரியாத அந்த இருட்டிலும் என்னை யாரும் கண்டு கொள்ளக் கூடாதே என்று தெரு ஓரமாகவே நடந்தேன். பிரபாகர் மிச்ராவின் வீட்டின் மதிலண்டை சயிதாவை நிறுத்திவிட்டு நான் உள்ளே சென்றேன். குழந்தைப் பருவத்திலிருந்தே இந்த வீடு எனக்கு மிகவும் பரிச்சயமானது. எவ்வளவோ தரம் என்னை இங்குவிட்டுப் போயிருக்கிறார் என் தந்தை. மிச்ராவின் மனைவி என் சமவயதினள் தான். குழந்தைப் பருவத்தில் அவளுடன் 'அசோகா'★ வைத்திருக்கிறேன். அந்தத் தைரியத்தில் தான் இன்று ஏதாவது வழி கிடைக்குமா என்று பார்க்க வந்தேன்.

வராந்தாவில் அசோகா நின்றாள். ''யார்?'' என்று என்னைப் பார்த்துக் கேட்டாள்.

''நான் தான் சதீ'' என்றேன். பக்கத்தில் வந்து என்னைத் தெரியாதவள்போல் பார்த்தாள். பிறகு ''தூர நில், தூர நில். இது கடவுளின் இருப்பிடம், தீட்டுப் பட்டுவிடும்'' என்றாள்.

மனதில் இருந்த கொஞ்சம் நம்பிக்கையும் தகர்ந்து போயிற்று. என் நிழல் படுவதே பாவம் என்று எண்ணும் படி நான் அவ்வளவு பாவியாய், மாசுள்ளவளாய் விட்டேனா? ஆனால் கடவுளின் முன் அவள் எந்த விதத்தில் என்னைவிட மேலானவள்? குருட்டு சமூகத்தின் உபதே

★ அசோகாஷ்டமி அன்று அசோக மலரின் அரும்பை இருபெண்கள் ஒருவருக்கொருவர் ஊட்டி, அவர்களுள் நேரக்கூடிய சோகத்தை குறைக்க ஏற்படுத்திக் கொள்ளும் உறவுக்கு ''அசோகா'' என்று பெயர். இதற்கப்புறம் இருவரும் ஒருவரை ஒருவர் 'அசோகா' என்று அழைத்துக் கொள்ளுவார்கள். பெயர் சொல்லமாட்டார்கள்.

சத்தை அனுசரித்து, கணவனின் காமத்திற்கு என் பெண் மையைப் பலி கொடுக்க நான் விரும்பவில்லை; அதனா லேயே சிறுமை ஒட்டிக்கொண்டுவிட்டதா? கடவுளின் படைப்பில் ஒன்றுமே எனக்குப் பிரயோசனமில்லையா? எப்படியோ மனதை சமாளித்தவாறு ''உன்னிடம் ஒரு விஷயம் கேட்க வந்தேன்'' என்றேன்.

''என்ன விஷயம்?'' என்றாள்.

''உன் 'அவரை' தயவுசெய்து இங்கு வரச்சொல்'' என்றேன்.

கொஞ்சம் தயங்கிவிட்டுப் பிறகு உள்ளே சென்றாள். பிறகு முற்றத்தில் மிச்ராவின் குரல் கேட்டது. அவருடைய மனைவி என்னிடம் வந்து அவருடைய வருகையை அறிவித்தாள்.

எல்லாவற்றையும் யோசித்துக்கொண்டு பேசினேன். ''நாத் அண்ணாவை ஏன் சமூகத்திலிருந்து விலக்கிவிட்ட னர் என்று கேள். என்னால் தானே?'' பிரபாகர் மிச்ரா சுவரில் சாய்ந்தபடி நின்றார். என் மெல்லிய குரலும் அவருக்கு எட்டியிருக்கும். கொஞ்ச நேரம் யாரும் ஒன்றும் பேசவில்லை. அந்த மௌனமே எனக்குப் பதில் அளித்து விட்டது. ''நான் அவருடைய வீட்டிலிருந்து வெளியேறி விட்டால் அவரைப் பழையபடி இனத்துடன் சேர்த்துக் கொள்வீர்களா, இல்லையா?'' திரும்பக் கேட்டேன். ''கட்டாயமாய் சேர்த்துக் கொள்ளப்படுவார். அவரிடம் எங்களுக்கு என்ன விரோதம்? ஆனால்.. ஆனால்.. அன்று எல்லோர் முன்பும் வாயில் வந்தபடி என்னைப் பேசிவிட் டான்.....''

''அவருக்காக நான் மன்னிப்புக் கேட்க வந்திருக்கின் றேன்'' என்றேன்.

''இந்த ஆபத்து விலகிவிட்டால், அந்த விஷயமும் தீர்மானமாகும்'' என்றார்.

இந்த 'ஆபத்து' நான்தான்:! ஒரு வருடம் முன்பு கூட இங்கு எனக்கு அன்பும் ஆதரவும் இருந்தது. இன்று அதே இடத்தில் நான் எல்லோர் மனதிலும் முள்ளாய்க் குத்தி னேன். எப்படியாவது என்னை இங்கிருந்து ஒழித்துவிட் டால் எல்லோருக்கும் சந்தோஷமாயிருக்கும்.

வெளியில் வந்துவிட்டேன். சயிதா புறப்படத் தயாராய்

எழுந்து நின்றான். எனக்கு வழி காட்டியவாறு முன்னே நடந்தான். இந்த மனிதர்கள் அன்பையும், ஆதரவையும் சமூகத்தின் தராசில் தூக்கிப் பார்ப்பவர்கள். இங்கு இதயத்திற்கு மதிப்பில்லை. அசோகாவிடம் விடைபெற்றுக் கொள்ளாமலேயே வந்து விட்டேன். அதுதான் சரி என்று எனக்குத் தோன்றியது.

உண்மையிலேயே அவர் முன் தாழ்வாரத்தில் என்னை எதிர்பார்த்து உட்கார்ந்திருந்தார். 'எங்கே போயிருந்தாய்' என்று அவர் கேட்டுவிடக் கூடாதே என்று வெட்கம் மேலிட, நேராக உள்ளே போய்விட்டேன்.

இரவு உணவிற்குப் பிறகு படுத்துக்கொள்ளப் போனார். உயிரற்றவளைப்போல் நான் என் அறையிலேயே இருந்தேன். அன்று எனக்குத் தூக்கம் வராது. தனிமையில், கவலைகள் ஒன்று கூடி என்னைச் சுற்றி வளைத்துப்பிடித்துக் கொண்டன. முக்கியமாய் நாத் அண்ணனைப் பற்றிய கவலை மேலோங்கி நின்றது. எவ்வித பாத்தியமுமின்றி நான் அவருடைய வீட்டிலிருந்துகொண்டு, ஒவ்வொரு விஷயத்திலும் அவருக்குத் தொல்லையாய், அவரை அழித்து கொண்டிருக்கிறேனே! அவருடைய கௌரவத்தை, மானத்தை நான் இப்படித் தெரிந்துகொண்டே நாசம் செய்வது நியாயமா? மாஞ்சோலையில் நரிகள் ஊளையிட்டன. மெள்ள மெள்ள படுக்கையிலிருந்து எழுந்தேன். அவருடைய பழைய நோட் புத்தகத்திலிருந்து இரு தாள்களைக் கிழித்தெடுத்துக் கொண்டு எழுத உட்கார்ந்தேன் —

''வீணாய்விட்ட வாழ்க்கையின் கடைசி புகலிடத்தின் முகப்பில் நின்றவாறு உங்களுக்கு எழுதுகிறேன்.. இதை நீங்கள் படிக்கும்பொழுது நான் பக்கத்திலிருக்க மாட்டேன். ஆனாலும் இந்த என் கைப்பட எழுதும் கடிதம் என் இறுதியான பிரிவுக்கு சாட்சியாகும். இதை நீங்கள் கவனமாய்ப் படிப்பீர்கள் இல்லையா? அதற்குள் நான் எவ்வளவு தூரம் போய்விட்டிருப்பேனோ யாருக்குத் தெரியும்? வாழ்க்கையின் வரம்பற்ற தோல்வியில் அது மட்டுமே எனக்கு மகிழ்ச்சியைத் தருகிறது. வாழ்நாளெல்லம் என் ஆனந்தமான கனவுகளைத் தேடி அலைந்து வழி

தவறிப்போய், உங்கள் அமைதியையும் அனாவசியமாய்க் கெடுத்து விட்டேன். எனக்காக நீங்கள் எவ்வளவு அவமானத்திற்கு உட்பட்டு விட்டீர்கள்! இன்று அந்தப் பாவத்திற்கு பிராயசித்தம் செய்ய நான் உங்களை விட்டு விட்டுப் போகிறேன். ஆனால் எங்கே? ... நிச்சயமில்லை, நிச்சயம் செய்ய விரும்பவில்லை, அவசியமுமில்லை. இதுமட்டும் நிச்சயம். நான் போய்த்தான் ஆக வேண்டும். நாலு பக்கமும் அமைதி — இருளில் வழி தெரியவில்லை. என் எதிரிலிருக்கும் இந்தச் சிறு விளக்கு மட்டுமே என் கதையைக் கேட்டுக் கொண்டிருக்கிறது. தூரத்து ஆகாயத்தில் ஒரு பறவை சோகமயமான குரலை எழுப்பி இரவின் மௌனத்தில் பரிதாபகரமாய் ஒலிக்கிறது. இரவின் மௌனம் பயங்கரமாயிருக்கிறது. இப்படிப்பட்ட அநேக இரவுகளையும், நீண்ட பகல்களையும் உங்கள் நினைவிலேயே நான் கழித்திருக்கிறேன். என் வாழ்க்கையின் இனிமையான அன்புக் களஞ்சியமே! பல காலை மாலைகளை உன் அன்பு நினைவுகளை பொன்மயமான வலையாய்ப் பின்னுவதில் கழித்து விட்டேன். இந்த அர்த்தமற்ற வாழ்வின் சூன்யத்தில் இதுமட்டுமே எனக்கு மகிழ்ச்சி அளித்திருக்கிறது. நான் இங்கு உட்கார்ந்து எழுதிக் கொண்டிருக்கிறேன். சமையலறையிலிருந்து பூனை வந்து என்னைப் பார்த்தவாறு நின்றது. பிறகு எதையோ நினைத்துக் கொண்டு வராந்தாவின் ஓரத்தில் போய்ப் படுத்துக் கொண்டது. நாளை விடியும்பொழுது அது உன்னைப் பார்க்கும், மாலையிலும் பார்க்கும். அது உயிருடன் இருக்கும் வரை உன்னைத் தினம் பார்க்கும். நான் போகிறேன். வேறு வழியில்லை. எனக்கு எவரைப் பற்றியும் குறை இல்லை — கோபமும் இல்லை. நீ அந்த அறையில் எவ்வளவு நிம்மதியாய் உறங்குகிறாய்! ஆழ்ந்த உறக்கத்தின் மூச்சு லேசாய்க் கேட்கிறது. உன் கதவு காற்றில் தடாரென்று அடித்துக் கொண்டது. உன் அறையுள் வந்து மெள்ள உன் உடலைத் தடவிப் போயிருக்கும் அந்தக் காற்று, எனக்கும் உன்னை மெள்ள நெருங்கி, உன் உடலைத் தொட்டு, வியர்வையைத் துடைத்துவிட மனம் துருதுருக்கிறது. நான் உன்னை விரும்பினேன். ஆனால் உரிமையை விழைய

வில்லை. நீ எப்பவும் என் பக்கத்தில் இருந்தும், கட்டாயம் நீ எனக்குக் கிட்டுவாய் என்று ஆசை இன்று வரையிலும் என்னுள் இருந்தது. இப்பொழுது என் கடைசிச் செல்வமான அந்த நம்பிக்கையும் மடிந்துவிட்டது. உன் அறையுள் இருட்டாயிருக்கிறது. போகும்பொழுது கடைசியாய் உன் முகத்தையும் பார்க்க முடியாது என்னால். இன்னும் கொஞ்ச நேரத்தில் பொழுது புலர்ந்து விடும். உனக்கு எல்லாம் தெளிவாய்த் தெரியும். ஆனால் என்னால் பார்க்க முடியாது. இருண்ட வாழ்நாளெல்லாம் உன் சிரித்த முகத்தை நினைத்துக் கொண்டு தைரியமாயிருக்க வேண்டும். போகும்பொழுது உன்னிடம் விடை பெற எனக்கு ரொம்ப ஆசையாய் இருக்கிறது. ஆனால், அப்புறம் நீ என்னைப் போகவிடுவாயா என்ன? வரம்பற்ற ஆசைகளுக்காக என்னைப் பிராயசித்தம் செய்து கொள்ள விடுவாயா?

என்னைத் தேடவேண்டாம். இந்த அதிர்ஷ்டம் கெட்டவளைத் தேடிக் கொண்டு அலையாதீர்கள். யாரும் உன்னைத் தடுப்பவர்கள் இல்லை. இன்றிலிருந்து உனக்கு சுதந்திரம் தான். என்றும் பார்த்துப் பழகிய இந்த வீடு, வீட்டின் ஒவ்வொரு செங்கல், முற்றத்து தூசியும், பொடியும், எல்லாவற்றிடமிருந்தும் நான் விடை பெற்றுக் கொண்டு நிரந்தரமாய்ப் ,போகிறேன். காலை நட்சத்திரம் உதித்து விட்டது. அதிக நேரமில்லை பொழுது புலர, கொஞ்சம் பொறுத்து இருளிலும் வழி தெரியும். ஆனால் அந்த இருளில், இருளையும்விடவும் கேடுகெட்ட என் உடல் தொலைந்து போகும். போகிறேன். சதீ என்பளை மறந்து விடு. வீணாய் மனதை அலட்டிக் கொள்ள வேண்டாம், என் செல்வமே!''

இருளில் மெள்ள என் அறையிலிருந்து வெளிப்பட்டு நாலு பக்கமும் பார்த்தேன். எங்கும் யாரும் தென்பட வில்லை. காலடி கேளாமல் மெள்ள நாத் அண்ணாவின் அறையின் கதவண்டை போய் நின்றேன். எப்போதும் போல் கதவு வெறுமனே சாத்தியிருந்தது. மூச்சைப் பிடித்துக் கொண்டு உள்பக்கம் பார்த்தேன். இருளில் ஒன்றும் தெரியவில்லை. நல்லதாயிற்று. எவ்வளவோ

முயன்று மனதைக் கட்டுப்படுத்திக் கொண்டு அவருடைய நன்மைக்காக இன்று வெளியேறுகிறேன். இச்சமயம் அவருடைய முகத்தைப் பார்த்து விட்டேனானால் ஒரு வேளை தைரியத்தை இழந்து விடலாம். அப்புறம் போவது கஷ்டம்.

அங்கேயே படியில் தலையைத் தொட்டு நமஸ்கரித்தேன். நான் சேர்த்து வைத்திருந்த தைரியமும், திடமும் ஒரே நொடியில் தகர்ந்து போயின. அழுகையைத் தலைப்பில் அமுக்கியபடி அங்கிருந்து ஓடினேன். முற்றத்துக் கதவைத் திறந்து கொண்டு வெளியில் வந்து நின்றேன்.

வெள்ளி நட்சத்திரங்கள் பதிந்த பரந்த சுவர்க்கத்தினடியில் நான் மட்டும் தனியாகி விட்டேன். என்னையே மாய்த்துக் கொள்ளப் போகும்பொழுது கூட 'அந்தோ' என்று கூற யாருமில்லை. வாழ்க்கையில் எனக்குக் கிட்டாத பொருள் என்ன? — ஆனால் என் விதி எதையும் அனுபவிக்க விடவில்லை. கடைசிப்புகலாக அவருடைய காலடியைத் தேடி வந்தேன். ஆனால் அதையும் பிடுங்கிக் கொண்டுவிட்டாரே கடவுள்!

வெளியில் தாழ்வாரத்தின் சுவரில் தலையைச் சாய்த்தபடி ''ஒரு பயங்காமான எரி நட்சத்திரத்தைப் போலத்தான் என் வாழ்க்கையும். என்னை அடுத்தவரை எல்லாம் அதம் செய்யாமல் விடவில்லை'' என்று பரிதவித்தேன்.

இருளில் அகன்ற சாம்ராஜ்யத்தில் நரியின் ஊளை கேட்டது. இதோ புலர ஆரம்பித்துவிட்டது. திடுக்கிட்டு தாழ்வாரத்தை விட்டு இறங்கினேன். நட்சத்திர வெளிச்சத்தில் வீட்டை கடைசி முறையாய்ப் பார்த்துவிட்டு, கண்களுக்குப் புலனான வழியில் வேகமாய் நடந்தேன். ஏதோ மந்திரத்தால் மயங்கியவை போல் இருபுறமும் மரங்களும் ஆடாமல் நின்றன; நடுநடுவே மின்மினிப் பூச்சி மட்டும் பளிச்சிட்டது. ஒரே திசையில் நடந்தேன். இந்த வழிக்கு முடிவேயில்லையோ? கொஞ்சம் வெளுத்ததும் கிராமம் தெரிந்தது. நடந்து நடந்து திடீரென்று களைத்துப்போய் ஓரிடத்தில் நின்றேன். என் முன் ஆற்று வெள்ளம் பரவிக் கிடந்தது......

* * *
* * *

